

# கம்பன்

இலக்கிய இலக்கணத் திங்களிதழ்

திருவள்ளுவர் ஆண்டு 2035-கன்னி-23 (09/10/2004) இதழ்-46

ஆசிரியர் : கவிஞர் கி. பாரதிதாசன்





கம்பன் அடிப்பொடி சா. கணேசன்

06/06/1908 - 28/07/1982

கம்பன் புகழ்பாடிக் கன்னித் தமிழ்நாடி
நம்பன் இராமனையே நாளும் தொழுதேத்தி
உம்பர் உலகத்தும் உற்றதமிழ் போற்றிவரும்
கம்பன் அடிப்பொடி காண். - கி. பா



கம்பன் விழா மலர் - 2004, பிரான்சு

# கம்பன்

இலக்கண இலக்கியத் திங்களிதழ்

ஆண்டு - 4 திங்கள் - 46




'யாரொடும் பகை கொள்ளலன் என்ற பின்
போர் ஒடுங்கும், புகழ் ஒடுங்காது'
- கம்பன்


ஆசிரியர்
கவிஞர் கி. பாரதிதாசன்

புரவலர்
நந்தா தாமோதரன்

அச்சிட்டோர்
அகத்தியர் அச்சகம்
புதுவை - 13. தொ.பேசி : 2242396

கணிப்பொறி
பெ. மணிவண்ணன், சுதாகர்

வெளியீடு :
கம்பன் கழகம், பிரான்சு
பிரஞ்சு தமிழ் ஆய்வுக் கழகம்.



தொடர்புகளுக்கு :
Pour Correspondance

Poète K. BHARATHIDASAN
6 RUE PAUL LANGEVIN
95140 - GARGES LES GONESSE
FRANCE
Tèl : 0033 (0)1 39 86 86 53

E-mail :
bharathidasan @ wanadoo. fr




# கடவுள் வாழ்த்து

உலகம் யாவையும் தாம் உளவாக்கலும்
நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகிலா விளையாட்டு உடையார் அவர்
தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே
- கம்பன்




கலியாண்டு 3986, சகாப்தம் 807 விசுவாசு - பங்குனி 4 ஆம் நாள், (கி. பி. 886 பிப்ரவரி) புதன்கிழமை, துதியை திதி, அத்த நட்சத்திரம் கூடிய நன்னாளில் வெண்ணெய் நல்லூரில் இராமாயணத்தை அரங்கேற்றிக் கம்பன் கவிச் சக்கரவர்த்தி ஆனான்.

# கம்பன் கவியே கவி!

எத்திக்கும் போற்றும் இராமன் திருக்கதையைத்
தித்திக்கும் செந்தமிழில் செய்தளித்து - நித்தமும்
அம்புவியில் மக்கள் அமுதம் அருந்தவைத்த
கம்பன் கவியே கவி.

உள்ளம் மகிழ உரைநா அமுதூறக்
கொள்ளும் இருகாதும் குளிரவே - தெள்ளரிய
செந்தமிழ்க் கம்பத் திருநாடான் செய்நூலுக்கு
எந்நூ லாகும் இணை.

பாரில் பெயரோங்கும் பன்மொழிக்கும் நாணாது
நேரில் நிமிர்ந்து தமிழ்நிற்பதுதான் - சீருயர்ந்த
ஏறுபுகழ்க் கம்பன் இராமகதை யால்வந்த
வீறுகொண் டென்று விளம்பு.

- கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை.

# வணங்குகின்றேன்!





கம்பன் போலொரு கவிஞன் இனியும்
நம்முன் தோன்றுதல் நடக்கவும் கூடுமோ?
கற்பனைக் கெட்டாக் காவியம் படைத்து
நற்றமிழ்த் தேனை நாமுண்ண வைத்தான்!
சந்தப் பாவின் சொந்தக் காரனைச்
சிந்தையுள் நிறுத்திச் சிறப்புகள் பெறவே
பிரான்சு நாடும் பெருவிழா கண்ட(து)
அருமைத் தமிழரின் பெருமையே யாகும்!

இந்த இதழோ, கம்பன் விழாவின்
செந்தமிழ்ச் சீரைச் செப்பும் நன்றே!
“கம்பன் இதழ்”பால் காதல் கொண்ட
செம்பொன் மனத்தவர் சீரடி தொழுவேன்!
திருக்குறள் போலவும் திருப்புகழ் போலவும்
உருப்படும் ஒழுக்க நெறிகளை யுணர்த்தும்
காப்பிய மாகும் கம்பன் நூலே!
மாப்புகழ் பெற்ற மன்னவன் பாக்களோ
கரும்பாய் இனிக்கும்! கற்றவர், மற்றவர்
எறும்பாய் இருந்தே இவைகளைச் சுவைப்பார்!

நல்லவர் பலரும் நன்கொடை யளித்தனர்!
வல்லவர் சிலரும் வலிய வுழைத்தனர்!
பொறுப்புடன் மற்றவர் கழகம் போற்ற
உறுப்பின ராகி உவகை கொண்டனர்!
விருப்ப முடனே விளம்பரம் கொடுத்தனர்!
கருத்துப் பலவும் கனிவாய் மொழிந்தனர்!
கருப்பொ ருளாகக் கம்பனை நிறுத்திச்
சிறப்புரை, வாழ்த்துரை, சிறந்த கருத்துரை
வழங்கினர் அறிஞர்! அனைவர்க்கும் நன்றி!
பழகு தமிழைப் பருகவந் தோரே

உங்களைப் போற்றுதல் உற்ற கடனெனச்
சங்கத் தமிழால் சாற்றுவன் வணக்கம்!
ஆண்டு தோறும் அமையும் இவ்விழா
ஆண்ட தமிழின் அருமை பகருமே!
“போகும் இடமெலாம் பூந்தமிழ் அன்னாய்
வாகை சூடி வாழ்ந்திடல் வேண்டும்”
என்ற எண்ணம் இருக்கும் நாள்வரை
நன்றாம் நம்மொழி நாளும் ஓங்குமே!

அன்பன்

**கி.பாரதிதாசன்**

# கம்பன் கழகப் புரவலர்கள்



திருமிகு. சுகுமாற முருகையன்



திருமிகு. நந்தா கண்ணன்



திருமிகு. கலியபெருமாள்

# கம்பன் கழகச் செயற்குழுவினர்



கவிஞர் கி. பாரதிதாசன்
தலைவர்



திருமிகு. சுந்தர இரத்தின சபாபதி
துணைத்தலைவர்



திருமிகு. கு. கனகராசா
துணைத்தலைவர்



திருமிகு. தனசேகரன்
துணைத்தலைவர்



திருமிகு. அலன் ஆனந்தன்
பொதுச்செயலாளர்



திருமிகு. கோவிந்தசாமி செயராமன்
செயலாளர்



பேராசிரியர். லெபோ பெஞ்சமின்
பொருளாளர்



மருத்துவர் த. சிவப்பிரகாசம்
துணைப் பொருளாளர்



திருமதி. சிமோன் இராசேசுவரி
செயற்குழு உறுப்பினர்



திருமிகு ந. சிவசித்தானந்த குமரன்
செயற்குழு உறுப்பினர்



கவிஞர் க. நாகராசன்
செயற்குழு உறுப்பினர்

# 2004 ஆம் ஆண்டின் சிறப்பு உறுப்பினர் (இணையர்)





திரு திருமதி. சிவப்பிரகாசம் - பிரகதீசுவரி





திரு திருமதி. சுந்தர இரத்தின சபாபதி - சுசிலாபாய்





திரு திருமதி. லெபோ பெஞ்சமின் - லூசியா




திரு திருமதி கு. கனகராசா - விசயகுமாரி




திரு திருமதி. சிமோன் - இராசேசுவரி




திரு திருமதி கி. பாரதிதாசன் - குணசுந்தரி

# 2004 ஆம் ஆண்டின் சிறப்பு உறுப்பினர்கள்



திருமிகு. உத்திரப்பிள்ளை



திருமிகு. தனசேகரன்



கவிஞர் பாரிசு பார்த்தசாரதி



திருமிகு. மோரோ நடராசன்



திருமிகு. சிவசித்தானந்த குமரன்



திருமிகு. அலன் ஆனந்தன்



# இன்னுரை

அலன் ஆனந்தன், பொதுச் செயலாளர், கம்பன் கழகம், பிரான்சு.

உலக மொழிகளில் உள்ள சொல்லாட்சியில் மிக்க உயர்வுள்ளதாகக் கருதப்படும் கன்னித் தமிழில் காவியங் களுக்கும், இலக்கியப் படைப்புகளுக்கும் குறைவேயில்லை. கவிதை நயத்தோடு இராம காவியத்தைப் படைத்த தெய்வமாக்கவி கம்பனின் புகழை உலகெங்கும் பரப்பும் வகையில் கம்பன் அடிப்பொடி சா. கணேசன் அவர்களால் காரைக்குடியில் "கம்பன் கழகம்" தோன்றியது. அவரின் ஆலோசனையின் பேராலும், அரவணைப்பாலும் எனது ஆசான் கம்பவாணர் அ. அருணகிரி அவர்களால் புதுச்சேரியில் 'கம்பன் கழகம்' தோன்றியது இக்கழகமானது ஒப்புயர்வின்றித் தமிழகத்திற்கு முன்னோடியாக விளங்கி வருகின்றது. புதுச்சேரியில் கம்பன் கழகம் நடத்தும் மூன்று நாள் விழாவில் பங்குபெறுவதைப் புலவர்களும், தமிழறிஞர்களும் பெரும் பேறுகளாக எண்ணிக் கலந்து கொள்ளுகின்றனர். பார்வை யாளர்கள், தமிழகத்தைவிட இங்குக் கேள்வி ஞானம் மிக்கவர்களாய் இருப்பது அனைவரும் அறிந்ததே.

"அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல்" - குறள்.

ஆரம்ப காலங்களில் கம்பன் கழகத்தின் துவக்க விழாக்களில் எனது பங்கு ஒரளவே இருந்து வந்தது. குழுக்கள் அமைப்பு முறையில் பணியாற்றும் பண்பை அங்கேதான் கற்றுக் கொண்டேன்.

பார்வையாளர்களுக்கு இருக்கைகள் ஒழுங்கு செய்தல்; நிகழ்வின்பொது பேராளர்களுக்குத் தேவையான உபசரிப்புகளைச் செய்தல்; வெளியூரிலிருந்து வரும் பேராளர்களுக்குத் தங்குமிடத்தில் பணி செய்தல் இன்னபிற செயல்பாடுகளையும் கழகத்தின் விழா என்று எண்ணாமல் குடும்ப விழாவாகவே மூன்று தினங்களும் செயல்பட்டு வந்தோம். புலவர் அ. அருணகிரியும், ஆசிரியர் கி. கலியாணசுந்தரமும் சேர்ந்த அணியில் யான் பணிபுரிந்ததை என் வாழ்க்கையில் கிடைத்த பிறவிப் பயனாகவே எண்ணுகிறேன். மே மாதத்தில் இரண்டாம் வாரம் எப்போது வரும் என்றே ஏங்கி வ்ந்த காலம் அப்போது இருந்தது.

ஏனெனில் தமிழறிஞர்களையும், மேதைகளையும் நேரில் காணவும், உரையாடவும், ஊழியம் செய்யவும் வாய்ப்பு அமைந்த காலமது;

"செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என்" (குறள்)

காலச் சுழலில் 1984-ஆம் ஆண்டு முதல் பிரான்சு நாட்டின் வாழ்க்கைச் சூழலில் நுழைந்த காரணத்தால் கடந்த காலத்தில் புதுவையின் செயல்பாடு போல மொழிக்காகச் செயல் பட இயலவில்லை. கடந்த காலங்களில், புதுச்சேரி கம்பன் கழகத்தின் விழாக்கள் யாவும் எனது வாழ்வின் வசந்த காலமாகும். வாழ்க்கைப் பயணம் பிரான்சில் நகர்ந்து சென்ற வேளையில் 2001-ஆம் ஆண்டில் "கம்பன்" இதழின் ஆசிரியர் கவிஞர் கி. பாரதிதாசன் நட்பு கிடைத்தது; அவர் கம்பன் இதழோடு "கம்பன் கழக" உருவாக்கத்தையும் தந்தார். இவரது முயற்சியைத் திருவினையாக்க என்னையும் கம்பன் கழகத்தில் இணைத்துக் கொண்டேன்.

"பெருமை உடையவர் ஆற்றுவார் ஆற்றின்
அருமை உடைய செயல்". - குறள்

நமது இலக்கியச் சுவையில் கடல் கடந்து வாழும் தமிழர்கள் இன்புற வேண்டியும், தமிழின் வளர்ச்சிக்கும் எங்களால் இயன்ற முயற்சிகளைச் செயலாக்கம் செய்வதும் "கம்பன் புகழ்" போற்றுவதும் முக்கிய குறிக்கோளாகக் கொண்டுள்ளோம்.

"அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்த கொளல்". - குறள்.

இந்தக் "கம்பன் கழகம்" ஐரோப்பிய நாட்டினில் மூலவேராக இருந்து செயல்படுவதற்கு எங்கள் செயற்குழுவினர் எல்லா ஏற்பாடுகளையும் செய்து வருகின்றோம். தாய்க் கழகமான புதுவைக் கம்பன் கழகத்தின் கம்பக் காவலர் மூத்த வழக்கறிஞர் தி. முருகேசனாரும் அவரோடு இணைந்த முன்னாள் தலைமை ஆசிரியர் கி. கலியாணசுந்தரனாரும் எங்களுக்கு வழிகாட்டியாக இருந்திடவே பலமுறை ஐரோப்பியப் பயணம் மேற்கொண்டு நல்ல பல கருத்துக்களைக் கூறியுள்ளனர். கழக வளர்ச்சிக்கு வளமிட்டுள்ளனர்.

"அருமை உடைத்தென்று அசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்." குறள்.

பிரான்சு, கம்பன் கழகத்தார் அனைவரும் இணைந்து நின்று கம்பன் புகழையும், கன்னித் தமிழின் புகழையும், உலகு போற்ற எல்லா முயற்சிகளையும் செயல்வடிவம் செய்வோம்.

வாழ்க தமிழ்! வளர்க கம்பன் புகழ்!

# 2004 ஆம் ஆண்டின் உறுப்பினர் (இணையர்)




திரு திருமதி ப. சிவஞானசுப்பிரமணியன் - செயலட்சுமி




திரு திருமதி மணிவண்ணன் - வாசுதேவி




திரு திருமதி தியாகு - குழலம்மை





திரு திருமதி. இராதாகிருட்டினன் - சுலோசனா





திரு திருமதி. செல்லப்பன் - வேண்டாவதி





திரு திருமதி. பாசுகரன் - இராசேசுவரி





திரு திருமதி ர. மோரோ தமிழ்வாணன் - தமிழ்மலர்





திரு திருமதி பு. கார்த்திகேயன் - தமிழ்ம[illegible]ள்





திரு திருமதி. சிவலிங்க சிவபாலன் - உதயராணி





திரு திருமதி புருசோத்தமன் - சாந்தி





திரு திருமதி வேணுகோபால் - ஆதிலட்சுமி

## இன்தமிழே!

கம்பன் கவியுள் கட்டுண்டு
கன்னல் அமிழ்தைக் குடித்ததனால்
இன்பத் தமிழின் சீர்போற்றும்
இனிய பணியை ஏற்றேனே!
அம்பொன் உலகை ஆட்சிசெயும்
அரிதாம் வாய்ப்புக் கிடைத்தாலும்
என்தன் மனமும் ஏற்றிடுமோ?
இணையே இல்லா இன்தமிழே!

- கி.பா.

# 2004 ஆம் ஆண்டின் உறுப்பினர்கள்



பேராசிரியர் ப. தசரதன்



பேராசிரியர் சதாசிவ சச்சிதானந்தம்



திருமிகு கோபாலபிள்ளை



திருமிகு. சிவஅரி



திருமிகு. செயசுந்தரி



திருமிகு. இரவிச்சந்திரன்



திருமிகு வேணுசெட்டியார்



திருமிகு சில்வன் அமல்ராசு



திருமிகு கோவிந்தசாமி செயராமன்



திருமிகு க. நாகராசன்
(கவிஞர் கன. கபிலனார்)

## செந்தமிழ்ச் செல்வி

புன்னகை வீசிப்
பூந்தமிழ் வந்தாள்!
இன்சுவைப் பாக்கள்
என்மனத்துள் தந்தாள்!

செந்தமிழ்ச் செல்வி
சீருடன் வந்தாள்!
சிந்தனை ஓங்கச்
செழும்மதி தந்தாள்!

உயர்தமிழ்க் கன்னி
உயிரென நின்றாள்!
இயலிசை மீட்டி
இனிமையைத் தந்தாள்!

எம்மினம் தழைக்க
எழில்தமிழ் மொழியாள்!
செம்மொழி யாகிச்
சிறப்புடன் வாழ்வாள்!

- மருத்துவர் த. சிவப்பிரகாசம்

## பிரான்சு கம்பன் கழகத்திற்கு
## உழைப்பினை, தொண்டினை, கொடையினை நல்கும்
## அன்பர்களும் அமைப்புகளும்

திருமிகு இராமமூர்த்தி

திருமிகு துளசிகுமார்

திருமிகு பேராசிரியர் சக்திப்புயல்

திருமிகு இரமேசு சிவரூப்பன்

திருமிகு இணுவையூர் பவண்

திருமிகு வேணு செட்டியார்

திருமிகு தாமசு பிரபு

பிரான்சு தமிழ்ச்சங்கம்

உலகத் தமிழ்ப் பண்பாட்டியக்கம்

முத்தமிழ்ச்சங்கம்

தமிழ்வாணி இதழ்

சித்தி விநாயகர் ஆலயம்

பிரான்சு சிவன் கோயில்

லா கூர்னேவ் சபரிகிரிசன் ஆலயம்

ஆடற்கலையகம்

சேரன் பயணகம்

மோ நகரப் பிரஞ்சுப் பூக்கள் கழகம்

குரு ஓங்கார நந்தா மன்றம்

அனைத்துலகத் தமிழர் கலைப்

பண்பாட்டு ஆன்மீகப் பேரவை

மாணவன் இதழ்

மோ நகரப் பிரஞ்சுப் பூக்கள் கழகத்தின் வரவேற்பு நடனம்

கம்பன் விழா மலரைப் புலவர் இரா. பன்னீர்ச்செல்வம் வெளியிட, திருவருட்பாத் திலகம் சிவசண்முகனார் பெற்றுக்கொள்கிறார்.

புதுவைக் கம்பன் கழக இணைச்செயலர் கி. கல்யாணசுந்தரம், சென்னைக் கம்பன் கழகச் செயலர் இலக்கியச்சுடர் த. இராமலிங்கம், புதுவைக் கம்பன் கழகச் செயலர் வழக்கறிஞர் தி. முருகேசன், நாவுக்கரசர் சோ. சத்தியசீலனார், சுந்தர இரத்தினசபாபதி

கவிஞர் கி. பாரதிதாசன் தலைமையில் பாட்டரங்கம். பாரிசு பார்த்தசாரதி, கோவிந்தசாமி செயராமன், இரமேசு சிவரூபன், அரியரத்தினம்.

புதுவைக் கம்பன் கழகச் செயலாளர் கம்ப காவலர், வழக்கறிஞர் தி. முருகேசன் உரையாற்றுகிறார்.

சென்னைக் கம்பன் கழகச் செயலர் இலக்கியச்சுடர் த. இராமலிங்கம் தலைமையில் சுழலும் சொற்போர்: முத்துக்குமரன், அலன் ஆனந்தன், செய. பாலகிருட்டினன், பி.எச். பற்குணராசா.

# கம்பன் புகழ் பாடுவோம்!

கவிஞர் தே. சனார்த்தனன், புதுவை.



கம்பன் புகழ் பாடுவோம் - தமிழ்க்
கம்பன் புகழ் பாடுவோம்!

(கம்பன்)

உம்பர் தமிழ் அளித்த - நம்
உண்மைக் கவி அரசன்!

(கம்பன்)

கற்பனை நிறைந்திருக்கும் காவியம் வடித்தான்
கவிநயம் பூத்திருக்கும் பாவியம் படைத்தான்
நற்றமிழ்த் தேன்மணக்கும் ஓவியம் தொடுத்தான்
நல்லதோர் இராமபிரான் நற்கதை கொடுத்தான்!

(கம்பன்)

ஒருவனுக் கொருத்தியெனும் உயர்நெறி புகன்றான்
உற்றதோர் தந்தைசொல் மந்திரம் என்றான்
பெருமைகொள் நட்பினது பெரும்பயன் சொன்னான்
பிறன்மனை நோக்காமை பேராண்மை என்றான்!

(கம்பன்)

# எண்கின் வேந்தன்

நூற்கடல் தி.வே. கோபாலய்யர், புதுவை.

தீயோர்களை ஒறுத்து நல்லோர்களைப் புரத்தற்குப் பரமபதநாதன் தான் தசரதன் மகனாகிய இராமனாகத் திருஅவதாரம் செய்யும் காலத்தில் ஏனைய தேவர்கள் யாவரும் வானரங்களாகக் காடுகளிலும் மலைகளிலும் அவதாரம் செய்யுமாறு ஆணையிட, இந்திரன் முதலியோர் தம் அமிசமாக இன்னார் இன்னார் வானரங்களாகத் தோன்றுவர் என்று குறிப்பிடுவதன் முன்னரே பிரமன் என் அமிசமாகச் சாம்பன் என்ற கரடிவேந்தன் முன்னரே தோன்றியிருக்கிறான் என்று குறிப்பிட்டான்.

பின்னர், வானவரை நோக்கிப் பிதாமகன் பேசுகின்றான்;<br>
'முன்னரே எண்கின் வேந்தன்யான்' என முடுகினேன்; மற்று<br>
அன்னவாறு எவரும் நீர்போய் அவதரித்திருமின் என்றான்<br>
- 204.

இது பாலகாண்டத் தொடக்கத்தில் காணப்படும் செய்தி. இதன்பின் சாம்பனைப்பற்றி வானரங்களின் செய்தி கூறும் கிட்கிந்தா காண்டத்திலேயே கூறப்பட்டுள்ளது.

வாலி வானரவேந்தனாக இருந்தகாலத்தில் சாம்பன் வாலிக்குத்துணையாக இருந்தானா? சுக்கிரீவனுக்கு உதவியாக இருந்தானா? என்ற செய்தி எதுவும் கூறப்படவில்லை. ஆனால் வாலி சுக்கிரீவனைக் கொல்லத்துரத்திய செய்தியும் அவன் மனைவி உருமையைக் கைப்பற்றிய செய்தியும் அறத்திற்குப் புறம்பானவை ஆதலின் அச்செயல்கள் செய்த வாலியிடம் சாம்பன் வெறுப்புக் கொண்டிருந்தான் என்பது மாத்திரம் போதருகிறது.

சுக்கிரீவன் அரசனாயினபின் சாம்பன் அவனுடன் நட்புப் பூண்டு வாழ்ந்து வந்ததாகவே கருதுகிறோம். ஆண்டிலும் அறிவிலும் ஒத்த அவனுக்குச் சுக்கிரீவன் ஆட்சியில் பெருமதிப்பு இருந்தது.

பிராட்டியைத்தேட நாற்றிசையும் படைகளை நாடவிட்ட சுக்கிரீவன், அனுமனை நோக்கி,

தென்திசைக்கண், இராவணன் சேண்நகர்<br>
என்று இசைக்கின்றது, என் அறிவு, இன்னணம்<br>
வன்திசைக்கு, இனி, மாருதி நீ அலால்<br>
வென்று, இசைக்கு உரியார் பிறர் வேண்டுமோ? - 4453

தாரைமைந்தனும், சாம்பனும், தாம்முதல்<br>
வீரர் யாவரும், மேம்படும் மேன்மையால்<br>
சோக நின்னொடும், திண்திறல் சேனையும்<br>
போக வெள்ளம் இரண்டொடும் பெற்றியால் - 4455

என்று குறிப்பிடும் இடத்திலேயே சாம்பன் முதன்முதலில் குறிப்பிடப்பெறுகிறான்.

வெப்பம் தாங்காமல், வானரர்யாவரும் ஒரு பிலத்தினுள் இறங்கிச்செல்ல, அந்நீண்ட பிலம் ஒரு நகரத்திற்குக் கொண்டு சேர்க்க, அங்கு மனிதர்கள் ஒருவரையும் காணாமல் வானரர் திகைத்தனர். அப்பொழுது சாம்பனும் கலங்கினான். வஞ்சனையால் பிராட்டியைக் கவர்ந்த இராவணன் இந்த நகரமாகிய பொறியில் நம்மை எல்லாம் அகப்படுத்திக் கொல்ல முடிவு செய்து விட்டான் போலும் என்று குறிப்பிடுகிறான்.

சாம்பன்அவன் ஒன்று உரைசெய்வான், எழு சலத்தால்<br>
காம்பு அனைய தோளியை ஒளித்த படுகள்வன்<br>
நாம் புக அமைத்த பொறி நன்று, முடிவுஇன்றால்<br>
ஏம்பல் இனி மேலைவிதியால் முடியும் என்றான். - 4563

அது கேட்ட அனுமன் இன்று இப்பிலத்திலிருந்து வெளியேற வழியில்லை என்றால் சகரபுத்திரர்களைப் போலப் பூமியைக் குடைந்து அப்பால் சேருவோம். அஃது அன்று எனின் வஞ்சனை அரக்கர் குலத்தையே கொன்று விட்டு வெளியே புறப்படலாம். ஆதலின் அஞ்ச வேண்டா என்று குறிப்பிட்டுச் சாம்பன் முதலியோரை அமைதியுறுத்தியவாற்றைக் காண்கிறோம்.

அனுமன் பிலத்தைப் பிளக்க, வானரர்கள் வெளியே வந்து, பயணத்தைத் தொடர்ந்து, ஒரு பொய்கைக் கரையில் உறங்கிக் கொண்டிருந்தனர். அப்பொழுது அசுரன் ஒருவன் வந்து அங்கதன் மார்பில் கையால் அறைய, இருவருக்கும் போர்மூள, அசுரன் அப்போரில் அங்கதனால் கொல்லப்பட்டான். அசுரனைப்பற்றி அனுமன் வினாவச் சாம்பன் அவ்வசுரன் அப்பொய்கைக்கு உரிய துமிரன் என்பவன் என்று அவன் வரலாற்றைக் குறிப்பிட்டதாகக் காண்கிறோம்.

பிராட்டியைக் குறிப்பிட்ட கால எல்லைக்குள் தேடிக் காண இயலாத நிலையில் அங்கதன், வானரத்தலைவரையும் சாம்பனையும் நோக்கி என் தந்தையும் வெருகுவார். எம்இறை இராமனும் மனம் வருந்துவான். இவற்றைக் காணாமல் உயிரை விட்டு விடலாம் என்று நினைக்கிறேன். நும் கருத்தைச் சொல்லுங்கள் என்று கூறச் சாம்பன்.

அங்கதா! தக்கவாறு கூறினால் இங்கிருந்து அழுது கொண்டு இருப்பதையும் கிட்கிந்தை சென்று நம் இயலாமையைக் கூறித் தொழுது நிற்பதையும் விட உயிரை விடுவதே நலம். ஆனால் அரசிளங்குமரனாகிய நீ ஊருக்குத் திரும்பிச் செல்ல வேண்டும் என்று கூறினான்.

நீயும் நின்தாதையும் நீங்க, நின்குலத்<br>
தாயம் வந்தவரொடு தனையர் இல்லையால்,<br>
ஆயது கருதினம், அன்னது அன்று எனின்,<br>
நாயகர் இறுதியும் நவிலற் பாலதோ? - 4664

ஏகு நீ அவ்வழி எய்தி, இவ்வழித்<br>
தோகையைக் கண்டிலா வகையும் சொல்லி, எம்<br>
சாகையும் உணர்த்தி தவிர்தி சோகம். - 4665

என்று கூற, அனுமன் மீண்டும் தேடுதலைத் தொடர்வோம் என்று கூறி அவர்களுடைய உரையாடலுக்கு முற்றுப்புள்ளி வைத்தான்.

வானரர்கள் கடற்கரையை அடைந்த அளவில் கடலைக்கடப்பவர் யார்? என்று அவர்கள் தங்களுக்குள் பேசிக்கொண்டனர். அப்பொழுது சாம்பன், எம்பெருமான் திரிவிக்கிரமனாய் நிலஉலகம் முழுதும் ஓரடியால் அளந்த வெற்றிச் சிறப்பை அறிவித்து எட்டுத்திசையும் நான் பறையை ஒலித்துத்திரிந்த போது மேருமலையில் தன் கால்கள் மோதிச்சிறிது முடம்பட்டதால் தான் தாண்டுதல் இயலாது என்பதனைக் குறிப்பிட்டான். பின் சாம்பனே, இராமனை முன்னர்ச் சென்று சந்தித்தவனும் எல்லாச் செயலையும் திறம்படத்திட்டமிட்டு வெற்றிதரும் வகையில் செய்து முடிப்பவனும் ஆகிய அனுமனை ஒத்த வீரர்கள் பிறர் இல்லை ஆதலின் அவனே கடலைத் தாண்டுதற்குரியவன் என்று குறிப்பிட்டான். பின் அனுமனை நோக்கி.

பிரமனையும்விட நீண்ட வாழ்நாளை உடையீர்! பன்னூல் பயின்ற கல்வியும் பேச்சாற்றலும் உடல்வலிமையும் உரத்திரனை ஒத்த பேராற்றலும், உடையீர் - ஐம்பூதங்களாலும் தெய்வப் படைகளாலும் நலியாத உடலை உடையீர். நன்று தீதுகளை ஆராய்ந்து கூறத்தக்கன கூறித்தோள்வலியால் பகைவர்களை வென்று மீளவல்லீர். கதிரவன்வரை செல்லும் உள்ள உரமும் பெருவடிவும் அதனைச் சிறிதாகச் சுருக்கிக் கொள்ளும் திறனும், நிலத்தையே பிளக்கும் வலிமையும் உடையீர். அறன் அழியாத வகையில் வாலி நிலைகுலைந்து உருளும்படி திட்டமிட்டு வாலியை வென்ற மதியுடையீர். நீதியும் வாய்மையும் பிரம சரியமும் வேதம் ஓதிய அறிவும் உடையீர். நன்னெறிச்செலவும் பொறையும் உடைய பண்டிதராகிய நீரே இக்கடலை ஒரே தாண்டலில் தாண்டிச் செல்லும் ஆற்றலீர் என்று அனுமன் பேராற்றலை எடுத்துரைத்து அவனைக் கடலைத்தாண்டி இலங்கையை அடைய ஊக்குவித்தான். இலங்கையில் இருந்து மீண்ட அனுமன் அங்கதனை வணங்கி அடுத்து எண்கி வேந்தைக் காலுறப்பணிந்தான். - 6013

தன்னை அடைக்கலமாகப் பற்றவந்து அடைந்த வீடணன் கைப்புகற்பாலனோ? கழியற்பாலனோ? என்று தம் கருத்தைக் குறிப்பிடுமாறு இராமன் குறிப்பிட்ட அளவில் முதலில் சுக்கிரீவன் தன் கருத்தினை எடுத்து உரைத்தான், சாம்பனுடைய கருத்தையே இராமன் அறிய விரும்பினான். அப்பொழுது சாம்பன்,

அறிஞர்களும் கொடிய பகைவர்களின் சேர்க்கையால் கெடுதல்திண்ணம். புறம் நட்டு அகம் வேர்க்கும் சிற்றினத்தவரே அரக்கர்கள். வேதம், வேள்வி இவற்றை மயக்கி, மறையவருக்கும் தேவருக்கும் தீங்கு செய்யும் அரக்கர் நமக்கு அன்பர் ஆவரோ? அவர்களை முதலில் ஏற்றுப்பின் அவர் தீமைகருதி விடுப்பின், அதனால் நமக்குப்பழியே ஏற்படும்.

மேல்நனி விளைவது விளம்ப வேண்டுமோ?
கானகத்து இறைவியோடு உறையும் காலையில்
மான்என வந்தவன் வரவைமானும், இவ்
ஏனையன் வரவும் என்று இனைய கூறினான். - 6438.

கும்பகருணன் தன்னால் வெல்லப்பட உள்ள தலைவர் பெயர்களில் சாம்பன் பெயரையும் இணைத்துள்ளான்.

அனுமனை, வாலிசேயை, அருக்கன் சேய் தன்னை, அம்பொன்
தனுஉடையவரை, வேறு ஓர் நீலனை, சாம்பன்தன்னை,
கனி தொடர் குரங்கின் சேனைக் கடலையும் கடந்து, மூடும்
பனிதுடைத்து உலகம் சுற்றும் பரிதியின் திரிவென். - 7432

என்பது கும்பகருணன் கூற்று.

பிரமாத்திரத்தால் கட்டப்பட்டவருள் சாம்பனும் ஒருவன். வீடணனும் அனுமனும் தன் பெருந்தகைமைக்கு ஒத்த சாம்பன்

அன்புதன் தம்பிமேல் ஆத்து அறிவினை மயக்க ஐயன்
துன்போடும் துயிலன் ஆனான் உணவுஇனித் தொடர்ந்த பின்னே
என்புகுந்துஎய்தும் என்பது அறிசிலென் என்ற லோடும்
தன்பெருந் தகைமைக்கு ஒத்த சாம்பன் எத் தலையன் என்றான்.
- 8716

என்று தேடிச் சாம்பனை அடைந்தனர்.

எரிகின்ற மூப்பினாலும், ஏவுண்ட நோவினாலும்,
அரிகின்ற துன்பத்தாலும், ஆர்உயிர்ப்பு அடக்கி ஒன்றும்
தெரிகின்றது இல்லா மம்மர்ச் சிந்தையன் எனினும், வீரர்
வருகின்ற சுவட்டை ஓர்ந்தான், செவிகளால் - வயிரத்தோளான்.
- 8719

வீடணனும் அனுமனும் தன்னிடம் வந்தமை அறிந்து, இனி, எல்லோரும் பிழைத்து விடுவோம், என்று சாம்பன் உவகையால் ஓங்கினான்.

அவன் அனுமனிடம் மருத்துமலையை அடைதற்குரிய வழியையும் கொணரவேண்டிய மூலிகைகளின் அடையாளங் களையும் கூறிச்சிறிதும் காலம் தாழ்க்காது விரைந்து புறப்படுமாறு அனுமனை ஊக்கினான்.

மாண்டாரை உய்விக்கும் மருந்து ஒன்றும்,
உடல்வேறு வகிர்களாகக்
கீண்டாலும் பொருந்துவிக்கும் ஒரு மருந்தும்.
படைக்கலங்கள் கிளைப்பது ஒன்றும்,
மீண்டேயும் தம்உருவை அருளுவது ஓர்மெய்ம்
மருந்தும், உள நீ, வீர!
ஆண்டு ஏகிக் கொணர்தி என அடையாளத்தொடும்
உரைத்தான், அறிவின் மிக்கான் - 8729

இம்மருந்து காத்து உறையும் தெய்வங்கள் எண்ணிலவால்
இரங்கா யார்க்கும், .... நின்னைக் காவாய் - 8730

என்று இடையூறுகள் பற்றி அனுமனை எச்சரித்து அனுப்பினான். அனுமனை மருந்து கொணர அனுப்பியபின், சாம்பன், வீடணனோடு இராமனை அடைந்து, மருந்துகளின் இயல்புகளை அவனிடம் எடுத்துக்கூறி,

சல்லியம் அகற்றுவது ஒன்று சந்துகள்
புல்லுறப் பொருத்துவது ஒன்று போயின
நல்லுயிர் நல்குவது ஒன்று நல்நிறம்
தொல்லையது ஆக்குவது ஒன்று தொல்லையோய்! - 8792

வருவது திண்ணம் நி வருந்தல்; மாருதி
தருநெறி தருமமே காட்டத் தாழ்க்கிலன்
அருமையது அன்று. - 8793

என்று இராமனை அமைதியுறுத்திக் கொண்டிருந்த நேரத்தில் அனுமன் மருத்துமலையுடன்வர அனைவரும் பண்டுபோல் எழுந்து ஆரவாரித்தனர்.

மருத்துமலை அங்கிருந்தால் இறக்கும் பகைவரும் பிழைத்து விடுவர் ஆதலின் அதனை மீண்டும் அதன் இடத்தில் வைக்குமாறு சாம்பன் அனுமனிடம் குறிப்பிட்டான். - 8817.

இராவணனுடைய மூலபலச் சேனையின் பேராற்றலைக் கண்டு அதிர்ந்து நிற்றல் ஆற்றாது குரங்குப்படை தோற்று ஓட, அங்கதன் ஓடிய படைவீரரை அழைக்க, அவர்கள் அஞ்சித் தம்மால் போரிட இயலாமையை உரைக்க, அங்கதன் சாம்பனை நோக்கி இராமன் பாம்பணை அமலனே என்று எமக்குத் தெளிய உபதேசிக்கக் கூட இம்மூலபலப்படையைப் பார்த்து அஞ்சினாய் போலும் என்று கூறச் சாம்பன்,

இவ்வரக்கரைக் கண்ணால் காணவும் எதிர்த்து நிற்கவும் கரைமிடற்று அண்ணாலாலும் இயலுமோ? தேவாசுரயுத்தத்தைப் பார்த்த எனக்கோ அச்சமாக உள்ளது. கூற்றுவனைக் கண்டு அஞ்சினால் பழி ஏற்படுமா?

மாலியைக் கண்டேன் பண்டை மாலிய வானைக் கண்டேன்
காலநேமியையும் கண்டேன் இரணியன் தனையும் கண்டேன்
ஆலமா விடமும் கண்டேன் மதுவினை அனுச னோடும்
வேலையைக் கலக்கக் கண்டேன், இவர்க்கு உளடுக்கும்
உண்டோ? - 9350

வலிஇதன் மேலே பெற்ற வரத்தினர் மாயம் வல்லார்
ஒலிகடல் மணலின் மிக்க கணக்கினர் உள்ளம் நோக்கின்,
கலியினும் கொடியர் கற்ற படைக்கலக் கரத்தர் என்றால்,
மெலிகுவது அன்றி உண்டோ? விண்ணவர் வெருவல்
கண்டால்? - 9351

ஒன்றும்நீர் அஞ்சல், ஐய! யாம்எலாம் ஒருங்கு சென்று,
நின்றுஒன்று இயற்றல் ஆற்றேம், நேமியான் தானே நேர்ந்து
கொன்றுபோர் கடக்குமாயின், கொள்ளுதும் வென்றி அன்றேல்
பொன்றுதும் அவனோடு என்றான் போதலோ புகழ் அன்று
என்றான் - 9354

இதனால், சாம்பன் தன்மனத்துப்பட்டதனை ஒளிவு மறைவு இன்றி வெளிப்படையாகக் கூறும் இயல்பினன் என்பதை அறிகிறோம்.

பிரமாத்திரத்தால் பிணிப்புண்ட அனைவரும் உயிர் பிழைக்கவும், இராவணன் எறிந்த வேலை ஏற்று மயங்கி இலக்குவன் உயிர் பிழைக்கவும், மருந்துகளைக் கொணரும் வழிவகைகளை எடுத்துக்கூறிக் குரங்கினத்தவருக்கும் இராம லக்குவர்க்கும் உதவிய பேறிஞ்னான எண்கின் வேந்தன் சாம்பன் இராமனுடைய முடிசூட்டுவிழாவினைக் கண்டு மகிழ்ந்து அவன் நல்கிய பரிசினைப் பெற்று மகிழ்வோடு விடைபெற்றுப் போயினான்.

சந்திரற்கு உவமை சான்ற, தாரகைக் குழுவை வென்ற
இந்திரற்கு ஏய்ந்த தாகும் என்னும்முத் தாரத் தோடு
கந்துஅடு களிறு, வாசி, தூசு, அணிகலன்கள் மற்றும்
உந்தினன் எண்கின் வேந்தற்கு - உலகம் முந்து உதவினானே
- 10354

என முத்துமாலை, யானை, குதிரை, அணிகலன்களை இராமனிடம் பரிசாகப் பெற்ற சாம்பன், எங்கிருந்து உதவ வந்தான் என்பதும். உதவிய பின் எங்குச் சென்றான் என்பதும் நம்மனோர் அறிவதற்கு இராமாவதாரக் காப்பியத்தில் வாய்ப்பு வழங்கப்பட வில்லை.

# அழியா அழகன்

முனைவர் இரா. திருமுருகன், புதுவை.

வணக்கம்

தரையதனில் ஒருமுதியள்
ஆகத் தாயாய்த் - திகழ்வோளே!
தனியருளை இனியதமிழ்
நாவிற் கூடத் - தருவோளே!
அரியதமிழ் வலவனருள்
பாவிற் சேர்அச் - சுவைதேர
அயர்விழவின் உயர்பணியில்
ஆழக் கால்வைத் - திடுவோரே!
பெருகுசுவை பருகவரும்
ஆர்வத் தீர்நற் - பெரியோரே!
பெறலரிய நறுமலர்கள்
தேடிப் பாடித் - தருவோரே!
திரையுலகில் அரசகவி
யாகப் பாவைத் - தருவாலீ!
திருமுருகன் உமதடிஎன்
பூவைத் தூவிப் - பணிவேனே!

"அழியா அழகன் எனும்பொருளில் பாடல்
பொழிவதற்கு நீரே பொருத்தம்" எனச்சொன்னார்.
கம்பன் அடி சூடி தம்பி பழனியப்பன்.
நம்பியிடம் "பேருக்கு நானும் அழகன்தான்
நீயும் அழகன் நினைத்துப்பார்" என்றுரைத்தேன்
'ஈடறியா மேன்மையழகு ஏய்ந்தரே' என்றுகுயில்
பாடலிலே வானரரைப் பாடுகிறார் பாரதியார்
ஆயுங்கால் இந்த அரங்கின் கவிஞர்களும்
நாயகனாம் வாலியும் நல்ல அழகர்களே!
ஏயும் அழகர் பலராய் இருந்தாலும்
தூய நடையில்உயர் நாயகனே என்றும்
அழியா அழகனாய் ஆவான் எனநான்
மொழியப் புகுவேன் முனைந்து.

கருவிலே உருப்பெறுங் காலத்தி லேயே
கருமுகில் கொழுந்தெழில் காட்டிப் பிறந்தவன்
காவியும் ஒளிர்தரு கமலமும் எனவே
ஓவிய எழிலுடை ஒருவன் ஆனவன்!
தோள்கண் டாரும் தாள்கண் டாரும்
மால்கொண் டிடச்செயும் வடிவழ குடையவன்
அப்பொழு தலர்ந்த செந்தா மரையாய்
எப்பொழுதும் மலர்ந்தி ருக்கும் முகத்தினன்
என்றெலாம் இராமனைக் கம்பன் காட்டினான்.
தம்பியும் சீதையும் தானுமாய் இராமன்
காட்டில் நடந்ததைக் கம்பன் நயமுடன்

வெய்யோன்ஒளி தன்மேனியின்
விரிசோதியின் மறையப்
பொய்யோஎனும் இடையாளொடும்
இளையானொடும் போனான்
மையோமர கதமோமறி
கடலோமழை முகிலோ
ஐயோஇவன் வடிவென்பதோர்
அழியா அழகுடையான்
என்று பாடி இறும்பூதடைகிறான்.

இராமம் என்பது அழகு என்பதால்
இராமனை அழகன்என்று இயம்பினான் கம்பன்.
"அல்லை ஆண்ட அமைந்த மேனி
அழகன்" என்பது குகனின் வருணனை
"அதிகம் ஒளிரும் அழகன் வாண்முகம்
பொதியவிழ் தாமரைப் பூவை ஒக்கும்
எவன்செய இனியஇவ் வழகை எய்தினான்?"
என்று வியந்தாள் அன்றுசூர்ப் பணகை!
"மஞ்செனத் திரண்ட கோல மேனிய
கஞ்சம்ஒத் தலர்ந்த கண்ண" என்றே
அஞ்சனை செல்வன் அவனை விளிக்கிறான்.
எதிரி வாலியே......
எதிரில் இருக்கும் இவ்வாலி யல்லன் - இவன்
அவதார புருடனாய் அவனை வணங்குவோன்
எதிரில் நிற்பதற் கெவருமே அஞ்சும்
எதிரீஇல் வாலியே இராமனைப் புகழ்கிறான்
"ஓவியத் தெழுதா உருவத்தாய்" என்று
பகைவ னிடத்திலும் பாராட்டுப் பெற்ற
இராமனின் அழகே இணையிலா அழகு!
ஆனால் இவர்கள் காணும் அழகெலாம்
மேனியில் தோன்றும் வெளிப்புற அழகே.
மின்னுவ தெல்லாம் பொன்னாவ தில்லை,
பெற்றோர் எல்லாம் பிள்ளைகள் அல்லர்,
உற்றோர் எல்லாம் உறவினர் அல்லர்,
பெரியோர் எல்லாம் பெரியரும் அல்லர்
சிறியோர் எல்லாம் சிறியரும் அல்லர்
அதனால், ஒருவற்கு
அகத்தும் புறத்தும் ஒத்துள அழகே
அழியா அழகெனும் அருகதைக்குரியது
மன்னர் குழுமிய மண்டபந் தன்னில்
வில்லை இறுத்த வெற்றியால், இராமனின்
அகத்தின் அழகை அறிந்துள்ள சீதை,
கண்வழிப் புகுந்த காதலன் முகத்தையும்
கைவளை திருத்துபு கடைக்கணால் கண்டாள்
புறத்து வடிவினைப் புகலும் கம்பனே
அகத்தின் அழகையும் ஆங்காங் குரைப்பான்.
அகத்தின் அழகு முகத்தில் தெரியுமாம்
அகத்திலும் முகத்திலும் மட்டுமா அழகு?
செயலிலும் அழகுண்டு என்பதால் அவ்வை
'அழக லாதன செயேல்' என்றறி வுறுத்தினாள்
படித்தவன் சூது பண்ணினால் யாரும்
"படித்தவ னுக்கீது அழகா?" என்பர்
தாடகைப் போரில் கண்ட கை வண்ணமும்
அகலிகை யாலே அறிந்த கால் வண்ணமும்
அகத்தழ கல்லவா? அழகன் இராமனின்
மனம் மொழி செயல்களின் வனப்பினைக் காட்டும்
கண்காட்சி யல்லவா கம்பரா மாயணம்?
"மெய்த்தி ருப்பதம் மேவெ"னும் போதினும்
"இத்திருத்துறந் தேகெ"னும் போதினும்
சித்தி ரத்தின் அலர்ந்தசெந் தாமரை
ஒத்தி ருந்த ஒளிமுகம், அவன்தன்
இன்பதுன் பங்களால் இம்மியும் மாறா
உளத்தின் சமநிலை உரைக்கும் அல்லவா?
"தாழிருஞ் சடைகள் தாங்கிக் காட்டினில்
ஏழிரண் டாண்டுகள் இருந்துவா என்பது
அரசன் ஆணை"யென் றன்னை கூற
"மன்னவன் தன்பணி அன்றெனி னாலும்
நின்பணி மறுக்க நினைப்பனோ?" என்றவன்
சொன்னதும் உடனே தவக்கோ லத்துடன்
பன்னரும் கானம் படர்ந்ததும் இராமனின்
கடமை உளத்தைக் காட்டும் அல்லவா?
மனைவிமேல் காதலால்,மான் பின் போனதால்,
வாலிமேல் மறைந்து வாளி எய்ததால்,
வில்லறத் தோடு பல்லறம் துறந்தேன்
என்று கூறி இரங்குதல், தானே

தன்குற்றம் ஏற்கும் தகைமை காட்டாதா?
வெம்போர்க் களத்தில் வெறுங்கையன் ஆன
இராவணன் மேலும் இரக்கம் கொண்டே
"இன்றுபோய்ப் போர்க்கு நாளைவா" என்றது
பேராண்மை யாகிய போராண்மை யல்லவா?
இப்படிப் பட்ட இயல்பினால் அன்றோ
இராமனைக் கம்பன்
'செப்பருங் குணத்தன்' என்று செப்பினான்?
அந்தக் காலத்து அழகு வேறுதான்
இந்தக் காலத்து அழகே வேறுதான்
அந்தக் காலத்தில்,
மந்திரிக் கழகு வரும்பொருள் உரைத்தல்
இந்தக் காலத்தில்,
மந்திரிக் கழகு வரும்பொருள் மறைத்தல்
அன்றைக்கு,
மன்னர்க் கழகு செங்கோல் முறைமை, அதனால்
மன்னர்கள் செங்கோல் தாங்கி நின்றார்கள்
இன்றைக்கு,
அமைச்சர்கள் செங்கோல் வாங்குகின் றார்கள்!
அந்தக் காலத்துத் தலைவர் களுக்குக்
கொள்கைக் குன்றாய் விளங்குவ தழகு
இந்தக் காலத்துத் தலைவர்கள் பலர்க்குக்
கொள்கையை விட்டுக் கூட்டணி சேர்வது
அழகு அழகு அத்தனை அழகு!
ஒரு மாநிலத்தில்,
ஆளும் கட்சியை எதிர்த்து
உண்ணாப் போரை நடத்தும் கட்சியே
வேறுமா நிலத்தில்,
அதே கட்சியை அணைத்துக் கொண்டு
உண்ணும் போரை நடத்து கின்றதாம்!
தினமணி போட்ட செய்திப் படம்இது.
சீதை தனைச்சிறை செய்தே அடைவது
இராவணன் கொள்கையாய் இருந்தது அந்த
இராவணன் கொடுமையை எதிர்த்து அழிப்பதே
இராமனின் கொள்கை; இதனை ஏற்றே
இராமன் சுக்கிரீவன் வீடணன் மூவரும்
கூட்டணி அமைத்தனர்; கொள்கையில் வென்றனர்!

இன்றோ,
இராமன் அணியில் இராவணன் இணைகிறான்!
அதுதான் இன்றைய அரசியல் அழகு!
இராமன் இராவணன் இருவரும் இணைந்து
கூட்டணி வைத்ததன் குறிக்கோள் என்ன?
கற்புடைச் சீதையைக் கடத்திச் செல்வதா?
மண்டோ தரியைக் கொண்டு செல்வதா?
இந்தக் கட்சியோ அந்தக் கட்சியோ
எந்தக் கட்சியில் நின்றால் என்ன?
எனக்கு வேண்டியது அமைச்சர் பதவி
இந்தக் கட்சி இடம்தந் துள்ளது;
இந்தக் கட்சி இடம்தரா விடனும்
அந்தக் கட்சியில் இடம்கிடைத் திருக்கும்!
என்கிறார் இன்று ஒரு தொகுதி வேட்பாளர்!
ஆமாம்,
எந்தக் கட்சியின் கொள்கை இவருக்கு?
முடியைப் பிய்க்கிறோம், பிடிபட வில்லை!
தேர்தல் களத்தில் திகழும் அழகிது!

அடக்கம் உடைமையும் ஆள்வினை உடைமையும்
ஒழுக்கம் உடைமையும் உள்ளத் தூய்மையும்
கல்விசான் றாண்மையும் கள்ளுண் ணாமையும்
நடுவு நிலைமையும் நாணம் உடைமையும்
மானம் போற்றலும் மதிப்புடன் வாழ்தலும்
கொள்கை என்பதும் குறிக்கோள் என்பதும்
பழங்கா லத்துப் பயித்தியங் களுக்கே
அழகாய்த் தோன்றின; ஆனால் இன்றோ,

ஓராளுக் கொருகட்சி வைத்திருப்ப தழகு!
ஒரு நாளில் பலகட்சி மாறிவரல் அழகு!
சாராயம் காய்ச்சுவதைப் பாராட்டல் அழகு!
தமிழ்புகட்டும் பள்ளிகளைத் தகர்த்துவிடல் அழகு!

கொலைகடத்தல் பதுக்கல்கள் கலப்படங்கள் எல்லாம்
குற்றமெனும் சட்டத்தைக் கொளுத்திவிடல் அழகு!
அலையாமல் உழைக்காமல் பணம் பண்ணல் அழகு!
அறங்களிலே கையூட்டுச் சிறந்ததெனல் அழகு!

அவரவரும் பணத்தாளை அவரவர்தம் பொறுப்பில்
அச்சடித்துக் கொள்ளுவதை மெச்சுவதும் அழகு!
எவரெனினும் எப்படியும் ஏமாற்றல் அழகு!
இவைதாம்இன் றுலகத்தில் எல்லோர்க்கும் அழகு!

நயமான மொழிபேசித் தேர்தலிலே வென்று
நரியாக வாழுவதே சரியான அழகு!
உயர்நீதி முறைகாத்த சான்றோர்கள் ஓடி
ஊழலெனும் கால்களிலே வீழுவதும் அழகு!
அன்றைய கண்ணன் அசோதை தன்னை
'அம்மா' என்றே அழைத்தானாம்; அதை

எங்கும் நிறை பரப்பிரும்மம்
அம்மா என்றழைக்க (என்ன)
என்று பாடி மகிழ்ந்தார் பாபநாசம் சிவன்.

இன்று கண்ணன் இருந்திருந்தால்
பாபநாசம் எப்படிப் பாடுவார்
எங்கும் நிறை பரப்பிரம்மம்
'மம்மீ' 'மம்மீ' என்றழைக்க (என்ன)
என்றுதான் பாடி யிருப்பார்; இல்லையா?
அன்றைக்கு 'அம்மா' அனைவர்க்கும் அழகு!
இன்றைக்கு 'மம்மீ' எல்லோர்க்கும் அழகு!
ஆங்கில மொழியில் கையெழுத் திடுவதே
அறிவில் சிறந்த தமிழனுக் கழகு!
அவனை,
"வெள்ளை யனுக்கா பிள்ளையாய்ப் பிறந்தாய்?"
என்று கேட்கலாம் இஃதழகாகுமா?
அதனால்,
தமிழில் ஒப்பம் போடுவோன் மட்டுமே
தமிழனுக்குப் பிறந்தவன் என்றால்
அதுமிக அழகாய் இருக்கும் அல்லவா?
முந்தை நாள் அழகின் நினைவினில் மூழ்கி
இந்த நாள் அழகோடு எண்ணி ஒப்பிட்டுச்
செப்பிச் சென்றால் சில நாள் செல்லும்!
போது மானது; போதும் ஆனது.
அழியா அழகனின் அழியாப் பண்புகள்
இன்றும் நம்மிடை நின்றுநல் வாழ்வு
மேவச் செய்யும் ஆவலில்
காவடிச் சிந்தொடு கதையை முடிப்பேன்.

கம்பரா மாயணச் சோலை - தனில்
காலை - யொடு
மாலை - காட்சி
காண்ப தொன்றே என்றன் வேலை - கல்விக்
கடலேஎன உலகேதனி
இடமேதரு புகழ்மேவிய
கம்பனை என்மனம் சுவைக்கும் - அவன்
காட்டும் அழகினை வியக்கும்!
அம்புவியில் கம்பன் போலே - ஒரு
நூலே - தமி
ழாலே - செய்தே
ஆரளிப்பார் இனிமேலே - அவன்
ஐயோஇவன் வடிவென்பது
மையோமர கதமோஎன
அழகனைப் பாடுவதழகு - அதை
ஆழ்ந்து சுவைத்திடப் பழகு!

# கம்பனில் சீற்றம்

இயலிசைப்புலவர் இராச. வேங்கடேசன், புதுவை.

எடுத்ததற்கெல்லாம் சினங்கொண்டு சீறியெழும் ஒருவனைப் பார்த்து, 'இவன் பெரிய விசுவாமித்திரனாய் இருக்கிறான் என்று சொல்வதுண்டு.

உலகெல்லாம் பாராட்ட நல்லாட்சி புரிந்துவரும் தசரதச் சக்கரவர்த்தி, தன் வெற்றிமுரசம் திக்கெட்டும் ஒலிக்க அவையில் மகிழ்ச்சியோடு அமர்ந்து இருக்கும் நேரம்!

மக்கள் சமுதாயத்தையும், மனோதத்துவத்தையும், ஏன் பிறப்பியல் தத்துவத்தையுமே சீர்திருத்தியமைக்க வேண்டும் என்ற விசுவாமித்திரர் என்னும் கோசிக முனிவர் வருகிறார்! மார்பில் கிடந்த அணியாரம் தாழ்ந்து ஒளிவீச வரவேற்கும் தசரதனைக் கண்டு வாழ்த்துக் கூறுகிறார்.

வேண்டியதைச் சொல்லியருள வேண்டும் என்று அரசனே முதலில் கேட்க, முனிவர் பேசத் தொடங்குகிறார்! "மரங்கள் அடர்ந்த காட்டில் யான் - இயற்றும் தவவேள்விக்கு இடையூறு செய்யும் அரக்கர்களிடம் போர் செய்து வேள்வியைக் காக்க வேண்டும்! அதற்கு நின்சிறுவர் நால்வரினும் கரிய செம்மலாம் இராமனைத் தருவாயாக! என்கிறார். கொடிய அரக்கர்களோடு போர் செய்வதற்குப் பிள்ளையைத் தன்னோடு அனுப்பு என்றால், ஒரு தந்தைக்கு எவ்வளவு வருத்தத்தைக் கொடுக்கும் என்பதைக் கொஞ்சமும் நினைக்கவில்லை விசுவாமித்திரர்.

இராமனைப் போருக்கு அனுப்பமாட்டேன் என்று சொன்னால் முனிவருக்குக் கோபம் வந்துவிடுமே என்று எண்ணி ஒரு தந்திரம் பண்ணுகிறான். தசரதன்!

"பெரியோய்! இவன் படையூற்றம் இலன், சிறியன் ஆதலால், சடையானும், நான்முகனும் புரந்தரனும் புகுந்து செய்யும் இடையூற்றுக்கு இடையூறாய் நின்றுயானே பாதுகாக்கின்றேன்! பெருவேள்வி நடத்த எழுந்தருளுங்கள் என்றான்.

"என்றனன் என்றலு முனிவோடு ......"

(கையடைப்படலம். எ : 14)

இராமனை அனுப்ப மனமில்லாமல் தானேவந்து உதவுவதாகச் சொல்லி ஏமாற்றப் பார்க்கிறான் அரசன், என்று முனிவருக்கு வந்துவிட்டது சீற்றம். எழுந்தார்! தேவரெல்லாம் நடுங்கினர்!, கதிரவன் ஒளிந்தான்!, கடைப்புருவங்கள் நெற்றி முற்றிலும் சென்றன! இடியேறு போல் வந்தது நகை! சிவந்தன கண்கள்! திசைகள் எல்லாம் இருண்டே போயின!

கோசிக முனிவரின் சீற்றம் இத்தனை அதிர்ச்சிகளுடன் வெளிப்படுவதைக் காட்டுகின்றான் கம்பன்:

புருவங்களின் கடைசியாக உள்ள சிறுபாகம் மாத்திரம் துடிக்கும் போது அது அடங்காத சினத்தின் அடையாளமாகும்.

'இந்த மலையில்தான் தாடகை இருக்கிறாள் என்று இராமனிடம் முனிவர் கூறியதுதான் தாமதம்! உடனே கன்னங்கரிய மலையின் உச்சியிலே நெருப்பு எரிவதுபோலச் சிவந்தது! மற்றைப் புருவம், பல், வாய், கண் இவைகளெல்லாம் எப்படி இருந்தன?

"இறைக் கடை துடித்தபுருவத்தள் ... ... ...

(தாடகை வதைப்படலம் எ: 31)

இது தான் சீற்றங்கொண்ட தாடகையின் தோற்றம்!

மாபெரும் வீரனாய் - கலைகளின் இருப்பிடமாய் - நாட்டு மக்களின் உயிரெல்லாம் உறையுமோர் உடம்பாய் - பெரிய பக்தி மானாய் இருந்தான் இராவணன்!. தன் அண்ணன் இராவணன் மீது அளவற்ற பக்தியுடையவனாய் விபீடணனும் இருந்தான்.

அதனால்தான், அப்பனும் அம்மையும், அண்ணனும் எல்லாம் நீதான் எனக்கு! எங்களுக்கென்றே சிறப்பாய்த் தோன்றிய எங்கள் தெய்வமும் நீதான்! என்று கூறி இந்தக் கோநகர் முழுவதும் சீதையின் கற்புக்கனலால்தான் அழிந்தது! ஆகையால், சீதையைத் தயவுசெய்து இராமனிடம் கொண்டுபோய்ச் சேர்த்துவிடு! அப்படிச் சேர்ப்பதுதான் நமக்கு வெற்றி! என்றான் விபீடணன்!

இதைக் கேட்டான், இராவணன்! கையோடு கையை நெரித் தான் வாயில் உள்ள வளைந்த பல்லிலிருந்து நிலாஒளி வந்தது போலத் தோற்றம் உண்டாயிற்று! கண்களிலிருந்து நெருப்புப் பொரி பிறந்தன. மார்பு புடைத்தது! வலிமை மிக்க தோள்களும், மணியாரங்களும் குலுங்கின! ஆங்காரச் சிரிப்புச் சிரித்தபடி,

என்னுடைய பெரும் சக்தியைக் கேவலம் மனிதர்கள் வென்று விடுவார்கள் என்று பேசிவிட்டாய்! நீ அப்படிப் பேசியது அச்சத்தினாலோ அல்லது மானுடர்பால் கொண்ட அன்பினாலோ ஐயா! என்கிறான்.

ஐயா! என்கிற சொல் இங்கே கோபத்தீயை உட்கொண்டு இருக்கிறது.

தம்பியைக் கொன்றான் என்ற பழி எனக்கு வேண்டாம். அதனால் தான் உன்னை இப்போது கொல்லாமல் விடுகிறேன். என்கண்முன்னால் நிற்பாயானால் நீ செத்தாய்! இக்கணமே! எங்காவது போய்த்தொலை! என்று சீற்றங்கொண்ட இராவணன் சாற்றுகின்றான் கம்பனில் இராவணனின் சீற்றம் உடன் பிறந்தவனையும் உதறித்தள்ளியது.

கைகேயி இராமனைக் காட்டுக்கு அனுப்பிவிட்டான் என்ற செய்தியைக் கேட்ட நாட்டு மக்கள் எப்படி யெல்லாமோ வருந்து கிறார்கள்! ஆத்திரம் கொள்ளுகிறார்கள் ஆனால், கொள்கை மறவனாம் இலக்குவன் உள்ளத்திலோ தணியாத கோபக்கனல் மூண்டு விடுகிறது! நாட்டின் ஆட்சியைத் தனக்குத் தேடிக் கொண டாள்! இராமனுக்குக் காட்டைக் கொடுத்துவிட்டாள் போலும்! இருக்கட்டும் என்று கூறி 'மூட்டாது அகலாக் கடைத்தீ யென மூண்டெழுந்தான்! அவனுடைய வாளில் பதிக்கப்பெற்று இருந்த இரத்தினங்கள் பளபளவென மின்னுகின்றன. முதுகில் தொங்கும் அம்பறாத்தூணியில் நிறைந்திருக்கும் அம்புகள் ஒளி வீசுகின்றன.

புவிப்பாவையின் பாரத்தைத் தீர்க்க வேண்டாமா? போருக்கு ஆசைப்பட்டவரையெல்லாம் பொசுக்க வேண்டாமா? என மேருமலையையும் சிறிதாக்கிக் காட்டும் பருத்த மார்பையும், திரண்ட தோளையும் உயர்த்தி நின்றான் இலக்குவன். சுருங்கச் சொன்னால், ஒரு அக்கினி மலையே அவதரித்தது போலக் காட்சி அளித்தான்! சீற்றத்தின் சின்னமானான்.

கம்பனில் காணும் பரதன் பண்பிற்சிறந்தவன்! இராமனின் தாயாகிய கோசலையைத் தன் பெற்ற தாயினும் மேலாகப் போற்றி வணங்குபவன்! இராமனைத் தன் தெய்வமாக வழிபடுபவன்.

தசரதன் கைகேயிக்கு வரத்தைக் கொடுத்துவிட்டு, "நீயும் பரதனும் எப்படியேனும் தொலைந்து போங்கள்! என்று சொல்லி மூர்ச்சையாய்ப் போன விவரம் எதுவும் பரதனுக்குத் தெரியாது. தசரதன் சொன்னதாகவே சொல்லித் தூதர்களை அவசரம் அவசரமாய்ப் பரதன் போயிருந்த கேகய நாட்டுக்கு அனுப்பினாள் கைகேயி! பரதன் பேரார்வத்தோடு தன் தந்தை தசரதனையும், தமையன் இராமனையும் கண்டு களிக்க ஓடோடி வருகின்றான். கோசல நாடு பொலிவிழந்து, பாட்டின்றிக், கூத்தின்றி, மகிழ்ச்சி ஆரவாரம் இன்றிக் காட்சி அளித்தது. அவனுக்கு ஒன்றுமே விளங்கவில்லை! வெந்திறல் வேந்தனைத் தேடி, இருப்பு நல்லிடம் எங்கணும் கண்டிலனாய், ஏதோ ஒரு பெரிய அசம்பாவிதம் நடந்திருக்கின்றது என்று ஐயுறுகின்றான்! தந்தை தென்படவில்லை யாயினும், அவனை நினைத்துக் கைகூப்பி நிற்கிறான் பரதன்! அப்போது ஒரு பெண் ஓடிவந்து அன்னை அழைப்பதாகச் சொல்கிறாள்.

பரதன் உடனே ஆவலோடு விரைந்து சென்று தந்தையை வணங்க வேண்டும்! எனது மனம் ஒரே பரபரப்பில் இருக்கிறது. சக்கரவர்த்தி எங்கே இருக்கிறார்? சொல்லம்மா என்கிறான்!

பரதன் எவ்வளவோ மனம் திகைத்து வருந்துகிறான் என்பது கைகேயிக்கு நன்றாகத் தெரிகிறது. ஆனால் அதை அவள் கொஞ்சமும் பொருட்படுத்தவில்லை ஓர் எக்களிப்போடு அசுரர்களின் ஆற்றலெல்லாம் அழியும்படி அவ்வளவு பெருத்த சேனையைக் கொண்டு தேன் படிந்த மாலையையுடையான் தேவரின் கைதொழ வானகம் அடைந்து விட்டான்" என்று யாதொரு வருத்தமும் இல்லாமல் கூறினாள். பின்னர் இராமனை வனத்திடைப் போக்கினேன். இந்த உலகத்தை உனக்கு ஆக்கினேன். இது பொறுக்காமல் வேந்தன் தன்னுயிர் நீக்கினான் என்றாள்.

இக்கொடுமையான சொற்களைக் கேட்ட மாத்திரத்தில் கைகள், காதுகளைப் பொத்திக் கொண்டன! புருவங்கள் குதித்துக் குதித்துக் கோரக் கூத்தாடின! மூச்சில் நெருப்புச் சுவாலைகள் வீசின!, கண்கள் இரத்தத்தைச் சிந்தின!

சூடின மலர்க்கரம், சொல்லின் முன்செவி
கூடின புருவங்கள் குதித்துக் கூத்து நின்று
ஆடின உயிர்ப்பினோ டழற்கொ முந்துகள்
ஓடின உமிழ்ந்தன உதிரம் கண்களே! - கம்பர்.

காலில் கழலணிந்தும், கையில் வில்லேந்தியும் படைகள் அணிவகுத்து வந்து கொண்டிருந்தன, ஆனாலும் அவைகளுக்குத் தலைவனான பரதன் துயரம் மிகுந்தவனாய்க் கால் நடையாகவே வருகின்றான்!

குகன் ஓர் இராமபக்தன், இராமன் அன்பினால் ஆட்கொண்ட மாபெரும் வீரன்? கங்கைக்கரையை நோக்கி வரும் பரதனின் படையை உற்றுப்பார்க்கிறான். மூன்று பத்தாயிரத்தை இரட்டி முற்றம் இப்படைகள் ஒப்புடை அண்ணலாகிய இராமனை அல்லவா தாக்க வருகின்றன என்று எதிர்க்கரையிலிருந்த குகன் எண்ணி விடுகிறான்? எடுத்த சீற்றத்தானாகிறான்!

எமனைப்போல் எதிரியைத் தரைமட்டமாக்கக் கூடிய வல்லமை படைத்த அவன் இதோ? பரதனுடைய சேனை எல்லாம் தூள் என்றே கருதி எழுகின்றான்? நகை மிகுகின்றது! கண்களில் தீ உண்டாகிறது! நாசிகளிலிருந்து புகை வெளிப்படுகிறது! வளைந்த வில்லானது போர் செய்யத் துடிப்பதுபோலப் புருவங்கள் வளைந்து துடிக்கின்றன! கத்தியை உறையிலிட்டுக் கட்டிக் கொள்கிறான். உதட்டைக் கடிக்கிறான்! வெறியில் சிதறும் வார்த்தைகள் வெட்ட வருவன போல ஒலிக்கின்றன. சூழ்ந்து நின்ற வேடர்களைப் பார்த்து அழிவுண்டாக்க வந்த பரதன் சேனைகளையெல்லாம் கொன்று குவிக்க வேண்டும் என்று முழங்குகிறான்!

திடீரென்று இராமனின் அரிய குணங்கள் குகனுக்கு நினைவு வந்துவிட்டன! உடனே எதிர்க்கரையைப் பார்த்தான். கோபாவேசம் பொங்கிவிட்டது!

இந்தக் கங்கைக்கரையைக் கடந்து செல்ல இவர்களால் முடியுமோ? யானைப்படைகளைக் கண்டு அஞ்சியோடும் வில்லாளோ யாம்? அண்ணல் இராமன் என்னைத் தோழன் என்று சொன்னது என்னாவது? இவர்களை விட்டுவிட்டால் இந்த உலகம் ஒன்றுக்கும் உதவாத வேடப்பயல் என்று என்னைப் பார்த்து ஏசாதோ?

ஆழநெடுந்திரை ஆறு கடந்திவர் போவாரோ
வேழநெடும்படை கண்டு விளங்கிடும் வில்லாளோ
தோழமைஎன்றவர் சொல்லிய சொல்ஒரு சொல்லன்றோ
ஏழமை வேடன் இறந்திலன் என்றெனை ஏசாதோ? - கம்பர்

இராமனின் மீது கொண்ட அன்பின் மிகுதியாலும், சீற்றம் கண்ணையும் கருத்தையும் மயக்கியதாலும். இராமனை வணங்க வந்த பரதனைப் பகைவனாகக் கருதிவிட்டான் குகன் "ஆத்திரம் அறிவுக்குச் சத்துரு என்பது மெய்யாகி விட்டது".

சீற்றம் கொள்ளாதவரே உலகில் இல்லை எனலாம். அது வெளிப்படும் முறைகளில்தான் வேறுபாடுகள் இருக்கும். இதனைக் கம்பனில் வரும் பாத்திரங்களின் சீற்றத்தைக் கொண்டே அறிந்து கொள்ளலாம்.

"சொல்லினால் சுடுவேன்! ஆனால், அது தூயவன் வில்லின் ஆற்றற்கு மாசு" என்று சீதையின் சீற்றத்தையும் காணலாம். அனுமனின் சீற்றம் இலங்கையை அழித்ததையும் காணலாம்.

இவ்வாறு சீற்றத்தின் தோற்றங்களும் அவை வெளிப்படும் முறைகளும் கம்பன் படைத்த காவியத்தில் நன்கு காணமுடியும்.

# உயிர்க் கொடை

**'பாவலர்மணி' சித்தன், புதுவை.**

இங்கும்...

"தம் பொருள் என்பு தம் மக்கள்" என்றார் வள்ளுவர். ஒருவர்க்குத் தம் பிள்ளைகளே தம் சொத்துக்கள் என்று பொருள்.

தம்மினும் மிக்க வலிமையுடைய பருந்தைக்கூடக் கோழியொன்று எதிர்த்துப் போரிடத் தயாராகிறது. இந்த அஞ்சாமைக்குக் காரணம் தம் சொத்தைக் காப்பாற்ற வேண்டும் என்ற துணிச்சல்தான்!

"கோழியும் தன் குஞ்சுதனைக்
கொல்லவரும் வான்பருந்தைச்
சூழ்ந்தெதிர்க்க அஞ்சாத தொல்புவி..."

என்பது பாவேந்தர் பாடல்.

தாய்க்குத்தான் இத்தகைய துணிவு வருமா? தந்தைக்கு வராதா? வரும்; இலக்கிய சான்றுகள் உள.

தம் பிள்ளைகளுக்காகத் தன் உயிரையே கொடுத்த இரண்டு (தந்தைப்) பறவைகளைப் பற்றிய செய்திகளை இங்குக் காண்போம்.

சடாயு ஒரு பறவை! அதைக் 'கழுகின் வேந்தன்' என்கிறார் கம்பர்.

இராவணன், சீதையைத் தரையொடு பெயர்த்தெடுத்துத் தேரில் வைத்துக்கொண்டு விண்வழியே செல்கிறான்.

அப்போது சீதை.

"மலையே மரனே மயிலே குயிலே
கலையே பிணையே களிறே பிடியே"

என் துயரை என் தலைவனுக்கு உரையீர்- என்று புலம்பிக்கொண்டே போகிறாள்!

சீதை, இராவணனை நிந்தித்துப் பேசும் குரல், அம்மலைப் பகுதியில் வாழும் கழுகரசனின் காதில் விழுகிறது; துடித்தெழுகிறார்!

"எங்கடா போவதெங்கே? நில்லு, நில்லு" என்று இடிமுழக்கம் போல் அதட்டிய வண்ணம் சடாயு இராவணனின் எந்திரத் தேரை இடைமறித்தார்!

சீதையை இராவணன் கடத்திக் கொண்டு போகிறான் என்பதை உணர்கிறார்.

"நீ உயிர் பிழைக்க வேண்டுமெனில், சீதையை விட்டுவிடு" என்கிறார்.

இராவணன் அவ்வளவு எளிதில் விட்டு விடுவானா என்ன?

சடாயு, சீதையிடம் "இவன் பத்துத் தலைகளையும் பனம்பழக் கொத்துக்களை உதிர்ப்பதுபோல் வீழ்த்துவேன்" என்கிறார்

போர் மூள்கிறது.

போரில், இராவணனின் வில்லைச் சடாயுதம் காலால் ஒடித்தார்! இராவணனின் சூலப் படையை அஞ்சாது தம் மார்பில் ஏற்றார்: இராவணனது தேர்ப்பாகன் தலையைக் கிள்ளி இராவணன் முகத்தில் எறிந்தார்.

பிறகு, இராவணனின் தண்டாயுதத்தால் தாக்குண்டு தரையில் வீழ்ந்தார்.

மீண்டும் எழுந்து இராவணனது தேரில் பூட்டியிருந்த பதினாறு குதிரைகளையும் மூக்கால் கொத்திக் கொன்றார்.

கடும்போர் முடிவில், இராவணன், தன் வரபலத்தால் பெற்ற 'சந்திரகாசம்' என்னும் வாளையுருவிச் சடாயுவின் சிறகுகளை வெட்டி வீழ்த்துகிறான்!

சடாயு குருதிக்கடலில் மூழ்கி கிடக்கிறார்.

சடாயு ஒரு பறவை; வலிய பறவைதான்! அதனிடம், இராவணனை எதிர்த்துப் போரிடுவதற்குரிய போர்க்கருவிகள் இல. மூக்கு, கால்கள், சிறகுகளே அவர் போர்ப்படைகள்!

இராவணனோ முக்கோடி ஆண்டு வாழ்நாள் பெற்றவன்; பெருந்தவ வலியுடையவன்; சிவபெருமானால் 'யாராலும் வெல்ல முடியா' தென்ற வரத்தைப் பெற்றவன்; அவன் தோள் வலிக்கு இணையுடையார் உலகில் எத்திக்கிலும் இலர்.

"முக்கோடி வாழ்நாளும், முயன்றுடைய
பெருந்தவமும், முதல்வன் முன்நாள்
'எக்கோடி யாராலும் வெலப்படாய்'
எனக்கொடுத்த வரமும், ஏனைத்
திக்கோடும் உலகனைத்தும் செருக்கடந்த
புயவலியும்...." (இரா-வதை. பட. 196)

உடையவன், என்பதைச் சடாயு அறிந்தே இருந்தார்! 'தன் வலியும் மாற்றான் வலியும்' நன்கு அறிந்திருந்த அவர்,

'வெம்மடங்கல் வெகுண்டனைய சினமும்' -
'சங்கரன் கொடுத்த வாளை' யுமுடைய

இராவணனைத் தம் மூக்காலும், காலாலும், சிறகுகளாலும் வெல்ல முயன்றாரே அதற்குத் 'தந்தைப் பாசம்' என்பதைத் தவிர வேறு என்ன காரணம் இருக்க முடியும்?

தம் மைந்தர்கள்மேல் உள்ள அன்பால், அவர் ஒரு பெரிய வீரனையே எதிர்க்க முற்பட்டுப் 'போக்கிலா உலகம் புக்கார்' என்பதே உண்மை!

சடாயுவின் மைந்தர்கள் யார்?

தசரதனுக்குச் சடாயு உயிர்த் தோழர்!

தந்தையின் நண்பரையும் 'ஒரு தந்தை' என்கிறது அறநூல்!

"நெஞ்சத்து அகநக நட்பது நட்பு" (குறள். 786)
என்பது வள்ளுவம்.

உள்ளம் மகிழ - உள்ளன்புடன் பழகுவதே உயர் நட்பு - என்பது கருத்து.,

நட்புக்கு இலக்கணமாய் அமைந்தவர் சடாயு.

அதனால், தசரதன் மைந்தர்களுக்கு இவர் தந்தையாகிறார். சடாயுவைத் தன் தந்தை என்றே இராமபிரான் போற்றுகிறார்.

வாலியிடம் பேசும்போது, இராகவன்,

"வீடுபெற்று எய்திய
எந்தையும் எருவைக்கு அரசன் அல்லனோ?"
(கிட். வாலிவதை. பட. 118)

என்கிறான். எருவைக்கு அரசன் = கழுகரசன்.

உயுத்த காண்டத்தில்,

அனுமன் கூறியன கேட்டு, உவந்த இராமபிரான் பேசும் பேச்சாக வரும் பாடல் இது;

'சரண் எனக்கு யார்கொல்?'
என்று சானகி அழுது சாம்ப,
'அரண் உனக்கு ஆவேன், வஞ்சி -
அஞ்சல்!' என்று அருளின் எய்தி,
முரணுடைக் கொடியோன் கொல்ல
மொய்அமர் முடித்து, தெய்வ
மரணம் என்தாதை பெற்றது
என் வயின் வழக்கு அன்று ஆமோ?
(யுத்த காண் - வீடண-அடை113)

முரணுடைக் கொடியோன் = அறத்திற்கு மாறான குணமுடைய கொடியன்; = இராவணன்.

சானகி, "என்னைக் காப்பார் யார்?" என்று கூக்குரலிட ஓடிவந்து, அபயம் தந்து, இராவணனால் சிறகு வெட்டப்பட்டு, நடந்த செய்தியை இராம பிரானுக்குரைத்து மரண மடைந்தமையின் சடாயுவின் மரணம் 'தெய்வமரண' மாயிற்று.

என் தாதை = என் தந்தை........ இராமன் சடாயுவைப் பெரிய தந்தையாகப் பாவித்தான். அதனால், வைணவ சமயத்தார் சடாயுவைப் 'பெரிய உடையார்' என்பர்.

மற்றோர் இடத்தும், இலக்குவன் - இராமனிடம், "உந்தையை உயிர் பண்டு உண்டான்" என்கிறான்.

உன் தந்தை = உந்தை யாயிற்று. உன் தந்தை என்றது சடாயுவை.

இனி, தசரதன் மைந்தர்களான இராம - இலக்குவர்களைத் தம் மைந்தர்களாகச் சடாயு கூறிய இடமும் உண்டு.

"வந்திலர் மைந்தர்; நம் மருகி எய்திய
வெந்துயர் துடைத்தனென், என்னும்
மெய்ப்புகழ் தந்திலர்" (சடாயு உயி. நீத். பட - 53)

வந்திலர் மைந்தர் என்றது இராம இலக்குவர்களை. 'மருகி என்றது சானகியை'. மருகி - மருமகள்.

இப்படி வருமிடங்கள் வேறுமுள. இவைகளால், தந்தை - மகன் உறவு நன்கு விளங்குகிறது.

இராமபிரான், சிறகு வெட்டப்பட்டுத் துறக்கம் புக்க தன் தந்தையை (சடாயு)

இரண்டு கைகளாலும் ஏந்தி எடுத்து வைத்துத் தீமூட்டிப் பின் இறுதிக் கடன் செய்து நீராடிக் கடன் கழித்தார் என்கிறது இராம காதை.. ஒரு மகன் தன் தந்தைக்கு மட்டுமே செய்ய வேண்டிய இறுதிக் கடனை இராமபிரான் சடாயுவுக்குச் செய்தார்.

சடாயு தம் உயிரைத் தம் மக்களுக்காக - மருகிக்காகக் கொடுத்தார் அல்லரோ?

"தன் உயிர் புகழ்க்கு விற்ற சடாயு" என்று இவரைக் கம்பர் போற்றுகிறார்.

இது, ஒரு பறவையின் 'உயிர்க் கொடை!'

அங்கும்...

19ஆம் நூற்றாண்டில் பிரஞ்சு நாட்டில் வாழ்ந்த கவிஞன் "ஆல்பிரேட் தெ முய்சே" (Alfred de Musset) என்பவன். அவன் ஒரு இனிய கவிதை படைத்துள்ளான்.

அதுவும் ஒரு பறவையின் 'உயிர்க் கொடை' பற்றியதேயாம். அக்கவிதையில் வரும் பறவையின் பெயர் 'பெலிகான்' (Pelican). கடற்கரையில் வாழும் ஒருவகை நீர்ப்பறவை அது.

அக்கவிஞன் எழுதியுள்ள நீண்ட அக்கவிதையின் பெயர் "மே மாதத்து இரவு" (Nuit de Mai. 1837) என்பதாம்.

'பெலிகான்' பறவைகளுள் தாய்ப் பறவை தன் குஞ்சுகளைக் காப்பாற்றுவதில்லை.

குஞ்சுகளைக் காக்கும் தாயாக ஆண் (தந்தைப்) பறவை மட்டுமே செயல்படுகிறது.

'பெலிகான்' பறவைக்கு வாய் அலகின் அடிப்பகுதியில் (தொண்டையில்) ஒரு பை உண்டு, அப்பறவை தன் குஞ்சுகளுக்குத் தேவையான இரையை (சிறு மீன் முதலிய வைகளை) தேடித் தன் தொண்டைப் பையுள் சேமித்து வைத்துக் கொள்ளும்.

இனி, பிரெஞ்சுக் கவிதையில் - ஒரு பகுதியின் கருத்தைத் தருகிறேன்.

"அன்று அலைமோதும் கடலோரத்தின் பாறைகளுக்கிடையில் உள்ள புதர்களிலிருந்து, தம் தந்தைப் பறவையின் வரவைக் குஞ்சுகள் எதிர்பார்த்திருந்தன.

அவ்வளவில், தந்தைப் பறவை, பறந்து வந்து இறங்குவதைக் கண்ட குஞ்சுகள் தம் பசியைப் போக்கும் இரை வந்து விட்ட தென்று எண்ணிக் குதித்துக் குதித்துப் பேராவலுடன் தம் தந்தையை நோக்கி ஓடின.

அந்தப் 'பெலிகான்' பறவை மௌனமாகப் பாறை ஒன்றின் மீது ஏறித் தன் குஞ்சுகளை அன்புடன் அரவணைத்துக் கொள்கிறது.

அன்று எங்கெங்கோ தேடியும், கடலின் ஆழத்திலும், வெளியிலும் ஒன்றும் கிடைக்கவில்லை!

அன்றைய நாள் அப்படி!

அதனால், அப்பறவையின் தொண்டைப் பை அன்று வெறும் பையாகவே இருந்தது.

வாயைத் திறந்து, அப்பறவை தன் வாயில் ஒன்றுமில்லை என்பதை வருத்தத்துடன் தன் குஞ்சகளுக்குக் காட்டுகிறது.

அரும்பாடு பட்டும் உணவு கிடைக்காமல் தம் தந்தைப் பறவை திரும்பியிருக்கிற தென்பதைக் குஞ்சுகள் எவ்வாறு அறியும்?

தம் தந்தையின் திறந்த வாயில், உணவிருக்கும் என்று நினைத்து வழக்கம்போல் குஞ்சுகள் கொத்தி இழுக்கத் தொடங்கின.

பையில் உண்வு இல்லை, எனினும் குஞ்சுகள் கொத்துவதை நிறுத்தவில்லை.

இருப்பினும், தன் குஞ்சுகளின் மகிழ்ச்சிக்காகத் தன் துன்பத்தைப் பொறுத்துக் கொண்டு, திறந்த வாயை மூடாமல் காட்டிக் கொண்டே இருக்கிறது.

அந்தப் பேருவகையில் தான் கொடூரமாகக் கொல்லப் படுவதை அப்பறவை மறந்து விடுகிறது.

மாறாக எங்கே குஞ்சுகள் உண்பதை நிறுத்தி விடுமோ என்று அஞ்சுகிறது; என்னே அதன் அன்புள்ளம்!

குஞ்சுகள் கொத்தக் கொத்தத் தந்தைப் பறவையின் இரைப்பையும், மார்பகமும் கிழிகின்றன; குருதி கொட்டுகிறது.

பிள்ளைத் தன்மையை உடைய அக்குஞ்சுகள், தம் தந்தைப் பறவையின், மார்பகத்தின் உள்ளீடுகளைக் கொத்தி உண்ணத் தொடங்குகின்றன.

முடிவில் 'பெலிகான்' சிறகுகளை அடித்துக்கொண்டு பேரொலியுடன் மல்லாந்து வீழ்ந்திறக்கின்றது.

குஞ்சுகள் இன்னும் கொத்துவதை நிறுத்த வில்லை; மார்புத் தசையைத் தின்றுகொண்டே இருக்கின்றன,

ஆம்! இதுவும் ஓர் 'உயிர்க் கொடை' தானே!
சடாயுவும், பெலிகானும் பறவைகள்!
இரண்டும் ஆண் பறவைகள்!
இரண்டும் தாயன்பினும் மிக்க அன்புடையவைகள்!
இரண்டும் மார்பு பிளந்து, குருதி கொட்டி உயிர் துறந்தவை!
இரண்டும் தம் மக்களுக்காகவே உயிர் கொடுத்தவை!

இதிகாசமாயிருப்பின் என்ன? இலக்கியமாக இருப்பின் என்ன? இரண்டும் ஒரே செய்தியைத் தருகின்றன! இவைகட்கு மேலாக இவ்விரு பறவைகளின் தியாகம் நம் நெஞ்சை நெகிழ்விக்கிறது!

'தியாகம்' ஆறறிவு படைத்தவர்களுக்கு மட்டுமே உரியதன்று - உயிரினத்திற்கே பொது!

இதிகாசத்தை நம்பாதவர் இருப்பர், 'பெலிகான்' கதை அவ்வப்போது நடப்பது; நம்பத்தான் வேண்டும்!

# அந்தியும் விடியலும்

கலைமாமணி செவ்வேள், புதுவை.

காலத்தாலும் இடத்தாலும் மொழியாலும் வேறுபட்ட பாவலர் இருவர்க்கு ஒரே வகையான கற்பனை தோன்றுதலும் - அதனை அவர்கள் ஒரே வகையாக வெளியிடுதலும் ஒன்றும் புதுமையன்று. இதை எடுத்துக் காட்ட எத்தனையோ சான்றுகள் உள்ளன.

ஷார்ல் பொதலேர் (Charles Baudelaire) என்ற பிரெஞ்சுக் கவிஞனின் கவிதைகளைப் படித்தபோது, சில இடங்களில் கம்பனை நினைவு படுத்துவது போலச் சில தொடர்களைக் காண நேர்ந்தது. அப்போது எனக்கு மேற்சொன்ன கருத்தே நினைவுக்கு வந்தது.

பொதலேரைப் பற்றித் தமிழுலகில் அவ்வளவாகத் தெரியாது. விக்தோர் உய்கோ (Victor Hugo) வைத் தெரியும். "விக்தோர் உய்கோ" என்றுதான் சொல்லவேண்டும் - ஆங்கிலம் படித்தவர் சொல்வதுபோல 'விக்டர் ஹ்யூகோ' அல்ல. சுத்தானந்தபாரதி எழுதி வழங்கிய "ஏழை படும் பாடு" (Les Misérables) மற்றும் "இளிச்சவாயன்" (L'Homme Qui Rit) என்ற அவனுடைய நூல்களின் பெயர்ப்பு, அவன் பெயர் பரவலாகத் தெரிய ஒரு வாய்ப்பை ஏற்படுத்தியது. பின்னர் வந்த "ஏழை படும்பாடு" என்ற திரைப்படம் சிற்றூர்களில் கூட அவன் பெயர் தெரியும் அளவுக்கு ஒரு விளம்பரம் தந்தது. மோப்பஸானைப் (Maupassant) பலர்க்குத் தெரியும். அவன் பெயர் பரவப்புதுமைப் பித்தனும் ஒரு காரணமாய் இருந்தார்.

அவருடைய கதைகளில் மோப்பஸானித் தாக்கம் இருந்ததாகச் சொல்வார்கள். மொலியேரைப் (Moliere) பற்றியும் பலர்க்குத் தெரியும். ஈடு இணையற்ற நகைச்சுவை நாடகங்களை உலகுக்களித்தவன் அவன். கஞ்சன் என்றொரு திரைப்படம் வந்ததே, அது அவனுடைய கதைதான். ஆனால், மொலியேரைத் தெரிந்த அளவுக்கு அவன் காலத்தவரான கொர்னேய் (Corneille) ரஸீன் (Racine) என்ற இரு பெரும் நாடகாசிரியர்களைத் தெரியாது. இதேபோல்தான், விக்தோர் உய்கோவைத் தெரிந்த அளவுக்கு அவர் காலத்தவனான பொதலேரைத் தெரியாது. ஆயினும், அண்மைத் காலத்தில் அவனைப் பற்றிச் சிறிது பேசப்படுகிறது. குறிப்பாக, புதுக்கவிதை வட்டத்தில் அவன் பெயர் அதிகமாக அடிபடுகிறது.

தமிழ்நாட்டின் விதி என ஒன்றைச் சொல்வார்கள். அதாவது, கவிஞர் வாழுங்காலத்தில் யாரும் அவனைக் கண்டு கொள்ள மாட்டார்கள். அவன் செத்த பிறகு எல்லோரும் அவனைத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டாடுவார்கள். விழா எடுப்பார்கள். சிலை வைப்பார்கள். மண்டபம் கட்டுவார்கள். எல்லாம் செய்வார்கள். இதுதான் தமிழ்நாட்டின் தலைவிதி எனச் சொல்வதுண்டு. இந்தத் தலைவிதி பொதலேருக்கும் இருந்தது. அவன் வாழ்ந்த காலத்தில் அவனுடைய கவிதைகள் மதிக்கப் பெறவில்லை. அவை ஒழுக்கக் கேட்டை வளர்க்கும் என்று குற்றம் சாட்டினார்கள். நீதி மன்றம் அபராதம் கூட விதித்தது. ஆனால், அவன் இறந்த பிறகு, இலக்கிய உலகம் அவனை உயர்ந்த இடத்தில் வைத்துப் போற்றியது. புதிய தடங்கண்டவன் என்று பாராட்டியது. உருவகக் கவிதைகள் முன்னோடி என்று கொண்டாடியது.

பொதலேரின் உலகியல் வாழ்க்கை மகிழ்ச்சியாக அமையவில்லை. ஆறு வயதில் அவன் தந்தையை இழந்தான். அடுத்த ஆண்டில் அவன் தாய் மறுமணம் செய்து கொண்டாள். மாற்றாந் தகப்பனுக்கும் அவனுக்கும் ஒத்துவரவில்லை. அவனை விடுதியில் சேர்த்தார்கள். அங்கிருந்தே படித்தான். படிப்பு முடிந்ததும் விடலையாய்த் திரிந்தான். விருப்பம்போல் வாழ்ந்தான். கடைசிக் காலத்தில் போதைப் பொருளுக்கு அடிமையாகி நோய்வாய்ப்பட்டு மாண்டான்.

இந்த வாழ்க்கை அவன் கவிதைகளில் எதிரொலித்தது. நம்பிக்கை வறட்சி, தோல்வி, நிராசை, மன உளைச்சல், மது, மாது, சாத்தான் நரகம் இவற்றைப் பற்றியெல்லாம் அவன் பாடினான். உலகத்தால் தீயவை என்று வெறுத்தவற்றை அவன் பாடு பொருளாகக் கொண்டான். அதிலேதான் அவன் இன்பங்கண்டான். "தீக்குள் விரலை வைத்தால் நின்னைத் தீண்டும் இன்பந் தோன்றுதடா நந்தலாலா" என்றானே பாரதி - அதுபோல் தான்!

45 ஆண்டுகள் வாழ்ந்த பொதலேர் (1821-1866) எழுதியது மிகவும் குறைவு. இப்போது, அவன் பெயரைச் சொல்லிக் கொண்டிருப்பது ஒரே ஒரு கவிதை நூல்தான்! அதற்குத் தலைப்பு "தீமையில் பூத்த மலர்கள்" (Les Fleurs du Mal). அது காப்பியமன்று. தனிப் பாடல்களின் தொகுப்பு. அதிலே சில கவிதைகள் அந்தி, வைகறை, கதிரவன், இரவு, மாலை மயக்கம் என்ற தலைப்புகளில் உள்ளன.

கதிரவன் எழுதல், விழுதல், நிலவு தோன்றுதல் - மறைதல், காலை, மாலை இவற்றைப் பற்றிக் கம்பன் தன் காப்பியத்துள் அள்ளித் தெளித்தாற்போல அங்கங்கே சொல்லிச் செல்வான். ஆயின் அவற்றைக் காப்பியக் கதையோடு ஒட்டுவனவாகத் தற்குறிப்பேற்றத்தில் அமைத்திருப்பான். அப்படிப்பட்ட நிலையைப் பொதலேரிடம் காணமுடியாது. ஏனென்றால் அவன் காப்பியஞ் செய்யவில்லை. அவன் வாழ்ந்த குழலுக்கேற்ப அக்காலத்துக் காட்சிகளை அவன் படம் பிடித்துக் காட்டுவான் என்றாலும், இரண்டோரிடங்களில் இருவரிடையே ஓர் ஒற்றுமை தட்டுப்படுகிறது. இனி அவற்றைக் காண்போம்!

சடாயுவுக்கு இறுதிக்கடன் இயற்றி முடித்தபின் இராம இலக்குவர் ஒரு மலையில் வந்து தங்குகின்றனர். அந்தியை அடுத்து இரவு வரப்போகிறது. அயோமுகிப் படலத்தின் தோற்றுவாயாக அக்காட்சியைச் சொல்கிறான் கம்பன்.

அந்திவந் தணுகும் வேளை<br>
    அவ்வழி அவரும் நீங்கிச்<br>
சிந்துரச் செந்தீக் காட்டோர்<br>
    மைவரைச் சேக்கை கொண்டார்;<br>
இந்திரற் கடங்கல் செல்லா<br>
    இராக்கதர் எழுந்த தென்ன<br>
வெந்துயர்க் கூற்றம் ஆய<br>
    விரிஇருள் வீங்கிற் றன்றே!

அரக்கர் கூட்டம் எழுந்ததுபோல இருள் வந்தது. துயரத்தை மேலும் வலியுடைய தாக்கும்படியான இருள் வீங்கியது. இதுதான் மையக் கருத்து. இதே கருத்து பொதலேரின் பாடலில் தென்படுவதைக் காண்போம்.

அந்தி (Le Crepuscule du Soir) என்னுந்தலைப்புள்ள கவிதை அது. அதிலே ஓர் இடம் :

கள்வர்கள்,
இரக்க உணர்வும்
சமாதான நோக்கும்
இல்லாக் கள்வர்கள்
தம் பணியைத்
தொடங்கப் போகிறார்கள்,
மெல்ல மெல்ல
ஓசை படாமல்
கதவுகளைத் திறந்து
கல்லாப் பெட்டிகளை உடைத்து!
எல்லாம் எதற்கு?
ஏதோ கொஞ்ச
நாள்கள் வாழ்வதற்கு!
ஆசை நாயகியர்க்கு
ஆடையணி
சூட்டிப் பார்ப்பதற்கு!

இந்த வரிகளைப் படிக்கும்போது சிலருக்குத் திரு மங்கையாழ்வாரின் நினைவு வரலாம். அவரும் கள்வராய் இருந்தவர் அல்லவா! "கள்வனேன் ஆனேன்! படிறு செய்திருப்பேன்!" என்றாரே! அவர் பாடுகின்றார்:

"ஆவியே! அமுதே! எனநினைந் துருகி
அவரவர் பணைமுலை துணையா
பாவியேன் உணரா தெத்தனை பகலும்
பழுதுபோய் ஒழிந்தன நாள்கள்!"
"சேமமே வேண்டித் தீவினை பெருக்கித்
தெரிவைமார் உருவமே மருவி
ஊமனார் கண்ட கனவிலும் பழுதாய்
ஒழிந்தன கழிந்தஅந் நாள்கள்!"

"ஏதோ கொஞ்ச நாள்கள் வாழ்வதற்கு" என்று பொதலேர் கழிவிரக்கந் தோன்றச் சொல்லும் அச்சொற்கள், "பழுதுபோய் ஒழிந்தன நாள்கள்" "ஒழிந்தன கழிந்த அந்நாள்கள்" என்ற ஆழ்வாரின் பெரிய திருமொழியை நினைவு படுத்தவே செய்கின்றன. பொதலேர் சொல்லும் கள்வர்கள் "நீர்க்கோல வாழ்வை நச்சி-யாருடனும் ஒத்துப்போகாத (அதாவது யார்க்கும் அடங்காத) இரக்கமே இல்லாதவர்கள். அவர்கள் இனி பணி தொடங்கப் போகும் இரவு நேரம் என்பது அவன் தீட்டும் ஓவியம். இதிலே,

"இந்திரற்கு அடங்கல் செல்லா
இராக்கதர் எழுந்த தென்ன"

என்ற கம்பனின் சுவடு தெரிகிறதல்லாவா! அடுத்து, பொதலேர் மற்றொரு கருத்தைச் சொல்வான். அந்தியை அடுத்து இருள் வரப் போகின்றது. அந்த நேரம் எப்படிப்பட்ட நேரம்.

"நோயாளிகளின்
துயரங்கள்
கசப்பில் முற்றும்
நேரம்!"

பொதுவாக, இரவு பிணியுற்றோரின் துயரத்தை மிகுவிக்கும் தன்மையது. அது உடலைப் பற்றியதாயினும் சரி, உள்ளத்தைப் பற்றியதாயினும் சரி.

"வெந்துயர்க்கு ஊற்றம் தருவதுதான்" அதன் வேலை! அதையே தான் இருவரும் சொல்கின்றனர்.

கம்பனின் செந்தமிழ்ப் பூந்துகில் பொதலேரிடம் பிரஞ்சு வண்ண அங்கியாக மாறி நிற்கிறது. அவ்வளவுதான்!

இனி மற்றொரு காட்சி.

போர்க்களத்தில் கும்பகருணன் பலரோடு பலவாறாகப் போர் செய்து கொண்டு நிற்கிறான். அங்கதன், நீலன், அனுமன், இலக்குவன், சுக்ரீவன், இப்படிப் பலரைச் சமாளித்துவிட்டு நிற்கிறான். இப்போது இராமனுக்கும் அவனுக்கும் மோதல். இராமன் வஞ்சினங் கூறி இரண்டு அம்புகளை அவன் நெற்றியை நோக்கி விடுகிறான். அந்த இரண்டு அம்புகளும் அவன் நெற்றியில் தைத்து நின்ற வண்ணம் ஒளி செய்கின்றன. அவன் முகத்திற் பெருகிய குருதி சுற்றிலும் செந்நிறத்தைப் பரப்புகிறது. இது எப்படி இருக்கிறது? கதிரவன் எழ ஆயத்தமாய் இருக்கிறான். அதற்கறிகுறியாக வானத்தில் செக்கர் பரந்துள்ளது. அந்த செக்கரிடையே கதிரவனுடைய கதிர்கள் ஒளிகான்ற வண்ணம் உள்ளன. இதைக் கம்பன் எப்படி ஒப்புமைப்படுத்திக் காட்டுகிறான்? குருதியால் மூடப்பட்ட கும்பகருணன் முகம்தான் கதிரவன். அவன் நெற்றியில் தைத்து நிற்கும் அன்புகள் கதிரவனின் ஒளிக்கதிர்கள். குருதியின் செந்நிறப் பின்னணி வானத்தின் செக்கர். இதைக் காட்டும் கம்பன் பாடல் :

சுற்றிய குருதியின் செக்கர் சூழ்ந்தெழ
நெற்றியின் நெடுங்கணை ஒளிர நின்றவன்
முற்றிய கதிரவன் முளைக்கும் முந்துவந்து
உற்றெழும் அருணன(து) உதயம் போன்றனன்

இனி, பொதலேரிடம் வருவோம்.

பொதலேர் கதிரவன் மறைவை ஒரு பாடலில் காட்டுகிறான். "மாலை இனிமை" (Harmonie du Soir) என்ற தலைப்புள்ள கவிதை அது. அதிலே ஓர் இடம் :

வானம்
துயர் கொண்டுவிட்டது.
ஆனால்
அழகாய் உள்ளது!
இளைப்பாற
இடந்தரும்
ஒரு பெரிய
பயணர் விடுதிபோல!
கதிரவன்!
அவனுக்கு
இரத்தக் கசிவு!
அவனிடமிருந்து
குருதி
பெருகி
உறைந்து
அதிலேயே
அவன் மூழ்கிப்போனான்!

எப்படி, பொதலேரின் கதிரவன் மறைவு!

கம்பன் காட்டும்-

குருதி மூடிய கும்பகருணன் முகம்!

பொதலேர் காட்டும்-

குருதியில் மூழ்கிய பரிதியின் வடிவம்! - இரண்டுக்கும் ஓர் ஒற்றுமை இருப்பது போலத் தெரிகிறதே! ஆம்!

ஆனாலும்,

பொதலேருடையது அந்தி - கம்பனுடையது விடியல்.

# திருவள்ளுவரும் இளங்கோவடிகளும்

**சந்தப்பாமணி புலவர் அரங்க நடராசன், புதுவை.**

திருவள்ளுவரும் இளங்கோவடிகளும் மிகமிக ஒற்றுமை யுடையவர்கள். எவ்வாறு ஒற்றுமையுடையவர்கள்?

திருக்குறள் என்ற ஒரே ஒரு நூலைப்படைத்து உலகப் புகழ் பெற்றவர் திருவள்ளுவர்; சிலப்பதிகாரம் என்ற ஒரே ஒரு நூலைப் படைத்து உலகப்புகழ் பெற்றவர் இளங்கோவடிகள். திருவள்ளுவர் இயற்றியதாகத் திருக்குறளைத் தவிர வேறு ஒரு நூலோ, ஒருபாடலோ கிடையாது. சிலப்பதிகாரத்தைத் தவிர இளங்கோவடிகள் இயற்றியதாக வேறு ஒரு நூலோ, பாடலோ கிடையாது. அந்த வகையில் இருவரும் ஒற்றுமையுடையவர்கள். "யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல் வள்ளுவர்போல் இளங்கோவைப்போல் பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை" என்று பாரதியாரால் பாராட்டப்பட்டவர்கள் இவ்விருவரும்.

1. கோவலனுக்கும் கண்ணகிக்கும் திருமணம் முடிந்த நிலையில், புதுமணமக்கள் தனித்திருக்கின்றனர். அப்போது கோவலன் கண்ணகியின் நலங்களைப் பாராட்டிப் புகழ்கிறான். எப்படிப் புகழ்கிறான் பாருங்கள்.

"அழகென்றால் மயிலைத்தான் சொல்லுவார்கள் அந்த மயில்களோ, உன் அழகுக்குத்தோற்றுக் காட்டிற்கு ஓடி விட்டன. பெண்களின் அழகு நடைக்கு அன்னத்தைத்தான் உவமையாகச் சொல்வார்கள். அந்த அன்னங்களோ, உன்னுடைய நடையழகுக்குத் தோற்று வயல்களில் பூத்திருக்கும் பூக்களில் சென்று மறைந்து கொண்டன. ஆனால், சிறிய பச்சைக்கிளி மட்டும் (குழலிசையையும், யாழிசையையும், அமிழ்தத்தையும்) ஒன்றாகச் சேர்த்துக் குழைத்ததைப் போன்று உள்ள உன்னுடைய முதிராத மழலைச் சொல்லுக்குத் தோற்றது. ஆனாலும், மயிலைப்போலவும் அன்னத்தைப்போலவும் ஓடிவிடாமல் உன் இனிய மொழியைக் கற்றுக்கொள்ள வேண்டும் என்று விரும்பி உன்னை விட்டு நீங்காமல் உன் மலர்போன்ற கையிலேயே இருக்கிறது பார்த்தாயா?" என்று புகழ்கிறான். இதில் கண்ணகியின் வாய்மொழியைக்,

"குழலும் யாழும் அமிழ்தும் குழைத்தநின்
மழலைக்கிளவிக்கு வருந்தின வாகியும்"
- (மனை. அ.ப. கா. 58-59)

என்று கூறுகிறான். இந்த அடிகளை இளங்கோவடிகள் எங்கிருந்து எடுத்தார்?

"குழலினிது யாழினிது என்பதம் மக்கள்
மழலைச் சொல் கேளாதவர்". - (குறள் 66)

என்ற வள்ளுவரின் குறளில் இருந்துதான் என்பது விளங்குகிறதல்லவா!

பூம்புகாரில் இந்திரவிழா. அங்காடித் தெருக்களில் எல்லாம் தோரணங்கள். அங்கே ஓரிடத்தில் காவற்பூதம் ஒன்று உள்ளது. காவிரிப்பூம் பட்டினத்தைக் காப்பதற்காகவும், அதனை ஆட்சிசெய்யும் சோழ மன்னனைக் காப்பதற்காகவும், இந்திரனின் ஏவலினால் தேவருலகத்திலிருந்து வந்து எழுந்தருளியுள்ள பூதம் அது. அந்தப் பூதத்திற்குத் துணங்கைக் கூத்தாடும் பெண்களும், குரவைக் கூத்தாடும் பெண்களும், சுண்டல், எள்ளுருண்டை, கறிச்சோறு, பொங்கற் சோறு முதலியவற்றைப் படையலாக இட்டு, பூவைச் சூட்டி, நறும்புகை காட்டி வழிபடுகின்றனர். அப்போது தெய்வம் ஏறிய பெண்கள் ஆடுகின்றனர். ஆடும்போது அவர்கள் தம் நாட்டை வாழ்த்துகின்றனர். அவர்கள் வாழ்த்துச் சொல்லைப் பாருங்கள்.

"பசியும் பிணியும் பகையும் நீங்கி
வசியும் வளனும் சுரக்கஎன" (இந்.வி.எ.கா. 72-73)

வாழ்த்தியதாக இளங்கோவடிகள் கூறுகிறார். நாட்டில் முதலில் பசி நீங்கவேண்டுமாம்! இரண்டாவது பிணி நீங்கவேண்டுமாம்! மூன்றாவது பகைநீங்க வேண்டுமாம்!

இங்கே பாருங்கள்! எது நாடு? என்ற வினாவுக்கு வள்ளுவர் கூறும் பதிலை

"உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேரா தியல்வது நாடு" (குறள் 734)

முதலாவது பசி சேராதிருப்பது நாடு; இரண்டாவது பிணி சேராதிருப்பது நாடு; மூன்றாவது பகை சேராதிருப்பது நாடு. - வள்ளுவரின் முறைவைப்பையும், கருத்தையும் மாற்றாமல் அப்படியே இளங்கோவடிகள் எடுத்தாண்டிருக்கிறார் என்பதை இங்கே காண்கிறோம்.

3. கோவலனும், கண்ணகியும், கவுந்தியடிகளும் மதுரையை நோக்கிச் சென்று கொண்டிருக்கின்றனர் வழியில் ஓரிடத்தில் சாரணர்கள் அவர்கள் முன் தோன்றுகின்றனர். அவர்கள் கவுந்தியடிகளுக்குப் பிறவிக்கடலைக் கடப்பதற்குரிய வழிமுறைகளை விளக்கிக் கூறுகின்றனர். அதைக் கேட்ட கவுந்தியடிகள் அவர்களுக்குத் தம்கோட்பாடுகளை விரித்துரைக்கிறார் பாருங்கள்.

I. காமம், வெகுளி, மயக்கம் என்ற மூன்றையும் அவித்த அருகதேவனின் திருமொழியைக் கேட்கவே என் செவிகள் திறக்கும், மற்றவரின் மொழிகளைக் கேட்பதற்கு என் செவிகள் திறவா.

II. காமனை வென்ற அருகதேவனின் ஆயிரத்தெட்டு நாமங்களையே என் நாவானது நவிலும், மற்றவர் நாமங்களை நவிலாது.

III. ஐம்புலன்களையும் வென்ற அருகதேவனது இரண்டு பாதங்களை மட்டுமே என் கண்கள் காணும், மற்ற தெய்வங்களின் பாதங்களைக் காணா.

IV. அருளையும், அறத்தினையும் மேற்கொண்ட அருகதேவனின் திருஉருவத்திற்கே என் உடம்பு பூமியில் படியும், மற்ற கடவுளரின் உருவங்களுக்கு என் உடல் பூமியில் படியாது.

V. என் இரு கைகளும் அருகதேவனை வணங்குவதற்கே குவியும், மற்ற தேவர்களை வணங்குவதற்காகக் குவியா.

VI. மலரின் மீது நட்ந்த அருகதேவனின் தாமரை போன்ற பாதங்களையே என் தலையின் உச்சி தாங்கும், மற்ற தெய்வங்களின் திருவடிகளை என் தலையின் உச்சி தாங்காது, என்று கூறுமிடத்து

"மலர்மிசை நடந்தோன் மலரடி அல்லதென்
தலைமிசை உச்சி தானணிப் பொறாஅது" (நா.கா.கா. 204-5)

என்று இளங்கோவடிகள் கூறுகிறார். அந்த அடிகளில்

"மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்". - (குறள் - 3)

என்ற குறள் ஒளிவீசி நிற்பதைக் காண்கிறோம்.

4. திருமணம் முடிந்த கையோடு கண்ணகியின் கையால் சமைத்த உணவை உண்டான் கோவலன். மாதவியின் பின்

சென்ற பிறகு அந்த வாய்ப்பு அவனுக்கு ஏற்படவேயில்லை. அந்த வாய்ப்பு மீண்டும் மதுரைப் புறஞ்சேரியில் இடைக்குல முதுமகள் மாதரி வீட்டில் தான் கிடைக்கிறது. கடைசி வாய்ப்பும் அதுதான். அவள் சமைத்த உணவை வயிறார உண்ட கோவலன் அவளை அருகில் அழைத்துத் தான் இழைத்த தவறுகளையெல்லாம் பட்டியல் போட்டுக் கூறி வருந்துகிறான். கடைசியாக அவன் தாய் தந்தையர்க்கு, மகன் செய்ய வேண்டிய பணிவிடைகளையும் நான் செய்யத் தவறிவிட்டேன்! சிறுவயதிலேயே மிகப்பெரிய அறிவினைக் கொண்டுள்ள உனக்கும் தீமையைச் செய்து விட்டேன்! சொந்த ஊரைவிட்டு இங்கு வருவது தவறு என்பதையும் எண்ணிப்பார்க்காமல், புறப்படு என்று சொன்னவுடனே புறப்பட்டு என்னுடன் வந்து விட்டாயே! என்ன காரியஞ்செய்தாய்!

"இருமுது குரவர் ஏவலும் பிழைத்தேன்!
சிறுமுதுக் குறைவிக்குச் சிறுமையுஞ் செய்தேன்!
வழுவெனும் பாரேன்! மாநகர் மருங்கு ஈண்டு
எழுகென எழுந்தாய் என்செய்தனை!"

என்று அவன் வருந்துகிறான் இதனைக்கேட்ட கண்ணகி அவனைத் தேற்றுகிறாள்.

எப்படித் தேற்றுகிறாள் பாருங்கள்!

1. இல்லறத்தில் ஈடுபட்ட பெண்கள் கணவனோடு இருந்து, அறவோர்க்குப் பொன்னையும் பொருளையும் அளிக்கவேண்டும். உங்களுடைய போற்றா ஒழுக்கத்தால் அதை நான் அளிக்க முடியாதவளாகி விட்டேன்.

2. இல்லறத்தில் ஈடுபட்ட பெண்கள் அந்தணர்களைப் பாதுகாக்க வேண்டும்; அதை நான் இயற்ற முடியாத வளாகிவிட்டேன்.

3. இல்லறத்தில் உள்ள பெண்கள் துறவியர்களுக்கு, அவர்கள் துறவறம் தடைஇல்லாமல் நடைபெற உதவவேண்டும். நான் உதவ முடியாதவளாகி விட்டேன்.

4. இல்லறத்தில் உள்ள பெண்கள் விருந்தினரை எதிர்கொண்டு உபசரிக்க வேண்டும். அதை நான் இயற்ற முடியாதவளாகி விட்டேன், என்கிறாள். தான் கணவனால் பெறவேண்டிய இன்பங்களைப் பெறாமல் போய்விட்டேனே என்று அவள் வருந்தவில்லை.

"அறவோர்க் களித்தலும், அந்தணர் ஓம்பலும்,
துறவோர்க்கு கெதிர்தலும், தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை"
என்று கூறும் கண்ணகியின் கூற்றில்,

"துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை". - (கு. 42)

"இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு". - (கு.81)

என்ற இரண்டு குறட்பாக்களின் கருத்துக்கள் ஒன்றாகக் கை கோத்து நிற்பதைக் காண்கிறோம் அல்லவா!

இவ்விடத்தில் மட்டுமன்று, மதுரை வீதியில் ஓலமிட்டுக் கொண்டு வரும் கண்ணகியின் குரலைக்கேட்டு வீட்டுப் பெண்கலெல்லாம் வெளியில் வந்து பார்க்கின்றனர். அவர்களை அறிமுகப்படுத்தும் இளங்கோவடிகள் அவர்களை ,

"வருவிருந் தோம்பி மனையறம் முட்டாப்
பெருமனைக் கிழத்தியர்" - (அழற். கா. 132 - 133)

என்று அறிமுகப்படுத்துகிறார். இந்த அடிகளைப்படிக்கும் போது

"வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுதல் இன்று". - (கு.83)

"செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு". - (கு. 860)

என்ற இரண்டு குறள்களும் நினைவுக்கு வருகின்றன அல்லவா.

5. கண்ணகி பாண்டிய மன்னன் நெடுஞ்செழியனிடம் வழக்குரைத்து வென்றாள்; நெடுஞ்செழியன் அரசு கட்டிலிலேயே இறந்து விடுகிறான். அவன் மனைவி கோப்பெருந்தேவியும் 'கணவனை இழந்தோர்க்குக் காட்டுவது இல்', என்று கூறிக் கணவன் இணையடிகளைத் தொழுது வீழ்ந்து இறந்துவிடுகிறாள். அவள் இறந்து விட்டாள் என்பதைக் கூட உணராமல் கண்ணகி அவளை விளிக்கிறாள்.

கோவேந்தன் தேவியே! கணவனை இழந்த தீவினை உடையவளாகிய நான் ஒன்றும் விளங்காத தன்மையில் இருக்கின்றேன். ஆனாலும்,

"முற்பகல் செய்தான் பிறன்கேடு தன்கேடு
பிற்பகல் காண்குறூஉம் பெற்றிகாண்" (சில.வ.மா. 3-4)

பிறனுக்கு முற்பகலில் ஒருவன் கேடு செய்தால் அன்றைய பிற்பகலிலேயே அவனுக்குக் கேடுவரும் என்பதைக் கண்டாயா? என்று கூறுகிறாள். இங்கே,

"பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்". - (குறள் - 319)

என்ற வள்ளுவர் குறள் இளங்கோவடிகள் நூலில் மறுபிறவி எடுத்திருப்பதை உணர்கிறோம் அல்லவா!

மதுரை நெடுந்தெருவில் கையில் தனிச்சிலம்புடன் கண்ணகி நின்று, பெருஞ்சினத்தோடு

"முறையில் அரசன் ஊரிருந்து வாழும்
நிறையுடைப் பத்தினிப் பெண்டிர்காள்!"

என்று பெண்களைக் கூவி அழைக்கிறாள். அதனைக் கேட்ட மக்கள் வெளியே வந்து பார்க்கிறார்கள். இந்த இடத்தில் இளங்கோவடிகள் கூறுவதைப் பாருங்கள்!

"அல்லலுற் றாற்றாது அழுவாளைக் கண்டேங்கி
மல்லல் மதுரையார் எல்லாருந் தாம்மயங்கி" - (ஊர்.ஆ.வ.15)

என்று கூறுகிறார் இவ்வடிகள்,

"அல்லற்பட்டு ஆற்றாது அழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை". - (குறள் - 555)

என்ற வள்ளுவர் குறளை நம்முன் கொண்டு வந்து நிறுத்துகிறதல்லவா!

7. கண்ணகி, கணவன் கொலையுண்டு பதினான்கு நாள் சென்றபின் நெடுவேள் குன்றில் ஒரு வேங்கை மரத்தின் கீழ் இருந்த போது தேவர்கள் கோவலனோடு வந்து பூ மாரிபெய்து கண்ணகியை வாழ்த்தி வானஊர்தியில் ஏற்றிச் சென்றனர் என்று முடித்த இளங்கோவடிகள் தம் கூற்றாக அங்கே ஒரு வெண்பாவைப் பாடுகிறார். அந்த வெண்பா,

தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுவாளைத்
தெய்வந் தொழுந்தகைமை திண்ணிதால் - தெய்வமாய்
மண்ணக மாதர்க் கணியாய கண்ணகி
விண்ணக மாதர்க்கு விருந்து.

இவ்வெண்பாவின் முதலடி "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்",

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை" - (குறள் - 55)

என்ற குறளின் முதலடியோடு கருத்தாலும் அமைப்பாலும் ஒத்திருத்தலை உணர்கிறோம் அல்லவா!

இவ்வாறு இளங்கோவடிகள், தமக்கு முன்னோரான வள்ளுவரின் கருத்துக்களையும், அடிகளையும் தம் நூலில் ஏற்ற இடங்களில் ஏராளமாய்ப் பயன்படுத்தித் தம் நூலுக்குச் சிறப்பைச் சேர்த்துள்ளார், என்பது உணரக் கிடக்கிறது.

# எழுத்துச் சீர்திருத்தம் வேண்டா

**நற்றமிழ் ஆசிரியர் - புலவர் இறைவிழியன், புதுவை.**

"தமிழ் எழுத்துச் சீர்திருத்தம் : இரு குறியீடு மூலம் 36 எழுத்துக்கள் குறைப்பு" என்ற கவர்ச்சியான செய்தியை ஒரு நாளேட்டில் படித்தேன். அச்சீர்திருத்தத்தால் விளைந்திடும் தீமைகள் பற்றி எண்ணியதால் உருவானதே இக்கட்டுரை.

சிந்தனைக்காகச் சில கருத்துக்கள்.

1. 36 எழுத்துக்கள் குறைப்பு எனக் குறிக்கப்பட்டுள்ளது. தமிழில் "அகர முதல் னகர இறுவாய்!" முப்பது எழுத்துக்கள் மட்டுமே உள்ளன. ஆய்தம் சேர்ந்தாலும் முப்பத்தொன்று மட்டுமே ஆகும். ஆனால் உயிர்மெய் எழுத்துக்களையும் சார்பு எழுத்துக்களையும் சேர்த்துக் கொண்டு நூற்றுக்கணக்கான எழுத்துக்கள் தமிழ்மொழியில் இருப்பன போல் கணக்குக்காட்டப்படுகிறது. ஆங்கிலத்தில் 26 எழுத்துக்கள் மட்டுமே உள்ளன என்று அடிக்கடி கூறுவர். மாறாக ஆங்கிலத்தில் ஒவ்வோர் எழுத்துக்கும் நான்கு வரிவடிவங்களாக மொத்தம் 26X4 = 104 எழுத்துக்கள் உள்ளன. அது மட்டுமன்று on, an, he, போன்ற உயிர்மெய் இணைப்புக்களைச் சேர்த்தெண்ணினால் அவை ஆயிரக்கணக்கான எழுத்துக்கள் ஆகும் என்பதை எண்ணிப்பார்த்திடுக. எனவே 36 எழுத்துக்கள் குறைப்பு என்பது மிகப்பெரிய ஏமாற்றுக் கருத்தாகும்.

2. பு, சு, வு, கு, து ஆகிய உகர வரிசை எழுத்துக்களை மிகவும் எளிதாக எழுதுதல் இயல்கிறது. இதை விட எளிதாக எழுது மாறு எழுத்துக்களை அமைத்திடல் இயலுமோ! அவ்வெழுத்துக் கள் தனி வடிவில் மிக அழகாகத் தோற்றம் தருகின்றனவே! அவற்றை ஏன் இரண்டாகப்பிரித்தல் வேண்டும். மாணவர்க்கு எது எளிமையாக உள்ளது என்பதை நெஞ்சைத்தொட்டுச் சொல்லட்டும்.

3. தமிழ்மொழி இப்பொழுது உலக நாடுகள் பலவற்றிலும் பயன்பாட்டில் உள்ளது. இந்த எழுத்துச் சீர்திருத்தத்தை இலங்கை, மலேசியா போன்ற நாட்டுத்தமிழர் ஏலாவிடில் தமிழ் நாட்டுத் தமிழ் வேறாகவும், பிறநாட்டுத் தமிழ் வேறாகவும் இரண்டு தமிழ் உருவாகிப் பெருங்கேடு ஏற்பட வழி உள்ளது.

4. மா.கோ. இராவின் காலத்தில் உருவான சீர்திருத்தம் பெரியாரால் உருவாக்கப் பட்டதன்று. தமிழறிஞரின் கருத்தால் உருவான சீர்திருத்தத்தைப் பெரியார் பயன்படுத்தினார். ஆகார வரிசை எழுத்துக்கட்கு (ா) இக்குறியீட்டைப் பயன்படுத்தியதில் முன்பே 15 எழுத்துக்கட்கு அக்குறியீடு பயன்படுத்தப்பட்டு வருகின்றது. இப்பொழுது ண,ற,ன ஆகிய 3 எழுத்துக்கட்கு மட்டுமே பயன்படுத்தும் நிலை ஏற்பட்டது. அவ்வாறே (ை) குறியீடும் 14 எழுத்துக்கட்குப் பயன்பாட்டில் உள்ளது. எஞ்சிய 4 (ண, ல, ள, ன) எழுத்துக்கட்கு மட்டுமே மாற்றும் நிலை ஏற்பட்டது. மேற்கண்ட திருத்தத்தில் முறை இருந்தது. ஆனால், உகர ஊகார வரிசை திருத்தம் அப்படிப் பட்டதன்று.

5. இது கணிணிக்காலம். இப்பொழுது ஒரு மொழியின் எழுத்துக்களின் எண்ணிக்கையைக் கணக்கில் கொண்டிலர். ஆயிரக்கணக்கான எழுத்துக்களைக் கொண்ட மொழிகளையும் கணிணியில் எளிதாகக் கையாளுதல் இயல்கிறது. எனவே தமிழில் மீண்டும் எழுத்துச்சீர்திருத்தம் வேண்டுவதன்று.

6. P. என்ற ஒரே ஆங்கில எழுத்தின் வரிவடிவத்தைக் கொண்டே தமிழ் எழுத்துக்கள் அனைத்தையும் எழுதிக் காட்டியுள்ளார் ஓர் எழுத்துச் சீர்திருத்த வல்லுநர். மற்றொருவர் அ, கு, உ ஆகிய மூன்றெழுத்தைக் கொண்டு எல்லா உயிர் எழுத்துக்களையும் உருவாக்கியுள்ளார். எனவே எழுத்துக்கள் குறைப்புத் தான் முகாமையாயின் மேற்கண்ட சீர்திருத்தங்களைக் கொள்ளலாமே!

7. தமிழ்மொழி தமிழ் நாட்டிலே எத்துறையிலும் ஆளப்படாமல் ஒதுக்கப்பட்டுள்ளது. பள்ளிகளில் பயிற்று மொழியாக இருந்த தமிழ் படிப்படியாக நீக்கப்பட்டு வருகிறது. தமிழ் நாட்டு மழலையர் கூடத் தமிழ் பேசா நிலை உருவாகியுள்ளது. இது பற்றி வாய்திறவாத அறிஞர் பெருமக்கள் வேண்டாத சீர்திருத்த வேலையில் இறங்கியது ஏனோ?

8. உகர, ஊகார வரிசைகட்கு ஒருமைப்பாட்டு அடிப்படையில் குறியீடு வேண்டுமெனின் இப்பொழுது இருக்கின்ற வரி வடிவங்களை மாற்றாமல் குறியீடுகளைக் காணலாம் ஆனால், வரிசைக்கு ஒரு குறியீடு என்பதில் மாற்றம் வரும்.

உகர வரிசை : ı, ‿, ـا, மூன்று குறியீடுகள்,

ஊகார வரிசை : ں, ‿, ா, ௨ நான்கு குறியீடுகள்

இக்குறியீடுகளுள் ‿ இக்குறியீடு இரு வரிசையிலும் இருக்கிறது. ா, ௨ ஆகிய குறியீடுகள் முன்பே ஆளப்படுகின்றன. எனவே, உகர வரிசையில் ı, ‿, ـا, மூன்று குறியீடுகளும் ஊகார வரிசையில் ‿, ஒரு குறியீடுமாக நான்கு குறியீடுகளே புதிதாகச் சேர்கின்றன. இரண்டுக்கு மாறாக நான்கு ஆனால் எழுத்துக்களில் எந்த மாற்றமும் இல்லை. உயிர் - 12, மெய் - 18, ஆய்தம் - 1, குறியீடுகள் - 11 ஆக 42 ஆகும். உலகில் எந்த மொழிக்கு இந்த அளவு குறைந்த வரி வடிவங்கள் இல. எனவே சீர்திருத்தம் என்ற பெயரில் மொழி அடிப்படையைச் சிதைத்தல் கூடாது.

9. தமிழ்மொழியில் உகர ஈற்றுச் சொற்கள் மிகுதியாக உள்ளன. இச்சீர்திருத்தை மேற்கொண்டால் தமிழ் மொழி பழைய தமிழ், புதிய தமிழ் என இரண்டு வகையாகத் தமிழ் நாட்டிலேயே வழங்கும் பெருந்தீமை ஏற்பட வழி உள்ளது. இச்சீர்திருத்தம் மொழியின் அடிப்படையையே தகர்ப்பதாக உள்ளது.

10. இச்சீர்திருத்தம் மேற்கொள்ளப் படாவிடில் தமிழுக்கு எந்த ஊறும் நேர்ந்திடாது.

தமிழறிஞர் பெருமக்களே! தமிழ் நாட்டில் தமிழ் இல்லாமல் செய்வதற்கான முயற்சி நடந்து கொண்டிருக்கிறது. உம் தாய்மொழியை நிலை நிறுத்தப் பாடுபடுக! தமிழ்வழிக் கல்வியை நிலைப்படுத்துக!

# கம்பனின் காப்பிய நோக்கம்

பேராசிரியர் அ.ச. ஞானசம்பந்தனார்

**கம்பன் கண்ட பல இராமாயணங்கள்**

கம்பனையே மூலமாகக் கொண்டு அவன் படைத்த இராமனைப் பற்றி ஆய்வதே இந்நூலின் நோக்கம் ஆகும். ஆதலால் அவன் காலத்திற்கு (9 ஆம் நூற்றாண்டு) முன்னர் வடமொழி தென் மொழிகளில் இருந்த இராமசரிதங்கள் எந்த அளவிற்குக் கம்பனுக்கு உதவின என்று காண்பது பயனுடைய தாகும். தமிழ் மொழியைப் பொறுத்தமட்டில் சங்கப் பாடல்கள் சிலம்பு, மணிமேகலை, ஆழ்வார்கள் பாசுரங்கள் ஆகியவற்றில் உள்ள இராமன் பற்றிய சில குறிப்புகளை ஓரளவு எடுத்துக் காட்டி யுள்ளோம். கம்பனுக்கு மூலமாக இருந்த வால்மீகியின் நூல், அதே கி.மு.5-ஆம் நூற்றாண்டுவாக்கில் புத்த சமய அடிப் படையில் தோன்றிய தசரத சாதகக் கதைகள் மூன்று. கி.பி. 4-ஆம் நூற்றாண்டு வாக்கில் தோன்றிய காளிதாசர் இரகுவம்சம், விமலசூரியன் பௌம சரிதம் என்பவை போக, இரண்டாம் நிலை யில் உள்ள இரவிசேனா (கி.பி.6) குமாரதாசர் (கி.பி.8) என்ற இவர்களுடைய சிறுநூல்களும் கம்பனுக்கு முன்னர்த் தோன்றியவை ஆகும்.

**பௌத்த ஜைன இராமன்**

கடவுட்கொள்கையை ஏற்காத பௌத்த, ஜைன இராமாயணங் களில் இராமனை நற்பண்புகளின் உறைவிடமாகக் காட்டுவ தோடல்லாமல் அவரவர்கள் சமயக்கொள்கைகளைப் போற்றி வளர்க்கும் ஆதார புருஷனாகவும் காட்டப்பட்டுள்ளான். கம்பனுக்குப் பின்னே வந்த பல புராணங்களும் மகாவிஷ்ணுவின் அவதாரமாக இராமனைக் காட்டுகின்றன.

**வால்மீகியும் அவதாரக் கருத்தும்**

வால்மீகியைப் பொறுத்தவரை ஐயத்திற்குரிய பால காண்டத்தை விட்டுவிட்டால், அயோத்தியா தொடங்கி யுத்த காண்டத்தின் நடுப்பகுதிவரை இராமன் மனிதர்களுக்குள் சிறந்த வனாகக் காட்டப்படுகிறானே தவிர, அவதாரமாகப் பேசப்பட வில்லை. பாலகாண்டத் தொடக்கத்தில், உலகில் வாழும் மனிதர் களுள் எல்லா நற்பண்புகளுக்கும் உறைவிடமாக யாரேனும் உளரா என்று வான்மீகி கேட்க, நாரதர் அப்படி ஒருவன் உளன் என்று கூறுவதாகப் பாலகாண்டத்தின் முதல் சருக்கம் மூன்றாவது பாடல் முதல் பல பாடல்கள் சொல்லிச் செல்கின்றன. நாரதர் கூறிய விடையைச் சுருக்கமாகக் காண்பது பயனுடையதாகும்.

"இந்த உலகத்தில் இப்போது இருப்பவர்களில் நற்பண்புகளை உடையவனாக இருப்பவன் எவன்? வீரியமுடையவனாகவும், அறங்களை அறிந்தவனாகவும் நன்றியுள்ளவனாகவும், எப் போதும் உண்மையே பேசுபவனாகவும், விரதத்தில் உறுதி யுடையவனாகவும் இருப்பவன் எவன்? (வான் 1-1-2) என்ற வான்மீ கியின் வினாக்களுக்கு விடை கூறுமுகமாக நாரதர் "இட்சுவாகு வம்சத்தில் கௌசல்யை என்ற பெண்ணிற்கு மகனாகத் தோன்றிய இராமன் என்ற பெயருடைய ஒருவன் உள்ளான். நீர் சிறந்த பன்புகள் என்று கூறும் அனைத்தும் அவனிடம் ஒருங்கே அமைந்துள்ளன. பராக்கிரமத்தில் திருமாலை ஒத்தவனாகிய அவன் வரலாற்றைக் கூறுகிறேன்" வான்மீகியின் பாலகாண்டம் இவ்வாறு தொடங்குகிறது.

**மானுடம், தெய்வம் இரண்டும் சேர்ந்த கோலம்**

வான்மீகியின் இந்தத் தொடக்கம் கம்பனைப் பெரிதும் பாதித்திருக்க வேண்டும். எனவே அவன் படைத்த இராமன் இத்தனைப் பண்புகளுக்கும் கொள்கலன் ஆகிறான். அதே நேரத்தில் தமிழகத்தில் இராமன் திருமாலின் அவதாரம் என்று பரவியிருந்த நெடுமொழியும், ஆழ்வார்கள் அருளிச் செயலில் காணப்பெற்ற இராமன் திருமாலின் அவதாரம் என்ற கருத்தும் கம்பனை ஆட்கொண்டன என்பதில் ஐயமில்லை.

இவை இரண்டையும் ஒன்றுசேர்த்து, ஒரே மனிதனிடத்தில் இந்த இரண்டு கொள்கைகளையும் இணைப்பதில் பலசங்கடங்கள் ஏற்படுகின்றன். தெய்வம் ஒருசெயலைச் செய்கிறது என்று கூறிவிட்டால் தர்க்கரீதியில் அச்செயலின் காரண காரியங்களையோ பலாபலன்களையோ ஆராய்வது மனித அறிவுக்கு அப்பாற்பட்ட செயலாகும். இதைவிட்டுவிட்டு மனிதன் என்ற முறையில் ஒரு பாத்திரம் செய்கின்ற செயலை அறிவின் துணைகொண்டு ஆராய்வது நன்மை பயப்பதாகும். முழுவதும் தெய்வமாகக் கொண்டுவிட்டால் அதனுடைய செயல்கள் நம் அறிவுக்கு அப்பாற்பட்டவை என்பது ஒருபுறமிருக்க, சாதாரண மனிதர்கள்அதைப்பின்பற்றுவதும் இயலாததாகும். முழுவதும் அவதாரம் என்று கொண்டுவிட்டால் இராமனுடைய நற்பண்புகள் வணக்கத்திற்குரியனவாக அமையுமே தவிர சாதாரண மனிதர்கள் எவ்வளவு முயன்றாலும் பின்பற்றக் கூடியனவாக அமையமாட்டா. எனவே ஆழ்வார்களின் அடிப்படையில் நின்று இராமனை முற்றிலும் அவதாரமாகவே கொள்வதில் இருக்கின்ற சங்கடத்தைக் கம்பன் புரிந்து கொள்கிறான். ஆனால் அதே நேரத்தில் வான்மீகியில் காணப்பெறாத இந்த அவதாரக் கொள்கையை விட்டுவிடவும் மனமில்லை கம்பனுக்கு இது பற்றிப் பலகாலம் ஆய்ந்திருக்க வேண்டும் கம்பநாடன் முற்றிலும் அவதாரமாகப் பாடிவிட்டால் பக்திமார்க்கத்தில் ஈடுபட்டு இறைவனை அடைய முற்படும் ஒரு சிலருக்கு மட்டுமே அவன் நூல் பயன்படும். அது தேவையா என்று கம்பன் ஆய்ந்திருக்க வேண்டும். ஆழ்வார் பெருமக்கள் எப்பெருமான் அருளைப் பூரணமாகப் பெற்று அந்த அருளில் திளைத்துப் பாடிய 4000 பாடல்கள் இருக்கும் போது, மறுபடியும் இறைவன் திறமையை ஒரு காப்பியமாகப் பாடுவது தேவையா என்ற வினா கம்பன் மனத்தில் நீண்ட காலம் எழுந்திருக்க வேண்டும்.

இந்த அமைப்பு வேண்டாமென்றால் வான்மீகியைப் பின்பற்றி மனிதருள் சிறந்த ஒருவனைப் பாட எடுத்துக்கொள்வதாக வைத்துக்கொண்டு காப்பியம் இயற்றலாம். அப்படியானால் ஏனைய சிலப்பதிகாரம், மணிமேகலை, உதயணன் கதை போன்ற மக்களுள் சிறந்தவனைப் போற்றும் மற்றொரு காப்பியமாக அமை யுமே தவிர, தனக்கென ஒரு தனித்தன்மையை ஏற்படுத்திக் கொண்ட காப்பியமாக அமையாது. உலக இலக்கியங்களில் தெய்வங்களைப் பாடிய காப்பியங்களும் உண்டு; மனிதர்களைப் பற்றிப் பாடிய காப்பியங்களும் உண்டு. இந்த இரண்டையும் ஒரே மனிதனிடத்தில் அமைத்துப் பாடிய காப்பியம்வேறு எங்கும் இல்லை. மாபெரும் கவிஞனான கம்பன் இந்தப் புது முயற்சியில் ஈடுபடுகிறான். அவனுக்கு முன்னும் பின்னும் யாரும் செய்ய இயலாத இந்தப் புதுமுயற்சியில் முழுவெற்றி கண்ட பெருமை கம்பன் ஒருவனுக்கே உண்டு.

**இருமைக் கட்சி**

வான்மீகியின் மனித இராமனையும், ஆழ்வார்களின் தெய்வ இராமனையும் ஒன்றாக இணைப்பது என்பதே ஒரு மாபெரும் சாதனைச் செயலாகும். இந்த இணைப்பில் அவர் கையாண்ட புதுமை அறிந்து மகிழ்வதற்குரியதாகும். காப்பியத்தில் வரும் சரபங்கன், இந்திரன், கருடன், விரதன், வீடணன் போன்ற பாத்திரங்கள் இராமனைத் தெய்வம் என்று அறிந்து போற்று கின்றன. அவர்கள் போற்றும் பொழுது கூட இராமன் தன்னைப் பரம்பொருள் என்று நினைத்ததாகவோ, அறிந்து கொண்டு செயல்பட்டதாகவோ கம்பன் காட்டவே இல்லை. கம்பன் கண்ட இராமன் தொடக்கத்திலிருந்து இறுதிவரை மனிதனாகவே நடந்து கொள்கிறான். ஆனால் சாதாரண மனிதனாக அன்று; ஒரு மாமனிதனாக குறிக்கோள் தன்மைபெற்ற (Idel Man) மனிதனாக நடந்துகொள்கிறான். எந்த நிலையிலும் அவனுடைய செயல் களும் எண்ணங்களும் மனித அறிவு கொண்டு ஆய்வு செய்யப் படக்கூடியனவாய் அமைந்துள்ளமை கம்பனுடைய மாபெரும் ஆற்றலை வெளிக்காட்டும். கூடுமானவரை காப்பியப் புலவன் எந்தப் பாத்திரத்தைப் பற்றியும் தன் கருத்தை வெளியிடக்கூடாது என்ற கொள்கையைப் பெரும்பாலும் கம்பன் கடைப்பிடித்துச் செல்கிறான்.

என்றாலும் எம்பெருமானுடைய பூரண அவதாரம் இராமன் என்பதை அவனால் மறக்க முடியவில்லை. சமயம் நேரும் போதெல்லாம், கவிஞன் கூற்றாக இராமனைச் சுட்டக்கூடிய இடங்களிலெல்லாம் இராமனைப் பரம்பொருளாகக் காட்ட மறந்ததே இல்லை இக் கவிஞன்.

# கம்பன் பாதை

**உயர்திரு ஆ. ஞானம்,** முன்னாள் துணைவேந்தர், புதுவைப் பல்கலைக் கழகம்.

தமிழ் இலக்கிய உலகத்தில் கம்பராமாயணத்திற்குத் தனியான இடம் ஒன்று உண்டு. வடமொழியில் வால்மீகியால் எழுதப்பட்டு, மிகவும் காலந்தாழ்ந்த பின்னணியில் கம்பர் இராமனின் அவதாரக் கதையைத் தமிழில் எழுதியுள்ளார். என்றாலும் தமிழில் கம்பராமாயணத்திற்கு முக்கியத்துவம் அதிகம். கம்பருக்கிருந்த அறிவாற்றலுக்குத் தமிழிலேயே புத்தம் புதியதாக ஒரு மகாகாவியத்தை உருவாக்கியிருக்க முடியும். ஆனால் மக்கள் மத்தியில் ஏற்கனவே நெடுங்கலம் பேசப்பட்டு வந்த ஒரு பெரிய கதையை மறுபடியும் தன் கவிதைகளைக் கொண்டு உருவாக்கியதற்கு ஏதேனும் காரணம் இருக்க வேண்டும். புதியதாக ஒன்றைச் சொன்னால் மக்களிடையே அக்கருத்து எடுபடாமல் போகவும் வாய்ப்புண்டு. சில சமயங்களில் அக்கருத்தை மக்கள் ஏற்கக் காலதாமதம் ஆகலாம். இந்தச் சூழ்நிலையில் மக்களைச் சென்று சேரும் என்று கம்பர் கருதியிருக்க வேண்டும். அதனால் கம்பர் பழைய தடம் ஒன்றில் புதிய பாதையை நிர்மாணித்ததாகவே கருதமுடிகிறது. ஆனால் தன்னுடைய பாதை மிகவும் புதியபாதை என்று பிறர் கருதுமாறு செம்மையாகவும் திறமையாகவும் அவர் காவியத்தை எழுதியுள்ளார்.

**பிற உயிரையும் தன் உயிராகக் கருதுதல் :**

தமிழில் மிகப் பழங்காலம் முதல் மனிதநேயம் காப்பாற்றப்பட்டு வந்துள்ளது. பாரதியார் "காக்கை குருவி எங்கள் சாதி" என்று பேசுவதுவரை எல்லாக் காலங்களிலும் தமிழன் பிறருக்காக வாழ்ந்திருக்கிறான். இராமனை இதே மனநிலையில் காட்டவந்த கம்பர் இராமன் சந்தித்த, குகன்என்ற வேடம், சுக்ரீவன் என்ற குரங்கு, வீடணன் என்ற அரக்கன், மூவரையும் தன் குடும்ப உறுப்பினராகவே இராமன் ஏற்றதாகக் கூறுவார். "சகோதரத்துவம்" என்பது மனித வாழ்வின் ஒரு முக்கிய பகுதி. இந்தப் பாதை இராமனால் முன்மொழியப் பெறுகின்றது. இக்கருத்தை மக்கள் எல்லோரும் வழிமொழிய வேண்டும் என்பது கம்பரின் விருப்பம். அதனால் இந்த மூவருடைய சந்திப்புகளையும் முடிக்கும்போது "இவர்கள் என்னுடன் கூடப்பிறந்தவர்கள் ஆனார்கள்" என்று மனித நேயத்தின் உச்சியைத் தொட்டுக் காட்டுகிறார் கம்பர். மனிதநேயம் மொழி, வட்டாரம், பிறப்பு போன்ற பலவற்றைக் கடந்தது என்பதற்கு இந்தப் பகுதிகள் நல்ல எடுத்துக்காட்டுகள்.

சாமி, மதம் போன்ற பிரிவினைகளை மனித நேயம் கணக்கிடுவதில்லை, கம்பர் தம் நூல் மூலம் மனிதன் இறைவனுக்குக் கட்டுப்பட்டவன் என்று காட்ட விரும்புகிறார். அந்த இறைவனின் பெயரைப் பொதுவாகச் சொன்னால்தான் எல்லா மனிதருக்கும் அது பொருந்தும். அதனால், "உலகம் யாவையும்" எனத் தொடங்கும் முதலாவது பாட்டில் "அலகிலா விளையாட்டு உடையார்" என்று இறைவனுடைய குணத்தைக் கூறினாரே அல்லாமல் எந்தப் பெயரையும் தப்பித்தவறிக்கூட அவர் பேசுதற்கு முன்வரவில்லை. இதனால். இறைவன் எல்லா உயிர்களுக்கும் பொதுவானவன் என்பதும் மறுபுறம் தெளிவுபடுகிறது. இந்த மனநிலையை எந்த மனிதன் பெறுகிறானோ அவன் இறைவன் போன்றவன் அல்லது இறைவனின் நிலைக்கு உயர்பவன் என்பது கம்பருடைய சித்தாந்தம். கதை நிகழ்ச்சிகளில் கம்பர் இக்கருத்தை முன்வைத்தே தாம் படைக்க நினைத்த பாதையைப் படைக்கிறார்.

**நல்லவனும் கெட்டவனும் :**

மனிதர்கள் எவரும் பிறக்கும் காலத்திலேயே நல்லவன், கெட்டவன் என்ற அடையாளங்களுடன் பிறப்பதில்லை. சூழல்தான் ஒருவனை நல்லவனாகவும், கெட்டவனாகவும் மாற்றும்! தமக்கு எல்லாவகையாலும் துன்பத்தைத் தந்தவன் இராவணன் என்பதை நன்கு அறிந்தபோதும் இராமன் "இன்று போய் நாளைவா" என மன்னித்து அனுப்பியதை மேடைகளில் புகழ்ந்து கூறுவர். அதேநரம் ஏழு உலகங்களிலும் உள்ள தெய்வங்கள் வந்து நின்று வணங்கக்கூடியவனாக விளங்கிய இராவணன் தோற்றுப் போவதையும் காணலாம். இந்தக் கதைதான் கம்பருக்குப் பிடித்திருக்க வேண்டும். புறத்தில் உள்ள வலிமைகளை விடவும் மனத்தில் குறைபாடு எதுவுமில்லாதவன் எவனோ அவனே மனிதநிலையில் இருந்து மேம்பட்ட தெய்வமாவான். எவ்வளவு ஆற்றல்களைப் பெற்றிருந்தாலும் அகத்தில் உண்டாகும் சின்னப்பிழை, அவனை அழித்துவிடும். சிறுபொறிதான் என்றாலும் தீக்கு உள்ள ஆற்றல் அதுவே. எனவே மனிதன் தெய்வமாக முடியும். மகத்தான ஆற்றல் கொண்டவன். பிழைசெய்தால் கேவலமான பிறப்பாவான் என்ற கருத்தை நோக்கியே தன் காப்பியத்தைப் புதிய கோணத்தில் கம்பர் தருகின்றார். இந்த உண்மை மிகவும் கசப்பானது. எனவேதான், புதியதாக இருந்தாலும் கசப்பான ஒன்றை மக்கள் ஏற்கமாட்டார்கள் என்று கம்பர் புரிந்து கொண்டார் ஏற்கனவே பழகிப்போன கதையை எடுத்துச் சொல்லி, அதன் நடுவே மனிதநேயம் என்பதைப் புகுத்துகிறார் கம்பர். அவர் போட்ட புதிய பாதையில் கல்லும் முள்ளும் நீக்கப்பட்டுள்ளன. பாதை நல்லதாக அமைய, மனிதன் மனதுவைத்தால் தெய்வமாக ஆவான் என்ற மந்திரத்தையும் குழைத்து, தன் காவியத்தைப் படைத்துள்ளார்.

கம்பரின் இராமாயணத்தில் எத்தனையோ நல்ல கருத்துகள் உள்ளன. அவற்றில் தலையாய ஒன்றாக மேற்கூறிய கருத்தைக் குறிக்கமுடியும். மனிதன் தன் நிலையில் இருந்து தாழ்ந்து விலங்காக மாறுவது தீது, மனிதன் தெய்வநிலைக்கு உயருதல் நல்லது என்று மனித வாழ்க்கைக்கான புதியபாதையைப் புதிய பாணியில் கம்பர் கூறுகிறார். அவருடைய பாதையில் நடப்பது மனிதர் கடமையாகும்.

# அனுமன் சீதையுடன் பேசியது இனிமைத் தமிழ் மொழியே

**உயர்திரு. ந. கோவிந்தசாமி,** தலைவர் - புதுவைக் கம்பன் கழகம்

அநுமன் சீதையினிடத்தில் எந்த மொழியில் பேசியிருக்கக் கூடும்? அவரவர் எந்த மொழியில் இராமாயணத்தை எழுது கின்றனரோ அந்த மொழியிலேயே பேசினான் என்றோ அல்லது பொதுவாக ஆதிகாவியமாகிய வான்மீகி இராமாயணமே அடிப்படையானதாக விளங்குகின்ற தன்மையால் வடமொழியில் பேசினான் என்றோ கூறக்கூடும்.

ஆனால், ஆதிகவியாகிய வான்மீகியே "அநுமன் சீதையுடன் இனிமை பொருந்திய தமிழ்மொழியிலேயே பேசினான்." என்று கூறுவதை விளங்கிக் கொள்ளலாம். தமிழ் வரலாறு என்ற நூலில் மகாவித்துவான் திரு. ரா. ராகவய்யங்கார் அவர்களின் ஆராய்ச்சி இக்கருத்தைத் தெளிவுபடுத்தும்.

"வான்மீகி முனிவர் சுந்தர காண்டத்தில் அநுமன் சீதாப் பிராட்டியாருடன் இன்ன மொழியில் உரையாடுவதென்று தனக்குள் ஆராய்ந்தான் என்றும் இருபிறப்பாளர் ஒப்ப சமஸ்கிருதமொழியில் உரையாற்றுவேனாயின் என்னை இராவணனாகக் கருதிச் சீதை அச்சமுறுவாள் என்றும், அவளஞ்சாது செவிகொடுத்துத் தூதுரைக் கேட்க இணங்கும் பொருட்டு மக்கள் மொழியே பேசவேண்டும் என்று துணிவு கொண்டனன் என்றும், இங்ஙனம் துணிந்ததன் பயனாகத் தூதுக்குரிய எல்லாவற்றையும் மதுரமான மொழியில் கேட்பாள் என்று கூறப் புகுந்தனன் எனக் கூறியிருத்தல் காணலாம். (சுந்தரகாண்ட சருக்கம் 30 பாடல் 43) இங்கு இன்னமொழியில் பேசுவது என்பதே அனுமான் தனக்குள் செய்த முடிவு என்பது தெள்ளிது. வடமொழியில் பேசினால் அம்மொழி பேசும் இராவணன் வேற்றுருக் கொண்டுவந்து பேசுகிறான் என்று நினைத்துச் சீதை அஞ்சுவாள் என்று எண்ணி மக்கள் மொழியே பேசவேண்டும் என்று தன்னுள் முடிவு செய்து மதுரமான மொழியை எடுத்துக் கொண்டானென்று வான்மீகியார் வெளியிட்டுள்ளார். (வான்மீகி இராமாயணம், கிட்கிந்தா காண்டம், சருக்கம்30, பாடல்கள். 18, 19) இதனால் விந்திய மலைக்குத் தெற்கிலுள்ளவனான அநுமன் வடமொழி தென்மொழி (மக்கள் மொழியாம்) ஆகியவற்றில் வல்லுநன் எனவும் விந்திய மலைக்கு வடக்கிலுள்ள சீதை அவ்விரு மொழியையும் பேசுவதில் வல்லவள் எனவும் கொள்ளல் வேண்டும். சொல்வோரும் கேட்போரும் அறிந்த மொழியன்றோ உரையாடுதற்குரியது என்பது பலரும் அறிந்தது. விந்திய மலைக்குத் தெற்கில் உள்ள காடுகளில் பல்லாண்டுகள் தங்கி இருந்த சீதைக்கு அத்தெற்கு மொழியில் பயிற்சி உண்டாயிருத்தல் வேண்டும். அநுமனின் வடமொழி வன்மை அவன் இராமபிரானுடன் உரையாடியதனால் நன்கறிந்ததேயாம். அன்றியும் விந்திய மலைக்குத் தெற்கேயுள்ள நாட்டைப் பஞ்சதிராவிடம் என்று வடநூலார் வழங்குதல் நூல்களில் கண்ட உண்மை. ஐவகைத் திராவிடத்திலும் வேறாய்த் தெற்கே தலைசிறந்தது தமிழ் மொழியே என்பதும், அதுவே அகத்தியர் கண்ட இலக்கண வரம்புடையது என்பதும் நன்கு துணியப்பட்டதேயாம். அநுமன் தாயாகிய அஞ்சனை பிறந்த காரணத்தால் அஞ்சனகளம் என்றும் அதுவே குரங்கின் பெயரால் முசுறி நகரம் என்றும் குரங்கின் ஊர் என்றும் கொடுங்கோளூருக்கு வழங்கும் வரலாறுகளாலும் அநுமன் தென்னாட்டவனாதல் தெளியலாம்.

(தமிழ் வரலாறு திரு ரா. ராகவையங்கார் பக். 8, 9)

இதனால் அநுமன் சீதையுடன் இனிய மொழியாகிய (மதுரபாஷை) தமிழிலேயே பேசியுள்ளான் என்பதும் துணியப் படும். இதனால், தற்கொலை புரிய முயன்ற தலைவி சீதை களிப்புற்று தன்னம்பிக்கை கொண்டாள், பொங்கிப் பெருகிவரும் தாய்மை உள்ளத்துடன் அநுமனை வாழ்த்தினாள்.

"வலிமை பொருந்திய தோளையுடையவனே! யாதொரு துணையும் இல்லாதிருந்த என்னுடைய துன்பத்தைப் போக்கிய வண்மையாளனே! நீ வாழ்வாயாக! யான் களங்கமில்லா, மனத்தையுடையவளேயானால் பலயுகங்கள் ஒரு பகலாகக் கருதப்பெறும். பதினான்கு உலகங்களும் அழிவடைந்த போதும் இன்று இருப்பது போலவே (என்றும் சிரஞ்சீவியாய்) வாழ்ந்திருப்பாயாக! என வாழ்த்தினாள் சீதை. வணங்கினான் அநுமன்.

"பாழிய பணைத் தோள்வீர
துணையிலேன் பரிவுதீர்த்த
வாழிய வள்ளலே! யான்
மறுவிலா மனத்தேன் என்னின்
ஊழிஓர் பகலாய் ஓதும்
யாண்டெலாம் உலகம் ஏழும்
ஏழும் வீவுற்ற ஞான்றும்
இன்றென இருத்தி என்றாள்"

அநுமனின் இனிமைத் தமிழ்தான் அன்னை சீதையின் உள்ளத்தைக் களிப்புறச் செய்தது, அநுமனுக்கு வாழ்த்தும் வாங்கச் செய்தது.

## தமிழ்த்தாய் வணக்கம்

**ப. சிவஞான சுப்பிரமணியன், பாரிஸ்.**

அமுத மழை பொழியும் அழகிய தமிழ்த்தாயே
குமுத மலர் தூவிக் கும்பிட்டோம் உன் பதமே (அமுத)

தாலாட்டுப் பாடினால் தானாய்த் தூக்கம் வரும்
மேலான இன்பம் மேதினியில் வேறுண்டோ? (அமுத)

இனிமை நிறைந்தவள் நீ! ஈடிணை உனக்குண்டோ?
தனிமை தவிர்த்திடுவாய்! தாயாய் அணைத்திடுவாய்!
கருணை மிகுந்தவளே! கவின் கலை நிறைந்தவளே!
திருவாசகமும் குறளும் உலகுக் களித்தவளே! (அமுத)

பாரினில் மூத்த மொழி இன்பத்தமிழ் மொழியே!
தேரினில் நிகரில்லா இலக்கியம் நிறைந்ததுவே
ஈடில்லாக் கலைஞானம், இணையில் மெய்ஞ்ஞானம்
தேடினும் கிட்டாத தெய்வீகம் திகழ்மொழியாம் (அமுத)

'அம்மா' என்றழைத்தால் தேன் வந்து பாய்ந்திடுமே!
'அப்பா' என்றுரைத்தால் அச்சம் பறந்திடுமே
தமிழே எங்கள் பேச்சாகும்! அதுவே எங்கள் மூச்சாகும்!
தமிழுக்காய் உடலென்ன உயிரே அர்ப்பணிப்போம் (அமுத)

உன் வயிற்றில் பிறந்தோம்! உனக்கெனவே வாழ்வோம்!
மின்னு நவ ரத்தினமாய் உன்னை ஒளிர வைப்போம்!
உலகெலாம் உன் பெருமை உணர்ந்திடவே செய்வோம்!
உலகம் உள்ளளவும் உன்னைக் காத்திடுவோம் (அமுத)

# கம்பன் காவியப் பண்பாடு

முனைவர் அ. பாண்டுரங்கன், புதுவைப் பல்கலைக் கழகம்

தமிழ் மொழிக்கு என்றும் அழியாத பெருமையைத் தேடித்தந்து கொண்டிருக்கும் இராம காதை என்னும் மாபெரும் காவியத்தைப் படைத்தவர் கவிச்சக்கரவர்த்தி கம்பர். தனக்கு முன்னும் பின்னும் தோன்றிய - தோன்றவிருக்கின்ற - இலக்கியங்களுக்கு எல்லாம் விஞ்சியதாக - ஒரு பேரிலக்கியமாக - கவிச் சக்கரவர்த்தி இராமாயணக் கதையைப் படைத்துள்ளார்.

கம்பருக்கு முன் இராம காதையைத் தமிழில் சிலர் பாடியிருப்பதாக நாம் அறிகின்றோம். புறநானூற்றில் இராமாயணக் கதை பற்றிய குறிப்பு வருகின்றது. அகநானூற்றில் இராமன் மந்திராலோசனை செய்யும்போது பறவைகள் ஒலியெழுப்ப, அவன் தன் கையைக் கவித்து அவற்றின் ஒலியை அடக்கியது கூறப்படுகின்றது. இராமாயண வெண்பாவில் சில செய்யுள்கள் கிடைத்துள்ளன. இளங்கோவடிகள் இராமனை 'வேத முதல்வன்' என்று பாராட்டுகின்றார். ஆழ்வார்களின் பாசுரங்களிலிருந்து இராமாயணக் கதை பற்றிய பல குறிப்புகளை உணர முடிகின்றது. இவற்றிலிருந்து இராம காதை தமிழில் நன்கு பயிலப் பெற்ற ஒரு காவியம் என்பது தெளிவாகின்றது.

1. இக்காவியத்தைக் கம்ப நாடர் மீண்டும் எழுதுவானேன் என்ற சிந்தனை நம் உள்ளத்தில் எழுவது இயல்பே ஆகும். அவருக்கு முன் இராம காதையை இந்திய மொழிகளில் பலர் பாடியுள்ளனர். வடமொழியில் மூவர் பாடியிருப்பதைக் கவிஞரே குறிப்பிடுகின்றார் :

தேவ பாடையின் இக்கதை செய்தவர் மூவர்.....
(கம்பன் கழகம் : பாயிரம், 10)

வான்மீகர், காளிதாசர், வசிட்டர் என்ற மூவரும் முறையே இராமாயணம், இரகுவம்சம், அத்யாத்ம இராமாயணம் என மூன்று நூல்களைப் பாடியுள்ளனர். அவற்றுள் வான்மீகரையே தாம் பின்பற்றுவதாகக் கவிக்கு நாயகர் கூறுகின்றார் :

"தேவ பாடையின் இக்கதை செய்த
மூவர் ஆனவர் தம்முளும், முந்திய
நாவினான் உரையின்படி, நான்தமிழ்ப்
பாவினால் இது உணர்த்திய பண்பு அரோ. (மேலது : 10)

இராமாயணக் கதை அனைவர்க்கும் நன்கு தெரிந்த கதை. அதன் ஒவ்வொரு அம்சத்தைப் பற்றியும் இந்தியாவில் வாழ்ந்த எல்லாமக்களும் அறிந்திருந்தார்கள். அத்துடன் வான்மீகரின் இதிகாசம் மிகமிகப் புகழ் பெற்றிருந்தது. இந்தியா முழுவதிலுல் அறிஞர் பெருமக்களால் ஆதி காவியம் எனப் போற்றப்பட்டு, கவித்துவ எல்லைகளுக்கு ஓர் எடுத்தக் காட்டாக அது கொள்ளப்பட்டிருந்தது.

இத்தகைய புகழ் மிக்க இதிகாசக் கதையையே மீண்டும் எடுத்துக் கொண்டு பாடுவது என்றால் அவ்வளவு எளிதன்று, உலகில் சிறந்த கவிஞர்களாகப் போற்றப் படுகின்ற காளிதாசன், வர்ஜில், சேக்ஸ்பியர், மில்டன் போன்ற கவிஞர்கள் மற்றவர் களுடைய கதையையே தங்கள் கதைக்கு மூலமாகக் கொண்டிருக்கின்றார்கள். ஆனால், அவை மூலக்கதையாக இருந்தபோது சிறப்பிடையனவாக அமையாமல், இவர்கள் பாடிய பிறகுதான் சிறப்புப் பெற்றன. ஆனால், கம்பர் எடுத்துக் கொண்ட கதையோ மூலத்திலும் புகழ்பெற்ற இதிகாசம் ஆகும். எனவே மூலத்தையே எதிர்கொண்டு, அதனோடு ஒப்பாக அல்லது அதற்கும் மேலாக பாடுவது என்பது அவ்வளவு எளிமையானதன்று; மிக மிக அரிய செயல்; கம்பர் அதனைச் செய்து காட்டியிருக்கின்றார். மூல நூலாகிய வான்மீகத்தைப் போலவே கம்பருடைய இராமாயணமும் பெரும் சிறப்புப் பெற்றுத் திகழ்கின்றது.

2. கம்பர் இந்தக் காவியத்தைப் படைத்ததன் நோக்கம் தான் என்ன? அவருடைய உள்ளத்தில் நெடுங்காலமாக ஊறி வந்த உணர்வுகளை வாழ்வியல் உண்மைகளைச் செம்மையாகச் சொல்ல ஒரு வாய்ப்பைக் கவிச் சக்கரவர்த்தி தேடிக் கொண்டிருந்தார். இராம காதை அவருக்குத் தாம் எண்ணிய கருத்துக்களைத் தெளிவாகவும் திட்டவட்டமாகவும் சொல்வதற்கு ஓர் அரிய வாய்ப்பைக் கொடுத்தது. பாரதியார் கூறுவது போன்று, "எல்லையொன்றின்மை என்பதனைக் குறிகளால் காட்டிட" முயல்கின்றார் கம்ப நாடர். அவருக்கு இராம காதை ஓர் அரிய கருவியாகப் பயன்படுகின்றது. தாம் மனத்தில் எண்ணி எண்ணிப் பார்த்த மானுட விழுமியங்களைச் சொல்வதற்கு வாய்ப்பாகத் திருமாலின் அவதாரக் கதை அவருக்குக் கிடைத்தது. கம்பர் அதனை நன்கு பயன்படுத்திக் கொள்கின்றார்.

3. கம்பர் வான்மீகத்தை முழுமையாகப் பின்பற்றிய போதிலும், அவருடைய காவியம் வான்மீகத்தின் மொழிபெயர்ப்பு அன்று. "பொய்யில் கேள்விப் புலமையினோர் புகல் தெய்வ மாக்கவியின் மாட்சியில்" அவர்தம் உள்ளத்தைப் பறிகொடுத்திருந்த போதிலும், கட்டங்கள் தோறும் வான்மீகத்தினின்றும் வேறுபடுகின்ற தன் முத்திரையைப் பதித்து விடுகின்றார். வான்மீ கர் எல்லா நிலைகளிலும் ஓர் உயர்ந்த பண்பாடு மிக்க ஓர் இளவரசனைப் பாடுகின்றார்; கம்பரோ மன்னுயிர்களின் துயர் தீர்க்க விண்ணிலிருந்து இழிந்து கால் நிலம் தோய நின்ற கடவுளைப் பாடுகின்றார்; திருமாலின் அவதாரக் கதையைப் பக்தியோடு பாடுகின்றார். ஆனால் அவருடைய ஈடுபாடும், காப்பிய நாயகனிடம் அவர் கொண்டிருந்த ஆழ்ந்த பக்தியும் உணர்ச்சிச் சுழிப்புகளும் கவிதையின் வேகத்தைத் தடை செய்யவில்லை. சிறந்த நாடகப் புலவன் போல, தன் பாத்திரங்களைப் பேச விடுகின்றார். அத்தகைய இடங்களில் கதை காவியமாக நிற்காமல் நாடகமாகவே நிற்கின்றது. எனவேதான், மணவாள மாமுனி என்னும் வைணவப் பெரியார் "கம்பநாடகம்" என்று கம்பராமாயணத்தைப் பாராட்டினார்.

1. கம்பனுடைய காவியப் பண்பாடு அவன் படைத்த பாத்திரங்களின் சிறப்பாக அமைகின்றது. காப்பிய மாந்தர்கள் தலைமை மாந்தர்கள் ஆயினும் துணைமை மாந்தர்கள் ஆயினும் அவர்கள் முழுமை பெற்று நம்மில் ஒருவராக - உயிர் பெற்றுள்ள மாந்தர்களாக - உலாவுகின்றனர். அவற்றுள் சிலவற்றைக் காண்போம்.

குகனுடைய பாத்திரப்படைப்பு வான்மீகத்தினின்றும் வேறுபட்டுச் சிறப்பாக அமைகின்றது. வான்மீகத்தில் ஒரு நாட்டின் மன்னனை - ஒரு குறுநிலத் தலைவன் சந்தித்து உபசரிப்பது போன்ற அமைப்புதான் காணப்படுகின்றது. கம்பர் அதனை மாற்றிக் குகனை ஓர் இராம பக்தனாகவே காட்டுகின்றார். இராமனைக் காணக் குகன் வருகிறான். அவன் புறத்தோற்றம் கரடு முரடாக இருக்கின்றது. அவன் இராமனையோ இலக்குவனையோ இதற்கு முன்பு சந்தித்ததே இல்லை. அந்நிலையில், குடிலுக்கு வெளியே காவல் இருந்த இலக்குவனை நோக்கி "தேவா! நின் கழல் சேவிக்க வந்தனென்; நாவாய் வேட்டுவன்; நாய்க் குகன் என; குகன் - இராமன் சந்திப்பில் குகனுடைய தூய்மை உணர்வை இராமன் புரிந்து கொள்கிறான்.

கண்ணனைக் கண்ணில் கண்டு களித்த குகன், "இருத்தி" என இராமன் பணித்தும் அதற்கு உடன்படாது "தேனும் மீனும் அமுதினுக்கு அமைவதாகத் திருத்தினென் கொணர்ந்தேன்; என்கொல் திருவுளம்" என்று பேசுகிறான். குகனுடைய பேச்சிலிருந்து அவனுடைய அன்பின் ஆழத்தையும், வஞ்சனையற்ற மனப்பான்மையையும் உணர்ந்து கொண்ட இராமன், விருத்த மாதவரை நோக்கி முறுவலித்துவிட்டு, அவன் கொண்டு வந்த தேனையும் மீனையும் தூய்மையானவை "பவித்திரம்" - என்று பாராட்டுகின்றான். "செய்குவன் அடிமை" என்கிறான் குகன். "யாதினும் இனிய நண்ப" என்று இராமனைப் பேச வைக்கின்றது குகனுடைய அன்பு. சித்திர கூடத்துக்கு இராமனோடு வருவதற்குப் பல காரணங்களையும் குகன் எடுத்துரைக்கின்றான். அதனைக் கேட்ட இராமன்,

"என்னுயிர் அனையாய் நீ; இளவல்உன் இளையான்; இந்
நன்னுத லவள்நின்கேள்! நளிர்கடல் நிலம் எல்லாம்
உன்னுடையது; நானுன் தொழில் உரிமையின் உள்ளேன்"
(2.7.42)

என்கின்றான். அன்பில் இருவரும் ஒருவரை ஒருவர் விஞ்சப் பார்க்கின்றனர். இராமன் கட்டளையால் குகன் சிருங்கி பேரத்துக்குத் திரும்பிச்செல்ல நேரிடுகின்றது.

மீண்டும் பரதன் - குகன் சந்திப்பைக் கவிச்சக்கரவர்த்தி படைக்கின்றார். இரண்டு அன்பு நெஞ்சங்கள் ஒருவரை ஒருவர் அறிந்து கொண்டு திருவடிகளில் வீழ்ந்து வணங்குவதும் தழுவிக் கொள்வதும் அழியாத இலக்கியமாகிவிட்டன. "ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ" என்று பரத நம்பியைக் குகன் உயர்த்தும் போது, ஒரு பாத்திரத்தின் மூலம் மற்றொரு பாத்திரத்தை மோதவிட்டு, அதன் பெருமையை உணர்த்தும் கவிச்சக்கரவர்த்தியின் உளவியல் நுட்பத்தை உணர்ந்து பாராட்ட முடிகின்றது. அலைகடல் நடுவில் அரக்கர்கள் இடையில் துன்புற்றுக் கொண்டிருந்த பிராட்டி, அந்த நிலையிலும் "ஆழநீர்க் கங்கை அம்பிகடாவிய ஏழை வேடனை" மறக்கவில்லை. இவ்வாறு குகன் எனப் பெயரிய ஒரு சிறு பாத்திரத்தைக் கம்பர் முழுமையாக்கி விடுகின்றார். கம்பர் காப்பியப் பண்பாட்டில் அனைவரும் முழுமையானவர்களே என்பதற்கு இஃது ஓர் எடுத்துக்காட்டாகும்.

கம்பரின் மற்றொரு சிறப்பான காவியப் பண்பாடு தாம் வான்மீகத்திலிருந்து மாற்றியமைத்துக் கொண்டதைத் தொடர்ந்து பல இடங்களில் வலியுறுத்திச் சொல்வதாகும். சீதையை இராவணன் வான்மீகத்தில் போன்று இங்குப் பற்றி ஈர்த்துச் செல்லவில்லை. பிராட்டியை ஒருவன் பற்றி ஈர்த்துச் செல்வது பற்றிக் கம்பரால் எண்ணிப் பார்க்க முடியவில்லை. எனவே, இலைக்குடிலோடு இராவணன் பிராட்டியை எடுத்துக் கொண்டு செல்வதாகக் கம்பர் படைக்கின்றார். இதனைப் பல இடங்களில் காப்பியப் புலவர் சுட்டிக் காட்டிக் கொண்டே செல்கிறார் "மண்ணொடுங் கொண்டு போனான்" என்பது கவிஞர் கூற்று!

இறுதியில் ஓர் இடம் வருகின்றது. அதனை மிகத் தெளிவாகவே உணர்த்த வேண்டிய தேவையும் ஏற்பட்டு விடுகின்றது. அசோக வனத்தில் பிராட்டியின் துயரத்தைக் கண்டு உள்ளம் உருகிய அனுமன், அவள் திருவடிகளைப் பணிந்து "ஏறு கடிது" என்று வேண்டுகின்றான். அனுமன் தோள்களில் ஏறி அமர்ந்து, வரமறுத்த பிராட்டி இறுதியில்,

வேறும் உண்டு உரை; கேள்அது; மெய்ம்மையோய்!
ஏறு சேவகன் மேனி அல்லால், இடை
ஆறும் ஐம்பொறி நின்னையும் "ஆண்" எனக்
கூறும்; இவ்வுருத் தீண்டல் கூடுமோ? (5.5.19)

என்கிறான். இங்கே ஓர் உளவியல் நுட்பம் நுட்பமாகப் புலப்படுத்தப்படுகின்றது. சீதை பேசிக் கொண்டே வருகிறாள்; அதனை அனுமன் கேட்டுக் கொண்டே வருகின்றான். "உன் உருவை உலகம் ஆண் என்று கூறும், உன்னைத் தீண்டி, உன் தோள்களில் ஏறி, எப்படி நான் இராமனை அடைய இயலும்? என் கற்பினுக்குக் களங்கம் வந்துவிடாதா?" என்பது பிராட்டியின் குறிப்பு. இதனைப் புரிந்துகொண்ட அனுமன் முகத்தில் கேள்விக்குறி எழுவது இயல்புதானே! "இராவணன் உன்னை எவ்வாறு எடுத்து வந்தான்?" என்று சொற்களால் கேட்காமல், தன் முகக் குறிப்பாலேயே உணர்த்திவிடுகிறான் அனுமன். அனுமன் முகத்தில் ஏற்பட்ட மாற்றத்தை உடனடியாகப் புரிந்துகொண்ட பிராட்டியும் உடனடியாகப் பேசுகிறாள் :

"தீண்டினான் எனின் இத்தனை சேண்பகல்
ஈண்டுமோ உயிர்மெய்யின்; இமைப்பின் முன்
மாண்டு தீர்வென் என்றே நிலம் வன்கையால்
கீண்டுகொண்டு, எழுந்து ஏகினன் கிழ்மையால்" (5.5.20)

இதனைத் தொடர்ந்து பிரமன் இராவணனுக்குக் கொடுத்த சாபத்தை நினைவூட்டி விட்டு பேசுகின்றாள்.

"ஆண்டுநின்றும், அரக்கன் அகழ்ந்து கொண்டு
ஈண்டு வைத்தது இளவல் இயற்றிய
நீண்ட சாலையொடு நிலை நின்றது
காண்டி, ஐயா! நின்மெய்யுணர் கண்களால்" (5.5.24)

இவ்வாறு காட்சிகளை அமைத்துக் கொள்வதன் மூலன், தான் மூலக்கதையில் செய்த மாற்றத்தைக் கம்பர் வலியுறுத்தி விடுகின்றார்.

கம்பருடைய காவியப் பண்பாட்டில் காணவேண்டிய மற்றொரு சிறப்பான பண்பாடு யார் யாருடன் பேசுவது? எப்படிப் பேசுவது? என்பதாகும். இராமன் காடேகுவதற்குரிய காரணத்தை அரிய விரும்பி குகன் இராமனிடம் கேட்க,இலக்குவன் அவனுக்கு நிகழ்ந்தது அனைத்தையும் கூறுகின்றான். பரத்துவாச முனிவன் அதே வினாவை இராமனிடம் எழுப்பும்போது, இராமனே முனிவனுக்குத் தான் வனம் போந்தற்குரிய காரணத்தைக் கூறுகின்றான். சடாயு நீவிர் வனம் புகுதற்குரிய காரணத்தைக் கூறுக என்று இராமனைக் கேட்க, இராமனது குறிப்பினால் இலக்குவன் அனைத்தையும் கூறுகின்றான். சுக்கிரீவனிடம் இராம இலக்குவர் யார் என்பது பற்றி எவ்வாறு உரைப்பது என்று அனுமன் கேட்க, அவனிடம் இலக்குவனே தங்கள் வரலாற்றைக் கூறுகிறான். இவ்வாறு ஒவ்வொரு பாத்திரமும் பேசுவதை நாம் ஆராய்வோமானால், கம்பருடைய பாத்திரங்கள் தத்தம் தகுதிக்கேற்றவர்களுடன் பேசுகின்றன என்பதை உணரலாம்.

சிறந்த கவிதைக்கு இலக்கணமாகக் கம்பர் ஆற்றைக் கூறுகின்றார். சிறந்த கவிதையைச், சவியுறத் தெளிந்து தண்ணென்று ஒழுக்கமும் தழுவிக் கிடக்கும் சான்றோர் கவிதை என்பர் கம்பர். கம்பருடைய பாடல்களை மேற்போக்காகப் பயிலும்போது எளிமையாகத் தோன்றினாலும், சிந்திக்கச் சிந்திக்க விரித்த பொருள் தரும் ஆழமான சுரங்கம் போன்று அது அமைந்து விடுகின்றது. ஓர் எடுத்துக் காட்டைக் காண்போம்.

அனுமன் இராம இலக்குவர் வரவை ஒரு மலை முகட்டின் மறைவில் நின்று பார்த்துக் கொண்டிருக்கின்றான். அவர்களுடைய வடிவம் அவனைக் கவருகின்றது. இவர்கள் தருமத்தின் வடிவினர் எனத் துணிந்த மாருதி, ஓர் மாணியின் வடிவம் தாங்கி அவர்களுக்கு எதிரே சென்று, "கவ்வை இன்றாக நுங்கள் வரவு!" எனக் கூறுகின்றான். இராமன் அவனை நோக்கி நீ யார் என்று வினவுகிறான். மாருதியின் பதில் இவ்வாற அமைகின்றது :

"மஞ்செனத் திரண்ட கோல மேனிய மகளிர்க் கெல்லாம்
நஞ்சுஎனத் தகைய ஆகி நளிர்இரும் பனிக்குத் தேம்பாக்
கஞ்சம்ஒத்து அலர்ந்த செய்ய கண்ண! யான் காற்றின்
வேந்தற்கு
அஞ்சனை வயிற்றில் வந்தேன்; நாமமும் அனுமன் என்பேன்"
(4.2.15)

இப்பதிலில் தன்னைப்பற்றி அனுமன் மிகச் சில சொற்களே கூறுகின்றான்; எஞ்சியவை அனைத்தும் இராமனைப் பற்றியவையே. இராமனைக் கண்ட உடனேயே நல்லோர் எல்லோரும் கொள்கின்ற உணர்வையே அனுமனும் பெறுகின்றான். அவன் வடிவழகை "மஞ்சு எனத் திரண்ட கோல மேனி" என்று பாராட்டுகின்றான். அந்தக் கரிய வடிவினும் கண்கள் அன்றோ தன்னைப் பிணித்தன என்று கூறக் கருதிய மாருதி, அக்கண்கள் சானகி ஒருத்திக்குத் தவிர மற்றவர்க்கு எல்லாம் நஞ்சு அல்லவா? அவள் ஒருத்தியைத் தவிர வேறு எவரும் அடைய முடியாததால் அந்தத் தாமரைக் கண்கள் அவர்களுக்கு நஞ்சுதானே! "ஆடவர் பெண்மையை அவாவும் தோளினாய்" என்று விசுவாமித்திரனே இவன் வடிவழகில் தோற்றுப் பெண்மையை நயந்ததை நாம் அறிவோம். "மனத்தாலும் பெண்களை நினையாத நைட்டிகப் பிரமசாரியான தன்னையே இந்தக் கமலக் கண்கள் இப்படிப் படுத்துமானால், ஏனைய பேதையர்களை என் சொல்வது?" அவன் கண்கள் பனிக்குத் தேம்பாத கமலம் போன்ற கண்கள். அந்தக் கண்கள் பெற்றிருப்பதானேலேயே அவனைக் "கண்ண" என்று விளக்கினான் அனுமன். இவ்வாறு இரண்டரை அடிகளில் இராமனைப் பற்றி பேசிய பிறகு, தன்னைப் பற்றி அனுமன் பேசுகிறான். "நான் காற்றின் மைந்தன்" என்று சொல்வதால் மறைமுகமாகத் தன் வலிமையை இராமனுக்கு அனுமன் உணர்த்தி விடுகின்றான். எரிகதிர்ப் பரிதிச் செல்வனுக்கு ஏவல் செய்யும் பணியாள் என மிக அடக்கமாகப் பேசுகிறான்.

........................................................................................................

தேவ! நும் வரவு நோக்கி விம்மல் உற்று அனையான் ஏவ
வினவிய வந்தேன். (5.2.16)

என்று முடிக்கின்றான். விம்மலுற்ற என்றால் வருந்தி, துன்பம் உற்று எனவும் விம்மிதம் உற்று, மகிழ்ந்து என்றும் பொருள் கொள்ளும்படி சொற்கள் அமைகின்றன. "நீங்கள் எங்கள் பகைவர்களாக இருந்தால் நாங்கள் வருந்துவோம்; நண்பர்கள் ஆனால் மகிழ்வோம்" என்பது அனுமன் குறிப்பு. இவை அனைத்தையும் கேட்ட பிறகுதான் இராமன், அனுமனைச் "சொல்லின் செல்வன்" என்கிறான். பரம்பொருளே மண்ணுலகில் மானுட வடிவம் தாங்கி வருந்துள்ளது என்னும் வேதக் கருத்தை உணர்த்தும் முறையில் அனுமன் பேச்சு அமைவதால், இராமன் பின்னர் அவனை "வேதக் கடல்" என்று பாராட்டுகின்றான்.

உணர்ச்சிகளை அடுக்கிக் கொண்டே போகும் போக்கும் கம்பருடைய காவியப் பண்புகளுள் ஒன்றாகத் திகழ்கின்றது. திருத்தக்க தேவர் உள்ளிட்ட எக்காப்பியக் கவிஞரும் கம்பரைப் போல் உணர்ச்சிகளை அடுக்கடுக்காக அமைக்கவில்லை. இரண்டொன்றைக் காண்போம் :

" விழுதல் விம்முதல் மெய்யுற வெதும்புதல் வெருவல்
எழுதல் ஏங்குதல் இரங்குதல் இராமனை எண்ணித்
தொழுதல் சோருதல் துளங்குதல் துயர்உழந்து உயிர்த்தல்
அழுதல் அன்றி மற்று அயல் ஒன்றும் செய்குவது அறியாள்".
- (5.3.5)

இப்பாடலில் ஒன்றுக்கொன்று தொடர்புடைய - ஒன்றனை விட ஒன்று அவலத்தைக் கூட்டுகின்ற - மெய்ப்பாடுகளை அடுக்கடுக் காகக் காப்பியக் கவிஞர் புனைகின்றார். பதின்மூன்று தொழிற் பெயர்களை ஒரே பாட்டில் அமைத்து கம்பர் நம்மை உணர்ச்சி வெள்ளத்தில் மூழ்கடித்து விடுகிறார்.

தொழில் பெயர்களால் உணர்ச்சிகளை வெள்ளமிடச் செய்த கவிக்கு நாயகர், மற்றொரு இடத்தில் வினைமுற்றுகளைப் பயன்படுத்தி பல்வேறு உணர்ச்சிகளை எழுப்புகின்றார்.

"விழுந்தாள்; புரண்டாள்; உடல் முழுதும்
வியர்த்தாள்; அயர்ந்தாள்; வெதும்பினாள்;
எழுந்தாள்; இருந்தாள்; தளிர்க் கரத்தை
நெரித்தாள்; சிரித்தாள்; ஏங்கினாள்;
கொழுந்தா! என்றாள்; அயோத்தியர் தம்
கோவே! என்றாள்; எவ்வுலகும்
தொழும்தாள் அரசேயோ! என்றால்;
சோர்ந்தாள்; அரற்றந் தொடங்கினாள். - (6.22.9)

சீதையின் மெய்ப்பாடுகள் ஒவ்வொன்றாக நம் கண்முன் விரிகின்றன. பல்வேறு நிலைகளை உற்ற சீதை இறுதியில் அரற்றத் தொடங்கினாள் என்று கவிஞர் முடிக்கும்போது, அரற்றாத நெஞ்சங்கள் இல்லை எனலாம்.

கம்பர் காவியம் மிக மிக விரிந்தது; அவர் உணர்த்தும் காவியப் பண்பாடும் பல் நிறத்தன; திறத்தன. அவற்றுள் இரண்டொன்றே இங்குச் சொல்லப்பட்டன.

## மொழி வெண்பா

**கலைமாமணி கவிஞர் கோவி. கலியபெருமாள்**

நலன்காணும் நற்றமிழால் நாட்டைப் புரந்து
புலன்காணும் இன்பமே போற்ற - இலங்கும்
தமிழ்த்தாய் ஏற்றம் பொழிந்திருப்பாள்; வாரீர்!
அமிழ்தாம் மொழிகாக்க ஆர்த்து.

ஈன்று புரந்திங்கே ஏற்றமுறத் தம்மக்கள்
ஊன்றி மொழிப்பற்றில் ஓங்கிடவே - சான்றின்
தகவேந்தி மண்ணில் தழைத்திடவே செய்தல்
அகமேந்தும் பெண்ணிற் கணி.

கண்ணுக்குள் பேரொளியாய்க் காணரும் நற்பொருளாய்
எண்ணிக்கை யில்லாநல் லேற்றங்கள் - மண்ணில்வாழ்
நற்றமி ழால்தமிழர் நாளுமே பெற்றிங்கே
உற்றமிழ்த் தாயை உயர்த்து.

சாற்று மொழிகளினுள் தாமுதலாய்ப் பூவுலகில்
தோற்று மொழிதமிழாய்த்; தூயவளம் - ஏற்றுள்ள
புத்தமுத மாமொழியைப் பூவுலகோர் போற்றிடவே
எத்திக்கும் நாட்டுதலே ஏற்பு.

சிக்கெனவே பற்றினேன் சீர்கொள் தமிழ்த்தாயே!
வக்கணையோ டென்னை வண்டமிழே! - இக்கணத்தே
ஆற்றுப் படுத்தியே ஆட்கொள்வாய்! நற்றமிழ்சூழ்
காற்றாய்ச் சுழல்வேன் கலந்து.

அரும்பும் மழலையர்க்(கு) அன்னை மொழியைக்
கரும்பாய்ப் பிழிந்திங்கே கல்வி - விரும்புவகை
ஊட்டுக! தங்கடனாய் ஒவ்வொரு பெற்றோரும்
காட்டுக! நம்மொழிக்குக் காப்பு.

தமிழின் சிறப்பும் தனிப்புகழும் கண்டே
அமிழ்த மொழியதனைக் கற்க - அமையுமோர்
வாய்ப்பிலையே என்று வருந்தினராம் காந்திமகான்!
தூயதமிழ் போற்றுத் தொடர்ந்து.

பன்மொழியை ஆய்ந்திட்ட பாரதிதாம் கண்டவற்றுள்
நன்மொழியாய் நற்றமிழ்போல் ஞாலத்துள் - கண்டதிலை
என்றாரே! இங்குற்ற எந்தமிழர் நந்தமிழ்க்(கு)
என்னேற்றம் கண்டார் இயம்பு?

# கம்பன் புகழ்பாடும் கவின்மிகு புதுச்சேரி!

**கவியரசு கண்ணதாசன்**

தோப்பிலே பழுத்து நின்று
தோன்றியும் மறைந்தும் தோன்றும்
காப்பிலாக் கனியென் றாலும்
களவுசெய் திடவொண் ணாத
மூப்பிலாத் தமிழே வாழ்க!
முடிவிலாக் கண்ணா வாழ்க!
காப்பிலே முன்னால் நிற்கும்
கலைத்திரு மகளே வாழ்க!

அன்புக்கே உடலங் கொண்டே
அருந்தமிழ்ப் பணியே செய்து
என்பெலாம் பாசம் பொங்க
இன்முகம் மலர்ந்து நோக்கும்
அன்பரே! தமிழே! பாண்டி!
அருணமா மலையே வாழ்க!
அன்புடன் நிறைந்து நிற்கும்
அவையுளார் நெடுநாள் வாழ்க!

அன்னியர் பிடியில் வாழ்ந்தும்
ஆங்கிலம் பிரெஞ்சில் தேர்ந்தும்
முன்னையோர் தமிழை இன்னும்
முறையாகக் காத்து நிற்கும்
நன்னகர் புதுச்சே ரிக்கு
நன்றிமேல் நன்றி சொன்னேன்
இந்நகர் தானோ அந்த
இனியவன் சடையன் தன்னூர்!

- பாரதி - புதுவை -

இந்தியர்தம் பேருரிமை எல்லாமும் கொள்ளவந்த
அன்னியரைக் கடிந்தவராம் அன்புமகன் பாரதியார்!
பாரதியார் என்றாலே பார்த்தனுக்கும் தேரெடுத்த
சாரதியார் கண்ணனுக்குத் தனிப்பாசம் பொங்கிவரும்!
அத்தகைய பாரதியின் அற்புதங்கள் வந்தஇடம்
முத்தனைய கவிதையெலாம் முளைத்தஇடம் புதுச்சேரி!
அழகுநகர் புதுச்சேரி ஆண்டாண்டு கம்பனுக்குப்
பழகுதமிழ் விழாவெடுத்துப் பழகியதை என்னவென்போம்!
அன்பொழுகும் கண்ணாரும் ஆற்றல்மிகு இளைஞர்களும்
கம்ப(ன்)விழாக் காண்பதற்குக் காத்திருப்ப தென்சொல்வோம்!
இத்தகைய விழாக்களிலே இவ்வளவு பெண்குலங்கள்
சித்திரத்துப் பாவைகள்போல் சேர்ந்திருக்கும் மாட்சியினை
எவ்விடத்தும் கண்டதில்லை; எந்நாளும் கண்டதில்லை!
கண்களுக்(கு) இயற்கையின்மேல் காதல்வந்த காட்சியைப்போல்
பெண்களுக்கும் கம்பனின்மேல் பிரியம்வந்த புதுச்சேரி!
கன்னிவய துடையாரும் கடந்தவய துடையாரும்
சொல்நயத்தை ரசிக்கின்ற சுவையுடைய புதுச்சேரி!
அடுப்பூதும் பெண்களுக்குப் படிப்பெதற்(கு) என்றவர்கள்
படிப்போடும் ரசனைவரப் பார்த்திருக்கும் புதுச்சேரி!
கம்பனது பாத்திரத்தைக் கடற்கரையில் விட்டதுபோல்
தெம்புடனே ஓடிவந்து தேடுகின்ற புதுச்சேரி!
சாத்திரங்கள் கற்றோரும் சதுர்மறைகள் கற்றோரும்
பாத்திரங்கள் அத்தனைக்கும் பால்வார்க்கும் புதுச்சேரி!
சீதையினைத் தசரதனைச் சீர்ராமன் இலக்குவனைப்
போதையுடன் கேட்டிருக்கும் பொழில்மிகுந்த புதுச்சேரி!
மதுக்கடைகள் இருந்தாலும் மண்டிவரும் தமிழ்க்கவிக்குப்
புதுக்கடைகள் திறந்துவைக்கும் பொன்னகரம் புதுச்சேரி!
வருணனவன் பொய்த்தாலும் வருடங்கள் அத்தனையும்
அருணகிரி பொய்யாத அழகுநகர் புதுச்சேரி!
திட்டமிட்(டு) ஊரெடுத்துச் சீரான தெருவெடுத்துக்
கட்டிவைத்த வெள்ளையர்கள் கருதி யிருப்பாரா
கம்பனுக்குப் புதுச்சேரி கன்னிவிழாக் காணுமென்று?
ஓராயிரம் ஆண்டும் ஓடிவிட்ட பின்னாலும்
பல்லாயிரம் பாட்டுப் பாடிவைத்த கம்பனுக்குச்
சொல்லாயிரம் கொண்டு துதிசெய்யப் போந்தவர்கள்
எல்லாருக்கும் முன்னுரையில் என்வணக்கம் கூறுகிறேன்!
கூத்தாட்டம் போடாமல் குரங்காட்டம் ஆடாமல்
நாட்டியங்கள் கச்சேரி நாடகங்க ளில்லாமல்
சொல்லுக்கே முதலிடத்தைத் தோற்றுவித்த புதுச்சேரி
வல்லதமிழ் மக்களெலாம் வணங்கும் நகராகும்!
முன்னுரையை முடிக்கின்றேன்! மூதறிவுக் கவிஞரெலாம்
தம்முரையை முடித்தபின்பு சரக்கேதும் எனக்கிருந்தால்
பின்னுரையில் சொல்கின்றேன்; பெரியோர்க்கு மறுவணக்கம்!
கண்ணாஎன் பேரருளே! கருணைத் திருவுருவே!
உன்னாலே கவியரங்கம் உயர்ந்துநிற்க வேண்டுகிறேன்!
கண்ணன்நிறம் நீலம்தான்; காகுத்தன் நீலநிறம்;
விண்ணழகும் நீலநிறம்; விரிகடலும் நீலநிறம்!
கண்ணன் சீர்ராமன் கடல்வானம் அத்தனையும்
கண்ணுக்குள் வைத்திருக்கும் காரணத்தால் கன்னியரின்
கண்ணிரெண்டும் நீலநிறம்! கடவுள்நிறம் ஆனதனால்
பெண்குலத்தை வாழ்த்துகிறேன்; பின்வருவார் பெருங்கவிஞர்!

-1975

# இராவணனும் தோன் முயானும்

பேராசிரியை – புலவர் ச. மதனகல்யாணி, புதுவை

இலக்கியப் படைப்புகள் எனும் சந்தனப் பேழைகளுள் ஒளிவீசும் அணிகலன்கள் மனிதர் தம்மின் பல்வேறு கூறுகளே! கதை மாந்தர்களாய் அவை உருவெடுத்துப் பல்வேறு குணங்களாய்த் தனித்தனியாக நின்று ஒருங்கு நிகழ்வாகப் பையப் பைய இயங்குவர். அவர்களிற் சிலர் உலகுள்ளளவும் எல்லா நாடுகளுக்கும் சில பண்புகளைக் குறிக்கும் குறியீடாயமைவர். கற்பனையால் படைக்கப்பட்ட அத்தகையோர் (MYTH) உலக வழக்கில் சின்னங்களாய் உலவுவர். இதற்கு எடுத்துக்காட்டாக இராமன் மானுடத்தையும், இராவணன் பைசாசத்தையும் தோற்றுவிப்பதைக் காணலாம். இவர்களை யொத்தவர் வெளிநாட்டு இலக்கியங்களிலும் காணலாம். ஈங்கு இடம்பெறப் போகின்றவர்கள் கம்பனின் இராவணனும், பிரெஞ்சு நகைச்சுவை நாடக நாவலனின் மோலியேர் (1622 - 1673) இயற்றிய தோன் முயான் என்ற கதாநாயகனும். இராவணன் போன்றே பேய்மனம் கொண்ட தோன் முயான் நாடகத்தின் வில்லனும் ஆவான் என்பதை இங்குக் குறிப்பிட வேண்டும். இருவருமே காமத்தால் அழிந்த சிறந்த வீரர்கள். இவர்களின் ஒப்பாய்வை அணுகுமுன் "தோன் முயான்" என்ற தலைப்பேற்ற நாடகத்தின் கதைச் சுருக்கத்தைக் காண்போம்:

**தோன் முயான்** என்ற நற்குடிப் பிறப்புடைய இளைஞன் காமுகன். மடத்திலிருந்த எல்வீர் என்ற பெண்ணைக் கடத்திக் கொண்டுவந்து கைவிட்டவன். எல்வீரின் உடன்பிறந்தோர்களான **தோன் கர்லோஸ், தோன் அலோன்ஸ்** அவமானத்தைத் தாங்காமல் அவனைப் பழிவாங்கத் தேடி வருகின்றனர். அவர்களின் ஒருவனைத் தோன் முயான் திருடர்கள் கூட்டத்தினின்று காப்பாற்றுகின்றான். தோன் முயானை அவர்கள் அம்முறை விட்டு விடுகின்றனர். அவன் பாவச் செயல்களில் ஒன்று **"கொம்மாந்தர்"** என்ற இராவுத்தர் என்ற பட்டம் கொண்டவரைக் கொலை செய்தது. கல்லறையில் அவருக்காக எழுப்பப்பட்ட சிலையை அவன் விருந்துக்கு அழைக்கின்றான். விருந்தையேற்ற சிலை தன் கல்லறையில் அவனைப் பதில் விருந்துக்கு அழைக்கின்றது. விருந்திற்கிடைப்பட்ட நேரத்தில் பெண் உருவில் வந்த காலன் அவன் திருந்துவதற்கு வாய்ப்பு அளிக்கின்றது. அதைப் பயன்படுத்திக் கொள்ளாத தோன் முயான் மாள்கின்றான்.

அரக்கக் குணத்தை இராவணனாக உருவாக்கிக் காட்டியதுபோல், 17 ஆம் நூற்றாண்டுக்குத் தக்கவாறு மோலியேர் அத்தீய தன்மையைத் தோன் முயானாகப் படைத்திருக்கின்றான். தோன் என்பது உயர்குலப்பிறப்பில் வந்தவர்களுக்கு வழங்கப்பட்ட விருதுப் பெயர். ஆனால், அதற்குத் தக்கவாறு அவன் நடந்துகொள்ளவில்லை.

"கீழ்த்தரமான மனிதர்களாய் வாழும்போது பெரிய பரம்பரை இரத்தத்தில் பிறந்தது தான் ஒரு பெருமை என்று நினைத்தாயா? கிடையவே கிடையாது. பண்பு இல்லாத இடத்தில் பிறப்பின் பெருமை இல்லை. நம் முன்னோர்கள் பெருமையின் பங்கு நமக்குரிமையாக வேண்டுமென்றால், நாம் அவர்களைப்போல் இருக்க முயற்சிக்க வேண்டும். அவர்கள் சேர்த்து வைத்த புகழ், அதே போன்ற பெருமையை அவர்களுக்குத் திருப்ப, நமக்கு ஆணை இடுகின்றது.. ஆனால், உன் முன்னோர்களின் வழியில் நீ பிறந்திருப்பது வீண். உன் உடலில் ஓடும் இரத்தம் அவர்களை அவமதிக்கச் செய்கிறது... கடைசியாக ஒன்று சொல்கிறேன். வெறுப்பிற்குரிய வாழ்க்கை நடத்தும் பெரிய மனிதன் இயற்கையில் ஓர் அரக்கன் ஆவான்."

(தோன் லூய்-நிகழ்ச்சி 4-காட்சி-4.)

தோன் முயானின் தந்தையான **தோன் லூய்** வரத்தால் பெற்ற ஒரே மகனை மனம் நொந்து வசைமாரி பொழிந்தான். "இவ்வளவு தகுதியுள்ள மனிதரா (தோன் முயானா) இப்படிப்பட்ட ஈனமான காரியம் செய்வார்."

(குய்ஸ்மான் - நிகழ்ச்சி 1- காட்சி-1)

என எல்வீரின் வேலைக்காரன் குய்ஸ்மான் வாய் பிளந்து நிற்கின்றான். அரக்கனாகவே பிறப்பேற்ற இராவணனும் சிறந்த குடியின் வழித்தோன்றல்தான்.

"புலத்தியன் மரபில்வந்த புண்ணிய மரபு பூண்டோய்" நீ ஒரு பெண்ணைக் கொல்வது நிலத்தில் தோன்றியவரின் 'இயல்பு' மல்ல; வானுலகத்தாரின் இயல்பு மல்ல; தர்மமும் அன்று, வெற்றிக்கு உரியதும் அன்று" என யுத்த காண்டத்தில் இராவணன் சோகப்படலத்தில் மகோதரனின் கூற்றாகும். கும்பகர்ணனும் இராவணனுக்கு இவ்வாறே கூறுவான்.

"புலத்தியன்....நீர தால்"
(கும்பகர்ணன் வதைப்படலம் - பாடல் எண் 1300
- யுத்த காண்டம்)

"தீயினை நயப்புறுதல் செய்வினை தெரிந்தாய்
சிட்டார் செயல் செய்திலை குலச்சிறுமை செய்தாய்"

என்று அவனே தோன் லூய் கூறியவாறு இடித்துரைக்கின்றான்.

இவ்வரக்கர்களை நெறிப்படுத்த பலர் சாம, பேத, தான, தணடம் என்ற முறைகளை வீணே கையாண்டனர். அவர்களிற் சிலரைக் காண்போம்:

தோன் முயானுக்கு இறுதிவரை உடனிருந்த **ஸ்கானாரேல்** என்ற ஊழியன், கைவிடப் பட்ட மனைவி எல்வீர், தந்தை தோன்லூய், பிச்சைக்காரான், ஆவி உருவில் வந்த காலன் ஆவர்.

இராவணனுக்கு அறிவுரை கூறுபவர் எண்ணிக்கை அதிகமானது. இருப்பினும் சிலரைக் குறிப்பிடலாம் : மாரீசன், வீடணன், கும்பகர்ணன், இந்திரசித்து, இவர்களோடு இராமனையும் சீதையையும் சேர்த்துக்கொள்ள வேண்டும். ஆனால் இவர்கள் அறிவுரைகள் விழலுக்கு இரைத்த நீராகியது. ஸ்கானாரேல் வாயால் அதை மெய்ப்பிப்தைக் காண்போம்.

"(தோன் முயான்) பூமாதேவி இதுவரை பெறாத ஒரு கொடும்பாவி, ஒரு வெறியன், ஒரு நாய், ஒரு பேய், ஒரு முரடன்.. சிம்ம அவதாரம். இவன் இப்போது வாழும் வாழ்க்கை மிருகத் தனமானது.. சுட்டிக்காட்டும் குற்றங்களுக்குச் செவிசாய்க்க மாட்டான்."

நிகழ்ச்சி - 1-காட்சி - 1 (தோன் முயான்)

ஸ்கானாரேல் ஒருவனே பொழிந்த வசைமொழியை அங்கதன்,
"நீதரக் கொள்வேன் யானே யிதற்கினி நிகர்வே றெண்ணி
நாய்தரக் கொள்ளும்"

(இராவணன் மந்திரப்படலம் - யுத்த காண்டம்)

மாரீசன் : "மதியற்றாய்"

சீதை : ஏழை, வஞ்சனையாளன், மாயையால் மறைந்து வந்தவன்.

வெங்கணாய், ஏகும் நெறியறிந்திலாத நீசா
நீயே எண்ணியது எண்ணி உன்முடியைத் தேடிக்
கொள்கின்றாய்"

என இன்னும் பலர் மொழிகின்றனர். இராவணன் "சீதையை விடுவதுண்டோ" என்று நெடு மரமாய் நின்றான். இவ்விருவரும் நெறிப்படுத்தும் உரைகளை ஏற்பாரில்லை. "என் ஆசைகளின் அசுரத்தன்மையை எதுவும் அடக்க முடியாது" என்று தோன் முயான் நிற்கின்றான்.

(நிகழ்ச்சி 1 - காட்சி - 2)

உயிருக்குப் பயந்த இராவணன் சீதையை மாறுவேடத்தில் வந்து கவர்ந்தது போன்று, தோன் முயானும் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள கிராமத்தான் உடைக்குள் புகுந்து கொள்கின்றான்.

இராவணனைப் பலர் எச்சரிக்கின்றார்கள் :

இந்திரசித்து : "சீதைபால் விடுதி - யாயின் அனையவர் சீற்றத் தீர்வர் தீமையும் பொறுப்பர்..."

மாரீசன், வீடணன், கும்பகர்ணன், சீதை :

"பெற்றுடை வாளு நாளும் பிறந்துடை யுரனும் பின்னும்
மற்றுடை யெவையும் தந்த மலரயன் முதலோர் வார்த்தை
விற்றொடை யிராமன் கோத்து விடுதலும் விலக்குண்டு
எல்லாம்
இற்றிடைந்து இறுதல் மெய்யே....!"

ஆனால்,

மன்ற லங்குழற் சனகிதன் மலர்க்கையான் வயிறு
கொன்ற லந்தலைக் கொடுநெடுந் துயரிடைக் குளித்தல்
அன்றி தென்றிடின் மயன்மக எத்தொழி லுறுதல்
இன்றி ரண்டினொன் றாக்குவன் தலைப்படி னென்றான்

(இராவணன் - தேரேறு படலம் - யுத்த காண்டம்)

என்று இராவணன் போருக்குப் புறப்பட்டான்.

தோன் முயானும் இராவணன் போன்றே அரக்க வழியினின்றும் விலக விரும்பவில்லை.

ஸ்கானாரேல் : நீங்கள் காப்பாற்றப்படுவீர் என்று நம்பிக்கை கொண்டிருந்தேன். ஆனால், இப்பொழுதுதான் அதை இழந்தேன். உங்களை இதுவரை பொறுத்த ஆண்டவன் இந்த இறுதிக் கோலத்தை X முற்றிலும் தாங்கமாட்டான்.

X இறுதிக் கோலம் : உலகை ஏமாற்ற தோன் முயான் திருந்தியவன்போல் நடித்து மேலும் மற்றவர்களின் வெறுப்பை மூட்டுகின்றான்.

ஆண்டவன் இன்றைக்காவது நாளைக்காவது கொலையாளர் களைத் தண்டிப்பான். கெட்ட வாழ்க்கை, கெட்ட சாவைத் தரும்..."

(நிகழ்ச்சி I காட்சி-2)

எல்வீர் : உங்கள் வாழ்வைத் திருத்தி அமைத்துக் கொள்ளுங்கள். உங்கள் அழிவைத் தடுத்துக் கொள்ளுங்கள்.. எனக்கிழைத்த அவமானத்திற்குக் கடவுள் உங்களை நிச்சயம் தண்டிப்பார்... வஞ்சகனே... (தெய்வத்தின்) பயங்கரத் தண்டனை உங்கள் மேல் விழக் காத்துக் கொண்டிருக்கிறது. உடனடியாகப் பாவ மன்னிப்பால் அதைத் தவிர்க்க வேண்டும்.

இறுதியாகத் தெய்வமாக இராமனும், காலனாகப் பெண் உருவில் வந்த ஆவியும், விருந்துண்ண வந்த சிலையும், இவ்வரக்கர்களுக்கு உயிர்ப்பிச்சை தர முன் வருகின்றனர்.

இராமன் : "தருமத்தினாலன்றி அதருமத்தினால் பெரும் போரை வெல்லுதல் தேவர்கட்கும் அருமையானதென்பதை மனத்திலே உறுதியாகக் கொள்வாய்; நீ இப்போது என் கையால் இறந்திருப்பாய். ஆனாலும், உன்னுடைய தனிமையைக் கண்டு இரக்கங் கொண்டு உன்னைக் கொல்வதாகிய அச்செயலை.. நான் நினைத்திலேன்... உனக்குத் துணையாக அமைந்த சேனைகள் காற்றினால் மோதப்பட்ட பூளைப் பூண்டுகள் போலாயினவற்றைக் கண்டாய். ஆதலால், இன்று போய்ப் போர்க்கு நாளை வாவென நல்கினான்"

ஆவி : "ஆண்டவன் அருளைப் பெற ஒருசில நிமிடந்தான் இருக்கின்றது தோன் முயானுக்கு. இப்போது திருந்த வில்லையென்றால் அவன் இழப்பு முடிவு செய்யப்பட்ட ஒன்று.

சிலை : தோன் முயான்! பாவத்தில் பதிவது பயங்கர மரணத்திற்குக் கொண்டு செல்லும். உதைத்து நீ தள்ளிய ஆண்டவனின் அருள் அதன் கோபத்திற்கு வழி திறக்கும்,

இவர்கள் இறந்த பிறகு இவர்களோடு ஒன்றிய இரண்டு உயிர்கள் இடும் ஓலத்தைக் கேட்போம் :

ஸ்கானாரேல் : "இவருடைய சாவால் எல்லாரும் திருப்தி யடைந்தார்கள். அவமதிக்கப்பட்ட ஆண்டவன், மீறிய சட்டங்கள், கற்பழிக்கப்பட்ட கன்னிப்பெண்கள், அவமானப்பட்ட குடும் பங்கள், தலைகுனிவு ஏற்ற பெற்றோர்கள், அலைக்கழிக்கப்பட்ட மனைவிகள், கழுத்தைப் பிடித்துத் தள்ளப்பட்ட கணவன்கள், எல்லாரும் மகிழ்ச்சியடைவார்கள். நான் மட்டுந்தான் துன்பப் படுகின்றேன். என் கூலி! என் கூலி!" என்று கையறு நிலையில் உண்மையாகத் தோன் முயானுக்கு உழைத்த சேவகன் ஒன்று மில்லாமல் நின்று கதறுகின்றான்.

மண்டோதரி : "கள்ளிருக்கு... தடவியதோ ஒருவன் வாளி"

(இராவணன் வதைப்படலம் - பாடல் 3906 - யுத்த காண்டம்)

என்று கதறுகின்றாள். மாயன் மகளாய் இருந்தும் மாய அரக்கன் மனைவியாய் வந்தும், சானகியை மனச்சிறையில் வைத்த காதலைப்போல் அவளால் இடம்பெற முடியவில்லையே என்று பெண்குலத்தினரில் சிலர் இன்றும் ஏங்கும் நிலை உண்டே! ஆண்குலத்தில் இராமனைக் காண பெண்கள் நிலை உயர இராமகாதை என்றென்றும் எல்லார்க்கும் ஓர் ஒளிவிளக்கு!

# காதல்

**பகீரதி சுதேந்திரன், செர்மனி.**

முன் பிறப்பின் பந்தமிது
இன்பத்தின் சொந்தமிது!
இதயமென்னும் கோயிலில்
உதயமாகி, உணர்வெய்தி
இதமளிக்கும் இணைப்பு!

காற்றில் தவழும் அவள் கூந்தல்!
கரும்பாய் இனித்திடும் சொற்கள்!

கயல்விழி அவளைக் கண்ட நாளிலிருந்து
கண்களில் ஏதாம் துயில்!

முகமலரில் வண்டிரண்டு சுவைக்குதே!
அகமலரில் அன்பு உற்றெடுக்குதே!

நந்தவனக் குயில் போல்
சுந்தரி பாடுகின்றாள்!
அன்பமுதை ஊட்டுகின்றாள்!
இன்பமதை மீட்டுகின்றாள்!

பாவையவளைக் கை பிடித்தேன்!
பைந்தமிழ்த் தேனைக்
குடம் குடமாய்க் குடித்தேன்!

# பிரஞ்சு இலக்கியமும் கம்பராமாயணப் பாத்திரங்களும்

**திரு. வரத. சிவராமன்**, முன்னாள் வருவாய்த்துறை அதிகாரி (France)

"யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம்" - இது பாரதி வாக்கு. உச்சநீதிமன்றத் தீர்ப்பு. ஏன்? நான்மறைத் தீர்ப்பென்றே கொள்ளலாம்.

இளமை, அழகு, வீரம், பாத்திரப்படைப்புக்கொப்ப வளைந்து, இயைந்து கொடுக்கும் நயம் (Malleabilité) இத்துணையும், இன்ன பிறவற்றையும் தன் வயம் கொண்டது தமிழ். இம்மொழியைத்தான் கம்பனும், வள்ளுவனும், இளங்கோவும், பாரதியும், பாரதிதாசனும் இன்ன பிற செந்நாப்புலவர்களும், தங்கள் உலைக்களங்களாகப் பயன் படுத்தித் தமிழ்மொழியால் அவர்கள் சொல்லாட்சி நடத்திய நாடும் இதுதான்.

கூர்ந்து நோக்குங்கால், இதில் வியப்பொன்றுமில்லை. இன்றைக்குச் சுமார் ஐயாயிரம் ஆண்டுகட்கு முன் தொல்காப்பியனார் கையாண்ட 'இயம்பினார் புலவர்' என்ற வரி தமிழின் பழமைக்குக் கட்டியங்கூறுகிறது. தமிழ் கல்தோன்றி மண் தோன்றாக் காலங்களுக்கு அப்பாற்பட்டு இருத்தல் வேண்டும்.

இத்துணைச் சிறப்புப் பெற்ற தமிழ் இன்று எந்நிலையில் உள்ளது என நோக்குங்கால் வேதனையே மிஞ்சுகிறது.

இவ்வேளை, எம்நினைவில் வருவது பிரஞ்சுமொழி, தக்கோன் ஒருவன், இம்மொழியைக் கையாளும் போழ்து நாம் செவி மடுக்க நேர்ந்தால், உள்ளபடியே இன்பத் தேன் வந்து பாயும் நம் காதினிலே. இது உண்மை. ஒரு சொல்லுக்கு அநேகமாக பல பொருள்கள் இல்லாத, சிறப்பான, செறிந்த கருத்துக்களைத் தன்பால்கொண்டு, மிகவும் வேகமாகவும், அதே போழ்து இனிமையாகவும் பேசவல்லது, பிரெஞ்சுமொழி. இன்றும், உலக அளவில் ஏற்படும் ஒப்பந்தங்களில், பிரஞ்சு மொழியில் ஒரு நகல் இருக்கும்.

பிரான்சில் சமுதாய மலர்ச்சி ஏற்பட்ட காலை, அதற்கு உற்றதுணையாய் இருந்தது இம்மொழி, "La Marseillaise" என்ற கீதத்தைப் பாடித்தான், அந்நாட்டு மக்களை விழிப்பு, வீறு கொண்டு எழச்செய்து "சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம்" எய்தினர். அகிலம் போற்றும் VOLTAIRE/ ROUSSEAU போன்ற சமுதாய சிற்பிகளும் MONTESQUIEU, DESCARTES, PASCAL... போன்ற சிந்தனையாளர்களும், பதினேழாம் நூற்றாண்டில் "ஒரே இடம், ஒரே நாள், ஒரே உத்தி" என்ற நாடகப்புரட்சி செய்த CORNELLE, BOILEAU, RACINE ET LA FONTAINE ... போன்ற எழுத்தாளர்களும், CHATE AU BRIAN, LAMARTINE, VIGNY 'LES ROMANTIQUES" கவிஞர்களும் VICTOR HUGO., சமீபத்தில் நம்மைப் பிரித்த தத்துவமேதையும் "Existantialisme" என்ற மரபின் தந்தையுமாகிய Jean Paul Sartre......... வரை ஆயிரம் எழுத்தாளர்கள் தோன்றிச் சங்கம் அமைத்து (L'académie) இம்மொழிக்கு மேன்மேலும் வளம் சேர்ப்பிக்கின்றனர். இத்தனை பெருமை கொண்ட பிரஞ்சுமொழி, இன்றைக்குச் சுமார் அறுநூறு ஆண்டுகட்கு முன் இருந்ததே இல்லை எனலாம். Celtes' Gaullel, Breton எனப்பல பிராந்திய மொழிகள் ஒரு பக்கமும், லத்தின் மொழியில் பேசுவது, எழுதுவது தான் நயக்தக்க நாகரீகம்! படித்தவர்கள், பண்பாளர்கள், மேட்டுக்குடி மக்கள் பிரஞ்சு மொழியில் எழுதுவது அநாகரீகம் என்றும் கூறப்பட்டு வந்த வரலாறு நாம் அறியாததொன்றல்ல.

ஏதோ இங்கு எம் நினைவுக்கு வருவது, தெற்கே பிறந்து வளர்ந்த மத்வர், சங்கரர், இராமானுசர் - இம்மூவரும் மறைக்கு விளக்கவுரை எழுதியது சமற்கிருதத்தில்தான். ஆனால், அவர்கள் தங்கள் விட்டில் பேசியதோ முறையே கன்னடம், மலையாளம், தமிழ்.

இப்பிரஞ்சுமொழி வல்லுநர்களின் படைப்பைப் படிக்குங்கால், நம்மையறியாமலே நாம் கம்பன் காவியத்தைப் பல இடங்களின் நினைவு கூர்கிறோம். எப்படி, எப்பொழுது நம் கம்பநாட்டாழ் வானை இவர்கள் படித்தார்கள் என்று கேட்கத் தோன்றுகிறது.

காதல் கலையில் LAMARTINE, ஒருநாள் மாலை, தீஞ் சோலை நடுவே அமைந்த அழகிய ஏரியில், ஒரு சிறிய படகில் தன் காதலிக்காகக் காத்திருக்கிறான். பொழுது சாய்கிறது. சாம்பல் நிறமேகங்கள் ஏரியைக் கவிழ்ந்து கொள்கிறன. அவன் தவிக்கிறான். ஏங்குகிறான், அவளும் வந்தாள். இவன் அவளை, ஆரத் தழுவி, மெல்ல பக்கத்தில் இருத்தித் துடுப்பை இயக்குகிறான். மாலைப்பொழுது கடிதில் மறைகிறது. காலம் தன் இரண்டு சிறகுகளையும் விரித்து வேகமாகப் பறப்பதை உணர்ந்து பாடுகிறான்.

" Oh! Temps/ Suspends ton Vol!"

ஏ, காலமே! உன் சிறகுகளைக் கட்டு, நிலைகொள்ளச் செய். இந்த இன்ப வேளையை எங்களுக்கே சொந்தமாக்கு'.

துன்பத்தில் உழலும் எத்தனையோ மக்கள் பொழுது எப்பொழுது புலரும் என்ப் புலம்புகின்றனர். அவர்கட்காக ஓடு என்கிறான்.

இங்கே, விசுவாமித்திர மகரிசி அண்ணலுக்குச் சானகியைக் காட்டிவிட்டு, அவரைத் தன் குடிலுக்கு அழைத்துச் செல்கிறார். முனிவரும், தம்பி இலக்குவனும், கோசலை மைந்தனுக்குத் தனியே படுக்கை விரித்து, அவர்கள் வேறு இடம் எய்தினர். இருள் கவியும்போல்பவனான இராமன் அன்று இரவு தவித்த தவிப்பு, அப்பப்பா சொல்லில் அடங்காது. கம்பன் இந்தத் தவிப்பை எப்படி வர்ணிக்கின்றான் பாருங்கள். வெண் முழுநிலா அவனை வதைக்கிறது. "நாம் அறிந்தவரை விடம் கருநீலம் தானே. எப்படி வெண்மையாக வந்தென்னை வதைக்கிறது" என மருகுகிறான்.

**மிதிலைக்காட்சிப் படலம்**
கொள்ளை கொள்ளக் கொதித்தெழும் பாற்கடல்
பள்ள வெள்ளம் எனப்படரும் நிலா;
உள்ளே உள்ள உயிரைத் துருவிட
வெள்ளை வண்ணவிடமும் உண்டாங் கொலோ.

CORNEILLE.........யின் "Le CID" என்ற காவியத்தில், RODRIGUES என்ற பதினாறாட்டைப்பிராயத்தான் தன் காதலி பொருட்டு, களம் பல கண்ட படைத்தலைவனை எதிர்க்கிறான். தலைவன் சிறுவனைப் பார்த்து விளிக்கிறான்.

"ஏ சிறுவனே! தோல்வியே கண்டிராத என்னையா எதிர்க்கத் துணிகிறாய்! உயிர்மேல் ஆசை இருந்தால் ஓடிப்போ" என்று உறுமுகிறான்.

இளைஞன் பதில் கூறுமுகத்தான் "Qui, Vous êtes invaincu, et non invincible...La Valeur n'attend point le nombre d'années" என்று பதில் இறுத்தித் தலைவனை வெல்கிறான். 'ஆம்! நீ தோல்வியே கண்டதில்லை. உண்மை! ஆனால், வெற்றிகொள்ள முடியாதவன் அல்லவே நீ! மேலும் வீரத்திற்கு வயது ஒரு தடங்கலில்லை. வெற்றி அவன் ஆற்றலைப் பொறுத்தது' என்று பதிலடி கொடுக்கின்றான்.

விசுவாமித்திர ரிசி, தான் நடத்தப்போகும் வேள்வி முழுமை பெற, இராமனை அனுப்புமாறு தயரதனைக் கேட்கிறான் மன்னனோ அரண்டு ஆனால் பணிவுடன் "பெரியோய், இராமன் ஒன்றுமறியாச் சிறுவன், வேண்டில், யானே என் படையுடன் வந்து வேள்விக்கு எந்த ஊறும் வராத வண்ணம் பார்த்துக்கொள்கிறேன். புறப்படுங்கள்" என்கிறான். பிறகு நடந்த கதை, சிறார்கள் ஆற்றிய வீரச்செயல்கள் எல்லாம் காப்பியங்கண்டவர்கள் அறிவர். ஆம், "La Valeur n'attend point le nombre d'années" ..... என்ற Corneille.. வாக்கு அன்றே இராமகாதையில் மெய்ப்பிக்கப் பட்டுவிட்டதன்றோ!

கையடைப்படலம்

தொடையூற்றில் தேன்துளிக்கும் நறுந்தாரான்
ஒருவண்ணம் துயரம் நீங்கப்
படையூற்றம் இலன்சிறியன் இவன்பெரியோய்!
பணியிதுவேல் பனிநீர்க் கங்கை
புடையூற்றும் சடையானும் நான்முகனும்
புரந்தரனும் புகுந்து செய்யும்
இடையூற்றுக்(கு) இடையூறாய் யான்காப்பன்
பெருவேள்விக்(கு) எழுக என்றான்.

இராவணன் தன் சுற்றம், படை, போர்க்கலங்கள் எல்லா வற்றையும் இழந்து நிற்குங் காலை வைதேகி மணாளன் தன் ஒரு அம்பினால் அவனை வீழ்த்தியிருக்க முடியும். ஆனால் அண்ணலோ பிற்காலத்தில், பிரஞ்சு நாடகாசிரியன் CORNEILLE... படைக்கப்போகும் காவியத்தில், ஓர் வீரன் கூறுமாப்போல் :

"A VAINCRE SANS PERIL, ON TRIOMPHE SANS GLOIRE" என்ற இறவா வரி படைக்கக் கட்டியம் கூறுவது போல்,

"இன்றுபோய் நாளை வா" என்று இராவணனை அனுப்பு கிறான் உயிருடன்,

வீரமற்றுவெல்லுதல், புகழிலா, கோழைத்தனமான வெற்றியாகும்.

யுத்தகாண்டம் - முதற்போர்ப் படலம்

"ஆளையாவுனக்கு? அமைந்தன மாருதம் அறைந்த
பூளை ஆயின; கண்டனை; இன்றுபோய்ப் போர்க்கு
நாளை வா" என நல்கினன் நாகிளங்கமுகின்
வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்;

இப்படிப், பல இடங்களில் கம்பன் காவியத்திற்கும், பிரஞ்சு நாட்டின் இலக்கியங்களுக்கும் ஒப்புவமை மலிந்து கிடப்பதை அறியலாம். விரிக்கின் பெருகும். எனவே, ஒன்றை மட்டும் கூறி முடிக்கிறேன்.

Victor HUGO வின் எழுத்துக்கள், குறிப்பாக அவர் தம் "LA LÉGENDE DES SIECLES" 'யுகக்காவியம்' படிக்குங்கால், அவன் கம்பனைப்போல், கல்லிலிருந்து கடவுள் வரை, கோழை 3-ஆம் நெப்போலியனிலிருந்து வீரகிரேக்க சிறுவன் வரை, அவன் தொடாத இடமே இல்லை, பொருளே இல்லை எனலாம். ஒரு சிறுவன், சாலையோரத்தில் எல்லாம் அழிக்கப்பட்ட நிலையில் ஒரு சிறிய முட்செடியில் பக்கலில் நின்றிருக்கிறான். அவ்வழியே ஏகிய வீரன் சிறுவனைப் பார்த்து, சிறுவனே, உனக்கு மலர், கனிவகைகள், அற்புதமான பறவை எது வேண்டும் சொல், தருகிறேன்" என்கின்றான். அதற்கு நீலக்கண்களையுடைய கிரேக்கச் சிறுவன் "நண்பா! எனக்குத் துப்பாக்கியும் ரவையும் கொடு" என்கிறான். இந்த வீரம் செறிந்த நிலைகளைக் கம்பன் காவியத்தில் பலப்பல இடங்களில் காண்கிறோம் அல்லவா?

இத்தகு தமிழின் இன்றைய நிலை என்ன? எழுத்தில் எழுதவொண்ணாப் பேச்சுத்தமிழ் கோலோச்சும் அவலம் காண்கிறோம். பல்லாயிரக்கணக்கானவர்கள் படிக்கும், தமிழ் வார இதழ்களில், ஆசிரியர் விடையிறுக்குங்காலை, பல சமயங்களில் வழங்கும் தமிழ் தலைகுனிய வைக்கிறது. இந்நிலை மாறவேண்டும். பண்டையச் சங்கங்கள் போல், இன்றும் பிரான்சில் நடக்கும் "L'Academie" போல் இங்கும் ஒரு சங்கம் தோன்றல் வேண்டும். அங்கொன்றும் இங்கொன்றுமாக உள்ள கம்பன் கழகங்கள் போல், பல இலக்கியச் சோலைகள் பூக்க வேண்டும். மற்றும் எல்லா வழிகளிலும் தமிழின் தரத்தை உயர்த்தல் வேண்டும். அதற்குள்ள பல வழிகளில் ஒன்றை மட்டும் கூறி முடிக்கிறேன். அதனையும் பாரதியின் வாயால் கேட்போமே!

"பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்
இறவாத புகழுடைய புதுநூல்கள்
தமிழ்மொழியில் இயற்றல் வேண்டும்"
இது அவர் ஆணை.

# MICHELET LA BIBLE DE L'HUMANITE

**நீதியரசர் தாவீது அன்னுசாமி**

19ஆம் நூற்றாண்டு, பிரபல பிரெஞ்சு சரித்திர ஆசிரியர் Michelet, வேத நூல்கள்! அவை தோன்றிய நாடுகளுக்கு மட்டுமே உரியன அல்ல! மனித சமுதாயம் முழுவதுக்குமே உரியன என்ற கருத்தைக் கொண்டார். எல்லா நாட்டு வேத நூல்களையும் ஆராய்ந்து ஒரு நூலை பிரெஞ்சு மொழியில் வெளியிட்டார். அதன் ஒரு பிரிவில், இராமாயணத்தின் பெருமையை உற்சாகத்துடன் எடுத்து உரைத்திருக்கிறார். அந்தப் பிரிவின் ஒரு சிறு பகுதியின் மொழிபெயர்ப்பு பின்னே தரப்பட்டுள்ளது:-

- இவ்வாறு சேதங்கள்
விளைவிப்பதற்கு இடையில்
வானர வீரவானாகிய
அனுமன் வேடிக்கையாகவும்
மனத்தை இளக்குபவனாகவும்
தோன்றுகிறான். அவனதுஉயர்ந்த
உள்ளமும் சேஷ்டைகள்கலந்த
பிரியமூட்டும் பண்புகளும்
ஒரேசமயத்தில் சிரிக்கவும்
செய்கின்றன அழவும் செய்கின்றன.
-அவனேதான் இந்தப்போரின்
'யூலிஸ்ஸும்', 'அக்கிலிஸ்ஸும்'
ஆவான். பயங்கரமான
இலங்கையில், அஞ்சத்தக்க
அந்தப்புரத்தில், சீதையின்
அருகில்வரை, தன்னந்தனியே
நுழையத்துணிகிறான். அவனுடைய
மதுர மரியாதை அவளுக்கு
ஆறுதல் அளிக்கிறது.
எல்லாவற்றிற்கும் மேலாக
அவளை விடுவிக்கிறான் அவன்".

வெற்றிக்குப் பிறகு இராமன் அவனைப் பாராட்டுகிறான். அவனுக்கு முடி சூட்டுகிறான். அச்சமயம் இயற்கையையே மாற்றும் பெரியதோர் சம்பவம் நிகழ்கிறது. இரண்டு பட்டாளங்களுக்குமுன்னிலையில் - மனிதர்கள், தேவர்கள், முன்னிலையில், இராமனும் அனுமனும் கட்டி அணைத்துக் கொண்டனர்.

இனிமேல் யாரும் என்னிடம் குலத்தைப் பற்றிப் பேச வரவேண்டாம். கவிஞர் அதைப் பற்றி மூச்சு விடக்கூட விரும்பவில்லை. ஆனாலும் பிரிவுச் சுவர் வீழ்ந்து விட்டது. இனிமேல் இல்லாமல் ஆகிவிட்டது. 'விலங்கு' குலம் என்பது. ஒழிக்கப்பட்டு விட்டது. அவ்வாறிருக்க எப்படியப்பா மனிதர்களிடையே கடையானவன், அனுமன் என்னை விடுவித்து விட்டான் என்று மார்தட்டிச் சொல்ல முடியும்!

# பிரஞ்சு இலக்கியத்தில் இந்து கலாச்சாரம்

திருமிகு. எஸ். கஸ்கா, புதுவை.

ஒருசில பிரஞ்சு எழுத்தாளர்கள் இந்து புராணங்களைப் பின்பற்றி எழுதியுள்ளார்கள். அவர்களுள் முக்கியமானவர் கவிஞர் லெ கொந்த் தெ லீல் (Leconte de Lisle, 1818 - 1894).

இந்து மகா சமுத்திரத்தில் மோரிஸ் (Maurice) தீவுக்குப் பக்கத்தில் உள்ள ரெயுனியன் (Le R'eunion) என்ற பிரஞ்சுத் தீவில் இவர் பிறந்தார். இந்தப் பிறப்பிடமே ஓர் காரணமாக இருக்கலாம் இவருக்கு இந்து கலாசாரத்தில் ஈர்ப்பு ஏற்பட்டதற்கு.

1845-ல், லெ கொந்த் தெ லீல் பிரான்சுக்கு (France) குடியேறி பாரிஸ் (Paris) நகரில் வாழ்ந்து வந்தார் அரசியலில் ஈடுபட்டுக் குடிய ரசுக் கட்சியில் போராடினார். ஆனால் குடியரசு தோல்வியுற்றதால், மனச் சோர்வு ஏற்பட்டு, அரசியலை விட்டு விலகினார். பிறகு கலைச் சேவைக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டு, ஒரு புதிய கவி பரம்பரையை உருவாக்கினார். அதன் பெயர் பர்னாஸ் (Le Parnasse). அதற்கு அவரே தலைமை தாங்கினார். பர்னாஸின் குறிக்கோள் வாக்கியம் : "கலை! கலைக்காகவே!" (L'Art pour l'Art).

அதே கால கட்டத்தில் புர்னூ.ப் (Burnouf)ம், இன்னும் மற்ற கீழ்த்திசை மொழி வல்லுநர்களும் இந்து பெருங்காப்பியங்களை மொழி பெயர்த்துள்ளனர். அந்த மொழி பெயர்ப்புகளை மிகவும் விரும்பிப் படிக்கலானார் கவிஞர் லெ கோந்த் தெலீல்.

இருக்கு வேதம், இராமாயணம், பாரதம், பாகவதம் இவை களில் அவருக்கு எந்த அளவுக்கு ஈடுபாடு ஏற்பட்டது என்றால், அவர் வெளியிட்ட முதல் கவிதைத் தொகுப்பில் (Poemes Antiques - புராணக் கவிதைகள், 1852) அதில் ஏழு இந்துக் கவிதைகளைச் சேர்த்திருந்தார்.

ஆனால், இந்துப் புராணங்களை அவர் அப்படியே பின்பற்றுவது கிடையாது. தன் கற்பனாசக்தியை உபயோகித்துத் தடையின்றித் 'தன் விருப்பம்போல் மாற்றங்கள் செய்து அழகுற எழுதியுள்ளார்.

அந்த ஏழு இந்துக் கவிதைகளும் பின்வருமாறு:

**அ. முதல் இரண்டும் உணர்ச்சிப் பாடல்கள் :**

1. Surya (சூரியா - உயிரின் ஊற்றாகிய சூரியனுக்கு வேதகாலப் பாட்டு - 58 அடிகள் கொண்டது)

2. Prière Védique pour les morts (இறந்தவர்களுக்காக வேதகாலப் பிரார்த்தனை - 44 அடிகள் கொண்டது)

**ஆ. மூன்று தத்துவக் கவிதைகள் :**

1. Bhagavat (பாகவதன் - 500 அடிகள் கொண்ட நீண்ட பாட்டு)

மூன்று அந்தணர்கள். அவர்கள், தமக்கு நேர்ந்த துன்பங் களைத் தாங்க மாட்டாமல், வாழ்க்கையில் வெறுப்பு அடைகிறார் கள். கங்கா தேவியின் யோசனைப்படிக் கைலாச மலையில் ஏறுகிறார்கள். அங்குதான் பாகவதன் வீற்றிருக்கிறான். தங்கச் சிம்மாசனத்தில்! அவனுடைய பேரின்ப தரிசனம் கிட்டியதால் மனநிம்மதி அடைகிறார் கள். "மூவரும் மூலகாரணத்தோடு ஒன்றி விடுகிறார்கள்.

இந்த உலகம், இந்த வாழ்வு, ஒரு மாயம்! இந்த மாயையிலி ருந்து தம்மை விடுவித்துக் கொண்டு மூலக்காரணத்தோடு ஒன்றி விடுவது: அதுவே மானுடர் படும் துன்பத்திற்கு மருந்து!

"ஓ பகவானே! இந்தக் கசப்பான ஆசையிலிருந்து விடுவிக்கப்பட்டுக்,

"கடலில் முழ்குவதுபோல் உன் மடியில் நான் ஒடுங்குவதற்கு,

"நீ எனக்கு அருள் புரிவாயாக!"

ஏறக்குறைய இதே மன நிலையில்தான் லெ கொந்த்தெ லீலும் இருந்தார். அவர் சாகும் வரை!

2. La Vision de Brahma (பிரம்மா கண்ட தரிசனம் - 4 அடி கொண்ட 20 பாட்டுகள்)

படைப்புத் தெய்வமாகிய பிரம்மா, மேலான கடவுளாகிய விட்ணுவைத் தரிசிக்க நேர்கிறது. மானுடர் படும் துன்பத்தை எடுத்துச் சொல்லி, அதுபோல் துன்பம் ஏன் உலகில் உள்ளது என்று கேட்கிறார் பிரம்மா.

விஷ்ணு பதில் சொல்லுகிறார்: "எல்லாம் மாயை! உடலும், உயிரும், வானமும் அதன் தூய்மையும், மலைகளும் புயல்களும், இவற்றுள் எதுவும் உண்மையில் கிடையாது. அது போலவே இன்பமும், துன்பமும், வெறும் கற்பனையே! எல்லாம் கற்பனையின் கற்பனை!"

3. La Mort de Valmiki (வால்மீகியின் மரணம் - 84 அடிகள் கொண்ட பாட்டு)

இராமாயணக் காப்பியத்தைப் பாடி முடித்து விட்டுத் தன் உணர்வு அற்று தியானத்தில் முழுகி விடுகிறார் வால்மிகி. அப்போது எறும்புப் பட்டாளங்கள் அவர் உடம்பைப் பிடிக்க ஏறுகின்றன அணியணியாய்! கடைசியில் விறைத்துப் போன எலும்புக்கூடு மட்டும் மிச்சம்.

மீண்டும் அதே தத்துவம்: "நிலையாமை சூனியத்திலிருந்து வந்தோம், சூனியத்திற்கே கண்டிப்பாய்த் திரும்பிப் போவோம். இந்த எண்ணம் ஒன்றே போதுமே மன நிம்மதி பெறுவதற்கு!"

**இ. இரண்டு காப்பியங்கள் :**

1. Cunacepa (சுனசேப்பா - 498 அடிகள் கொண்ட ஒரு அழகிய காதல் கவிதை).

ஒரு முனிவர். அவருக்கு மூன்று பிள்ளைகள். மூத்தவன் மேல் அவருக்கு உயிர். அவர் மனைவி இளையவனை விரும்புகிறாள். ஆனால் அழகிலும், அறிவிலும் சிறந்தவன் நடுமகன் சுனசேப்பாதான்.

முனிவரிடம் ஒரு வயோதிக மகாராஜா வருகிறார். இந்திரனுக்குப் பலி கொடுப்பதற்கு ஒரு பரிசுத்தமான ஆண் பிள்ளையைத் தேடுகிறார். முனிவர் தன் மூத்த மகனைக் கொடுத்தால், அதற்குப் பரிசாக ஒரு லட்சம் கொழுத்த பசு மாடுகளைத் தருவதாகச் சொல்லுகிறார். முனிவர் மறுத்து விடுகிறார். முனிவரின் மனைவி ஓடிவந்து இளைய மகனையும் தரமுடியாது என்று சொல்லி விடுகிறாள்.

உடனே சுனசேப்பா, "நேரம் வந்து விட்டது நான் மடிவதற்கு" என்று சொல்லிக் கொண்டே எழுகிறான். தாய் தந்தையை வணங்கி விட்டு, மகாராஜாவிடம் கெடுவு கேட்டுக் கொள்கிறான். 'இந்த ஒரு நாள் முழுதும் நான் வாழ்ந்து விட்டு, மறுநாள் காலையில் உமது பலிபீடத்திற்கு வந்து சேருகிறேன்" என்று!

பிறகு, சுனசேப்பா காட்டிற்குச் சென்று, தன் காதலி சாந்தாவைச் சந்தித்து, நடந்ததைச் சொல்லுகிறான். அவள் அவனுடன் சாக முடிவு எடுக்கிறான். அப்போது ஒரு பெரிய இராசாளி அங்கு வந்து அவர்களிடம் பேசுகிறது: "நான் முன்பு ஒரு காலத்தில் இராவணன் சீதையைத் தூக்கிக் கொண்டு போகும்போது, வழிமறித்துத் தடுத்தேன். அந்த இராட்சதன் என் சிறகை முறித்து, என்னைத் தள்ளி விட்டுச் சீதையைத் தூக்கிக் கொண்டு போய் விட்டான். இப்போது எனக்கு வயதாகி விட்டது. என்னால் எதுவுமே செய்ய முடியாத நிலை! உங்களைப் பார்த்தால் பரிதாபமாக இருக்கிறது. நான் சொல்வதுபோல் செய்யுங்கள். இந்தக் காட்டில் விசுவாமித்திரர் இருக்கிறார். அவரைப் பாருங்கள். அவர் ஒருவர்தான் உங்களைக் காப்பாற்ற முடியும்". இப்படியாகச் சொல்லிவிட்டுப் பறந்து போய்விட்டது.

விசுவாமித்திரரிடம் வருகிறார்கள். அவர் கேட்கிறார். "இந்த மாயையை விட்டுப் போவதற்கு, மகிழ்ச்சி அல்லவா அடைய வேண்டும். ஏன் வருந்துகிறாய், மகனே?"

சுனசேப்பா பதில் சொல்லுகிறான்: "மரணத்திற்கு நான் பயப்படவில்லை. ஆனால் என்னை ஒருத்தி காதலிக்கிறாள். நான் இறந்தால், அவளும் இறந்து விடுவாள். அதுதான் என்னை மிகவும் வாட்டுகிறது."

விசுவாமித்திரருக்கு இரக்கம் உண்டாகிறது! ஒரு வழி சொல்லிக் கொடுக்கிறார். அதுபோலவே, மருநாள் காலை, பலிபீடத்தில் சுனசேப்பா ஏழுமுறை இந்திரனின் பிரார்த்தனையைச் சொல்லுகிறான். உடனே இடி, மின்னல்! கட்டுகள் உடைக்கப்படுகின்றன!

அவன் விடுதலை அடைந்து, பாய்ந்து ஓடித் தன் காதலியை அணைத்துக் கொள்கிறான். வெள்ளை நிறக் குதிரை ஒன்று அங்குத் தோன்றுகிறது. அதனை வெட்டி வீழ்த்தி, இரத்தத்தை இந்திரனுக்குக் காணிக்கையாக வைக்கிறான் பூசாரி!

2. L'Arc de Civa (சிவாவின் வில், 4 அடி கொண்ட 30 பாட்டுகள்.)

இராமாயணத்தின் முதல் பகுதி. ஆனால் கவிஞர் முன்னுக்குப் பின் முரணான மாற்றங்களைத் தெரிந்தே நிறை செய்துள்ளார்.

தசரதர், மூன்று நாட்களாகத் தன் இருக்கையில் அசையாமல் விம்மிக் கொண்டிருக்கிறார். இப்போது துயரம் தாங்காமல் கூச்சலிடுகிறார்: "என் அருமை மகன் இராமனை உடனே வரச் சொல்லுங்கள்!" என்று. இராமனைத்தான் இவர் காட்டிற்குத் துரத்தி விட்டாரே!

இலட்சுமணனைக் கூப்பிட்டு, இராமனை தேடி உடனே புறப்படச் சொல்லுகிறார்: "இராமன் இல்லாது நீ மட்டும் திரும்பி வராதே!" என்றும் எச்சரிக்கை செய்து அனுப்புகிறார்.

இலட்சுமணன் புலம்புகிறான்: "எங்குப் போய் நான் இராமனைத் தேடுவேன்? அவன் விரட்டப்பட்டு எத்தனை மணி நேரங்கள் ஆகின்றன! எங்குச் சென்றானோ!"

இரவு, பகலாகக் காடு, மலை என்று பாராமல், எங்கும் தேடுகிறான். போவோர், வருவோரைக் கேட்கிறான். யாராலும் சொல்ல முடியவில்லை இராமன் எங்கு இருக்கிறான் என்று!

ஒருநாள், அடர்ந்த காட்டு வழியாகப் போகும்போது பயங்கர சத்தம் ஒன்று கேட்கிறது. சத்தம் வந்த திசை நோக்கிப் போகிறான். அங்குக் கறுத்த இலங்கை இராட்சதன் ஒருவன் கூச்சலிட்டுக் கொண்டு இராமனைத் தாக்குகிறான். இராமன் தன் வில்லை வளைத்து, அம்பெய்து ஒரு நொடியில் அந்த இராட்சதனைத் தரையில் வீழ்த்திவிடுகிறான்.

இலட்சுமணன் தன் அண்ணனை அணைத்துக் கொண்டு சொல்லுகிறான்: "உன்னை நாடு கடத்தியதிலிருந்து, நம் தந்தை உணவு உண்ணாமல், தூங்க முடியாமல், உன்னையே நினைத்து அழுது கொண்டிருக்கிறார். நீ உடனே ஊர் திரும்ப வேண்டும். அவர் உனக்குச் செய்த தீங்குக்கு, அவர் படும் துன்பமே நீ பழி தீர்த்துக் கொண்டதுபோல் ஆகிறது. ஆகவே நீ தாராளமாக ஊருக்குத் திரும்பி வரலாம்."

இராமன் ஒப்புக்கொண்டு இருவரும் ஊர் திரும்பும் காலையில், மிதிலைக்கு வந்த சேருகிறார்கள். அந்த ஊர் மன்னர் இராமனிடம் சொல்லுகிறார்: "பொன்னால் செய்யப்பட்ட மிகவும் பெரிய வில் ஒன்று என்னிடம் சிவன் கொடுத்துள்ளார். அதனை நீ வளைத்தாயானால், உனக்குப் பரிசாக என் மகள் சீதையைத் தருவனே."

இராமன் ஒரு நொடியில் வில்லை வளைத்து விடுகிறான். மிதிலை மன்னருக்கு ஆனந்தம்: "என் மருமகனாகவும், சீதையின் நிலையான கணவனாகவும் இருப்பாயாக! இந்த வில்லைக் கொண்டு, நீ ஒரு நாளைக்கு இராவணனை வீழ்த்துவாயாக!"

கடைசியாக, இராமன் சீதையை அழைத்துக்கொண்டு, புகழுடன் ஊர் திரும்பித் தன் தந்தையைக் காணுகிறான்!

வால்மீகி இராமாயணத்தைக் கம்பன் நம் பண்பாட்டுக்கேற்ப எத்தனையோ மாற்றங்கள் செய்து இராமகாதையைப் படைத்தான்! கவிஞனுக்கு இந்த உரிமை உண்டு.

# கம்பனைக் கருத்துள் வைப்போம்

**புலவர் இ. பட்டாபிராமன், புதுவை.**

கம்பனாம் கவிஞன் தன்னைக்
கருத்தினுள் இருத்த வேண்டும்;
கம்பனை ஆய்தல் வேண்டும்;
கம்பனின் உள்ளம் தன்னை
அம்புவி அறியச் செய்தல்
அருங்கவி படித்துத் தேர்தல்
கம்பற்குத் தமிழர் காட்டும்
கருதரு நன்றி என்போம்!

களிதமிழ் இளைஞர் கூட்டம்
கம்பனின் பாடல் முற்றும்
தெளிவுடன் படித்துத் தேர்ந்தால்
சிறப்புறும் தமிழர் நாடு;
நளியிரு முந்நீர் போற்றும்
நலமிகு கம்பன் பாட்டோ
இளையராம் தலைமு றைக்கே
ஏற்றத்தை வழங்கும் செல்வம்!

விருத்தத்தில் கம்பன் முன்னோன்;
மேவிய சீர்சால் சந்தம்
பொருத்தமாய்ச் சேர்க்கும் மேலோன்;
புவிபுகழ் இராம காதை
கருத்துடன் தீட்டிக் கற்போர்
கருத்தினைக் கவரும் சான்றோன்;
விருத்தமா தவரும் ஏத்தும்
கம்பனைக் கருத்துள் வைப்போம்.

உலகத்தின் ஒருமைப் பாடும்
உயர்நாட்டின் ஒருமைப் பாடும்
பலமத ஒருமைப் பாடும்
பலசாதி ஒருமைப் பாடும்
பலஇன ஒருமைப் பாடும்
பலர்புகழ் ஒருமைப் பாடும்
நிலைபெறப் படைத்தான் கம்பன்
நெஞ்சினில் நிறுத்து வோமே!

# கோசல ராமனும் பிரான்சு நெப்போலியனும்

பேராசிரியர் எஸ். மார்க்கண்டன்

இராமாயணன் கதை வடக்கே அயோத்தியில் துவங்கித் தெற்கே இலங்கையில் முடிகிறது. வழியிலுள்ள முக்கியமான இடங்களின் பெயர்களும், பல்வேறு பகுதிகளில் வாழும் மக்களின் பழக்க வழக்கங்களும் அதில் குறிப்பிடப்பட்டுள்ளன. மேலும் கோசல ராமனுக்கும் இலங்கை இராவணனுக்கும் நடந்த பெரும் போரைப் பற்றியும் எழுதப்பட்டிருக்கின்றன.

இராமாயணம் மக்களின் சில வாழ்வுக் கவசமாக அமைந்து விட்ட காரணத்தால், இராமாயணத்தின் கதாநாயகனான இராமபிரானின் திருநாமம் இந்த நாட்டில் ஏற்றம் பெற்றுள்ளது. இராமன் ஒரு வெற்றி வீரன்.

அதுபோல், சிலப்பதிகாரமும் காவிரிப்பூம் பட்டினத்தில் தொடங்கி இமயத்தில் முடிகிறது. அந்த இலக்கியத்திலும் பல முக்கியமான பகுதிகளைப் பற்றிய செய்திகள் வருகின்றன.

அதுபோலப் பிரான்சு தேசத்தில் நெப்போலியன் சரித்திரம் (Légende Napoléonienue) ஐரோப்பாக் கண்ட முழுவதிலும் பிரான்சுக்கும் பிற பல நாடுகளுக்கும் நடந்த யுத்தங்களைப் பற்றியும், சீர்திருத்தங்களைப் பற்றியும் வெற்றித் தோல்விகளைப் பற்றியும் குறிப்பிடுகின்றது. இராமனைப்போல நெப்போலியனும் ஒரு வெற்றி வீரன்.

“வாள்” வலிமையுடையது என்றான் நெப்போலியன். “நா” வலிமையுடையது என்றான் நாவலன். “எழுதுகோல்” வலிமையுடையது என்றான் வால்டர். “அறிவு” வலிமையுடையது என்றான் ஷா. எல்லா வற்றையும் விட “ஒழுக்கம்” வலிமையுடைய தென்று வாழ்ந்து காட்டினான் இராமன். ஒழுக்கம் இல்லாவிடில் வாள், நா, எழுதுகோல், அறிவு வலிமை பெறா. அப்படி வலிமை பெற்றாலும் நீடிக்காது.

இராமன் நாட்டை நேர்மையாகவும், திறமையாகவும், மக்களின் நலம் காத்தும் வந்தான். அதனால்தான் காந்தியடிகள் கூறினார். “நம் தேசத்திற்கு, விடுதலைக்குப் பிறகு ராம ராஜ்யம்” வேண்டுமென்று!

“தர்மமே ஒரு வடிவங்கொண்டது, அதேதான் இராமன்”. தர்மம் என்பது வேறொன்று மில்லை, கடமைதான். அனைவரும் தத்தம் கடமைகளில் ஊன்றி நிற்பது இயல்பு. அவன் தனக்குத்தானே வகுத்துக்கொண்ட கடமைகளில் தலைசிறந்தது தர்மம். “என் உயிரையே வேண்டுமானாலும் இதற்காக மாய்த்துக் கொள்வேன்” என்றார் இராமர்.

நெப்போலியன் கூறினார்: “என்னைப் பேராசைக்காரன் என்று சொல்கிறார்கள். இல்லை. நான் மக்களுக்கு நல்லதைச் செய்யவும், வாழ்க்கையில் வெற்றி பெறவும் நான் எந்த சங்கடத்தையும் சந்திக்கத் தயாராகயிருக்கிறேன். மரணம் எனக்குப் பெரிதல்ல. நான் நடுங்கவில்லை. தோல்வியடைந்து, கோழையாக வாழ்வதைவிட மரணத்தை முத்தமிட விரும்பு கிறேன்.”

இராமன் ஏகபத்தினி விரதனானவன். பிற பெண்களை எதிரெடுத்துப் பார்ப்பதில்லை. தன் தகப்பனாருக்கு மூன்று பட்டத்தரசிகள் இருந்தார்கள், 60,000 பெண்களுக்குத் தாலி கட்டியதாகக் கூறப்படுகிறது.

“இராமனின் கால்தூசு பட்டு” கல்லாய்ச் சமைந்துவிட்ட அகலிகை சாபம் நீங்கினாள். கால் அடி பட்டதென்று சொல்லவில்லை. ஏனென்றால் இராமனுடைய கால் அகலிகை மேல் படக்கூடாது. அவன் ஏக பத்தினி விரதனாயிற்றே! இங்குக் கம்பனின் கவி நயத்தைக் காணலாம். இராமன் பண்பின் சிகரம்! அன்பின் உருவம்!

நெப்போலியன் மாதர்கள் பின்னால் ஓடியதில்லை. ஒரு மணம் புரிந்துகொண்டார். அவருக்குப் பிறகு சாம்ராசியத்தை நடத்து வதற்குக் குழந்தைகள் இல்லாத காரணத்தினால் விவாக ரத்துச் செய்துவிட்டு மறுமணம் புரிந்து கொண்டார். ஒரு குழந்தையும் பெற்றார். மேல் நாடுகளிலே பல மன்னர்களுக்குப் பெரிய வீடு ஒன்றும் சிறிய வீடுகள் பலவும் இருந்தன. நெப்போலியனுக்கோ ஒரே வீடுதான். பல மாதர்களை நேசிப்பதற்கு அவருக்கு நேர மில்லை. ஒரு நாளைக்கு 17 மணி நேரம் உழைப்பு.

இப்படி நெப்போலியனைப் பல கோணங்களில் இராமரோடு ஒப்பிட்டுப் பார்த்தாலும் நெப்போலியனிடம் குறைபாடுகள் பல இருப்பதைப் பார்க்க முடியும். நெப்போலியன் தற்பெருமைக் காரன். சுயநலவாதி. இந்த குறைபாடுகளை எல்லாம் இராமனிடத்துக் காணமுடியாது.

நெப்போலியன் பல போரில் ஈடுபட்டான். வெற்றி பெற்றான். அதனால் அவனை வெற்றி வீரன் என்று சொல்லிவிடலாம். ஆனால் இராமன் வலியபோருக்குச் செல்ல வில்லை. இராவணனை வதைத்துச் சீதையை மீட்கத்தான் சென்றான். அதனால்தான் கம்பன் கூட இராவண வதைப்படலம் என்றும், மீட்சிப் படலம் என்றும் தலைப்பிட்டான்.

நெப்போலியன் நாடு பிடிப்பதில் வெற்றி வீரன். ஆனால் இராமன் பிறரைத் துயரிலிருந்து மீட்பதிலே வல்லவன்.

இந்த இரண்டு வீரர்களின் ஆசை: “உலகமெலாம் செழிப்புடனும், மகிழ்ச்சியுடனும், அமைதியுடனும் வாழட்டும்.!”

## கம்பனை நாளும் ஓது!

கவிஞர் மு. சச்சிதானந்தம், புதுவை.

கம்பனே!
உன்றன் கவிதையை
ஊக்கமாய்ப் படித்துக்
கவிஞனானேன்!

கம்பனே!
நீ அளித்த தமிழ்
உலகமெலாம்
நின்று பரவுகிறது!
தமிழின் பெருமை
தரணியில் ஓங்குகிறது!

கம்பனே!
உன் காவியத்தைப்
படிப்பவர்கள் கேட்பவர்கள்
வாழ்வில் உயர்கின்றார்கள்!
புகழ் மேவிப்
புதுமை படைக்கின்றார்கள்!

கம்பன் காட்டும்
மனித நேயம் மலர்ந்தால்
உலகில் கலகம் ஏது?
நம் இனம் ஓங்க
நண்பனே! நறுந்தமிழ் தந்த
கம்பனை நாளும் ஓது!

# கம்பரும் விக்தோர் உய்கோவும்

விடுதலை வீரர், வரலாற்றறிஞர் அ. செபஸ்தியன், புதுவை.

**கம்பர் :** தமிழ்நாட்டுக் கவிச் சக்கரவர்த்தி 'கம்பனைப் போல்... பூமிதனில் யாங்ணுகனுமே பிறந்ததிலை' என்று தேசியக் கவி பாரதியால் புகழ்ந்துரைக்கப்பட்டவர்.

**வித்தோர் உய்கோ :** பிரான்சு நாட்டுப் பெருங்கவிஞர். பிரெஞ்சு அறிஞர் ழோர்ழ் துய்காமேல் (Georges Duhamol) அவர்களால், தேசியக்கவி எனப் பாராட்டப்பட்டவர்.

வெவ்வேறு நாடு, மொழி, காலம்

**நாடுகள் :** இந்தியாவின் தென் கிழக்கில் கடலோரத்தில் தமிழ்நாடு அமைந்துள்ளது. வெப்பம் மிகுந்த பூமி. பிரான்சு, ஐரோப்பாக் கண்டத்தில், மத்தியப் பகுதிக்கு மேற்கில் அமைந்த நாடு. குளிர் பூமி.

**தமிழ்மொழி :** மிகவும் தொன்மையான மொழி. இரண்டாயிரம் ஆண்டிற்கு மேலான பழமையுடைய மொழி. தொடர்ந்து வளர்ந்து வரும் மொழி.

**பிரஞ்சு மொழி :** லத்தீன். கிரேக்கு ஆகிய மொழிகளுடன் ஒப்பிடும்போது, இளமையான மொழி. நவீன இலக்கியம், 16ஆம் நூற்றாண்டில் இருந்து தொடங்குகிறது எனலாம்.

**காலம் :** கம்பர், கி.பி. 9 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். விக்தோர் உய்கோ, 19-ஆம் நூற்றாண்டு முழுவதையும் ஆக்கிரமித்துக் கொண்டு இலக்கிய உலகை ஆண்டு வந்தவர். (1802 - 1885). இருவருக்கும் இடையில் பத்து நூற்றாண்டு இடைவெளியுள்ளது.

**ஒற்றுமை - பண்பாடு :** இடத்தால், மொழியால், காலத்தால் வெவ்வேறான இக்கவிஞர்கள் பண்பாட்டால் ஒன்றுபடுகின்றனர். மனிதர்களிடத்தில் வெளித்தோற்றம் மாறுகிறது; மனம் மாறவில்லை; பண்புகள் பொதுவாக இருக்கின்றன; குணங்களும் ஆசைகளும் பொதுவாகவே உள்ளன. இவ்விரண்டு கவிஞர்களும் மனித சமுதாயத்தின் நெடும் பயணத்தைச் சித்தரிக்கின்றனர். பள்ளங்கள், வளைவுகள், வீழ்ச்சிகள் உண்டு; ஆனால், கடைசியில் மானுடம் வெல்கின்றது. இராமாயணத்தில் கம்பரும், ஏழை படும்பாடு (Les Misérables) என்ற நாவலிலும், காலத்தின் கதை (La Légendes des Siècles) என்ற காவியத்திலும் விக்தோர் உய்கோவும் இதைப் பற்றித்தான் எழுதியுள்ளனர்.

**ஆசைகள் :** ஆசைகள் இல்லையேல் உலகில்லை. ஆனால் அவை வரம்பு மீறும் போது கேடு விளைவிக்கின்றன.

**பெண்ணாசை :** கம்பர், பெண்ணாசை என்ற தீயில் வெந்து சாம்பலான இராவணனைச் சித்திரித்தார்.

**மண்ணாசை :** மண்ணாசைக்கு இரையான நெப்போலியச் சக்கரவர்த்தியை விக்தோர் உய்கோ உயிர்ச் சித்திரமாகத் தீட்டியுள்ளார்.

இராவணன் - நெப்போலியன்

**ஒற்றுமைகள் :** இருவரும் கற்றறிந்தவர்கள். வேதங்களைப் படித்து ஓதியவன் இராவணன். ஆயிரம் மறைப்பொருள் உணர்ந்த அறிவு அமைந்தவன். "நாரத முனிவர்க்கு ஏற்ப நயம்பட" உரைத்தவன். நெப்போலியன், சிறந்த அறிவாளி. சிதறிக்கிடந்த பிரஞ்சுச் சட்டங்களை ஒன்றாய்ச் சேர்த்தவன். புகழ்பெற்ற அவலச்சுவை நாடக ஆசிரியர் கொர்னேய் (Corneille) எழுதிய நாடகங்களைப் படித்து அபூர்வமான அபிப்பிராயங் களைத் தெரிவித்தவன்; இலக்கிய சுவைஞன்.

இருவருமே சிறந்த வீரர்கள். முக்கோடி வாழ்நாளுடையானின் உயிரினை இராகவனின் புனிதவாளி சுலபமாகப் பருகி விடவில்லை. நெப்போலியனும் அப்படியே. இங்கிலாந்து, ரஷ்யா உள்ளிட்ட நாடுகளுக்கு நெப்போலியனை வெல்வதற்கு 15 வருடங்கள் பிடித்தன.

இருவருமே பிடிவாதக்காரர்கள். வேதமுதற்காரணனோ என்று எண்ணி, அடுத்த கணம் யாரேனும்தான் ஆகுக என்று சொல்லி போரிடுகிறான் இராவணன். தன்னுடைய வெல்வதற்கரிய பெரும்படை அழிந்த பின்னரும், சமாதானம் செய்து கொள்ளாமல், வாட்டர்லோ போருக்குப் புறப்பட்டான் நெப்போலியன்.

**தோல்விப்படலம் ஆரம்பம் - பூதல நங்கையை இருவரும் நோக்குதல்**

**இராவணன் :** இந்திரனைச் சிறையிட்டவன், இமையோரின் திக்கு யானைகளின் தந்தங்களைத் தகர்த்தவன், வானவர் உலகை வென்றவன். வெள்ளியம்கிரியினை விடையின் பாகனொடு அள்ளி, விண்தொட எடுத்து ஆர்த்தவன். முக்கோடி வாழ்நாளும் முடிவிலா சேனையும் பெற்றவன். ஆனால், குலச்சிறுமை செய்து, கள்ளிருக்கும் மலர்க்கூந்தல் சானகியை மனச்சிறையில் வைத்தான்.

போர் மூண்டது. இராமன் தன் கணைகளால், இராவணனின் வில், அவன் தேர்க்குதிரைகள், குடை, கொடி, மார்புக்கவசம் இவைகளையெல்லாம் அழித்தான். மணி முடியையும் வீழ்த்தினான். வெறுங்கையோடு நின்றவனைப் பார்த்து, "இன்றுபோய் போருக்கு நாளைவா" என்றான் இராமன்.

**இலங்கைபுகும் இராவணன் :** முடிகள், சங்கரன் கொடுத்த வாள், அனைத்தும் இழந்து, இலங்கை மூதூரில் எப்படி புகுந்தான்? எதை நோக்கினான்? திசைகளை நோக்கவில்லை; வளநகர், வந்த காதலர், கடல் பெருஞ்சேனை, ஆகிய எதையும் நோக்க வில்லை.

"பூதலம் என்னும் நங்கை தன்னையே நோக்கிப் புக்கான்"
அன்றுவரை குனியாத தலை, குனிந்தது.

பாரீசு நகர்புகும் நெப்போலியன்

இப்படிப் போர்க்காட்சியைத், தலைகுனியும் காட்சியை நெப்போலியனின் தோல்விப் படலத்தில். பிராயச்சித்தம் (Expiation) என்ற கவிதையில், உய்கோ இடம் பெறச் செய்துள்ளார்.

நெப்போலியனின் பெரும்படை

நெப்போலியன் பெரும் சேனையைப் "பெரும் படை" (La Grande Armée) என்று அழைத்தனர். கும்பகர்ணன், இந்திரசித்தன் ஆகியோருக்கிணையான "நோ" "பெர்த்தியே" போன்ற தளபதிகளைக் கொண்ட படை, நெப்போலியனின் பெரும்படை. ஐரோப்பிய நாடுகளை நடுங்க வைத்தது இப்படை. ஆனால், பிரான்சிற்கு வெகு தூரத்தில் உள்ள ரஷ்யா மீது நெப்போலியன் பாய்ந்த போது, பெரும்படை கலகலத்துப் போயிற்று. மாஸ்கோ மக்கள் தங்கள் நகரைத் தீக்கிரையாக்கினார். "வெறுங்கையோடு" நெப்போலியன் திரும்பினான். அந்தத் தோல்வி - பின்வாங்கு படலத்தை உய்கோ வர்ணிப்பதைப் பாருங்கள்.

"இருண்ட நாட்கள். நெப்போலியன் மெதுவாகத் திரும்பிக் கொண்டிருந்தான்.

அவனுக்குப்பின், மாஸ்கோ நகரம் எரிந்து கொண்டிருந்தது.
நேற்று, பெரும்படை, இன்றோ, ஒரு ஆட்டு மந்தை.
முதன்முறையாக, கழுகு தன் தலையைச் சாய்த்தது."

'கழுகு' நெப்போலியனின் சின்னமாகும். சக்தி வாய்ந்த தொலை நோக்குள்ள கழுகை தனது சின்னமாகத் தேர்ந்தெடுத்துத் தன் பதாகைகளில் பொறித்திருந்தான். கழுகு தலைகுனிந்த தென்பதும், நெப்போலிய சக்கரவர்த்தி தலை குனிந்தார் என்பதும் ஒன்றே. இங்குக் குறிப்பிட வேண்டியது என்னவென்றால், இந்த இரண்டு உலகக் கவிஞர்களும், தவறு இழைக்கும் மாபெரும் வீரர்கள் "தலைகுனிந்த" செய்தியைக் குறிப்பிடுகின்றனர்.

**தெய்வ சிந்தனை உண்டா?**

இராவணன் : நினைத்ததை முடித்து நின்றவன், கடல் பெரும் சேனை அழிந்த போது, வீரத்தளபதிகள் வீழ்ந்தபோது, பல்வேறு வரம் கொடுத்த முதல்வனிடம் முறையிட்டானா? இல்லை. "சிவனோ" இவன் என நினைத்தான், எதிரில் நின்று மரண கணங்களைத் தொடுக்கவும் இராமன் யாராக இருக்கலாம் என்பதைத் தெரிந்து கொள்வதற்காக மட்டுமே சிவனை நினைத்தான். ஆயிரம் மறைப்பொருள் உணர்ந்த அவனுக்கு, அந்த மறை நாயகனிடம் கெஞ்சவேண்டும் என்ற எண்ணம் தோன்றவில்லை : யான் என் தனியாண்மைவிடேன் என்று தனியாகத் தன்னையே நம்பி நின்று மடிந்தான்.

நெப்போலியன் : நெப்போலியனும் இவனைப் போன்றவனே! அவன் வரலாற்றைப் பார்த்தால் இது புலப்படும். "எனக்கு எந்த மதத்திலும் நம்பிக்கை இல்லை. எகிப்து நாட்டில், நான் மகம்மதியனாக இருந்தேன். பிரான்சில் கத்தோலிக்கனாக இருப்பேன், நான் எதுவும் இல்லை" என்றொருமுறை கூறியுள்ளார்.

தன் முடிசூட்டு விழாவில், கிறித்துவ மதத்தலைவர் பாப்பரசருக்கு, உரிய மரியாதை தராதவன்; பின்பு அவரைச் சிறையிட்டவன். நாசம் வந்தபொழுது, இவன் தன்னையும் தன் பெரும் படையையும் மட்டுமே நம்பி இருந்தான்.

**கல்லறையில் கனவு**

நெப்போலியனின் வெற்றிக் கற்களை எண்ணிக்கொண்டே போகும் விக்தோர் உய்கோ, தோல்விக் கல்லறைகளையும் சொல்லத் தவறவில்லை.

"நாளை, ரஷ்யா,
நாளை, வாட்டர்லோ,
நாளை, செயின்ட் ஹெலேனாத்தீவு,
நாளை, கல்லறை"

என்று உணர்ச்சிபூர்வமாக அடுக்கிக் கொண்டே போவார் அவர்.

கால வெள்ளத்தில் ஒரு கனவு. வாட்டர்லோ போரில் தோற்றுப் போன நெப்போலியனை, ஆங்கிலேயர்கள், ஆப்பிரிக்கக் கண்ட செயின்ட் ஹெலேனா தீவில் சிறை வைத்தனர். அங்கேயே அவன் மாண்டு போனான். ஒரு நாள் இரவில்... கல்லறையில் நெப்போலியன் விழித்துக் கொள்கிறான். அவனுக்குப் பழக்கமான ஒரு குரல், மாஸ்கோ, வாட்டர்லோ, செயின்ட் ஹெலேனா என்று சத்தமிடுகிறது. கடவுளே, என்னை ஏன் தண்டித்தீர்? என்றான். பதில் வந்தது.

"சனநாயகத்தைப் படுகொலை செய்தாய் பலனை அனுபவித்தாய்"

ஆயிரக்கணக்கில் மக்கள் உயிர்த்தியாகம் செய்து பிரான்சில் குடியரசை அமைத்திருந்தனர். அந்தக் குடியாட்சியை அழித்துவிட்டு முடியாட்சியைப் பிரகடனம் செய்தவன் நெப்போலியன். சர்வாதிகாரியாகமாறினான். எவர் ஆலோசனையும் நாடாமல் நாட்டாசை பிடித்தலைந்து மாண்டுபோனான்.

ஒருவகையில், இராவணனும் சனநாயக விரோதிதான். சனநாயகம் என்றால் என்ன? பெரும்பாலோர் எண்ணப்படி நடப்பதே சனநாயகம். இராவணனைச் சுற்றியிருந்தவர்கள் யாவரும் சீதையை விட்டுவிடத்தான் சொன்னார்கள். அவன் கேட்கவில்லை.

சனநாயக முறையைப் புறக்கணித்தான்.

இருவருமே சனநாயகத்தை மீறிய குற்றத்திற்காகத் தண்டிக்கப் பட்டவர்களே.

**ஆயுதம் இழந்தவனுடன் போர் புரியலாமா?**

நம் நாட்டில் - பழங்காலத்தில். சில யுத்த தர்மங்கள் கடைப்பிடிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் ஒன்று, ஆயுதம் இழந்தவனுடன் போர் செய்யலாகாது என்பதாகும். இந்நெறியின் அடிப்படையில்தான், தேர்க்குதிரைகள், குடை, கொடி, மார்புக்கவசம், மணிமுடி, வாள் ஆகியவற்றை இழந்த இராவணனிடம் தொடர்ந்து இராமர் போர் செய்யவில்லை.

அடுத்து இறுதிப்போரில், இராவணன் சோர்ந்து போகிறான். சாரதி தேரைச் சிறிது ஒதுக்கிய நேரத்தில், இராவணனைக் கொல்ல இராமன் மறுத்துவிடுகிறார். இதுவும் அந்நெறியில் செய்த காரியம்தான்.

ஐரோப்பா : மேற்கூறப்பட்ட யுத்த நெறிகள் பாரத நாட்டிற்கு மட்டும் சொந்தமில்லை. ஐரோப்பியர்களும் இந்நெறியைப் பின்பற்றியுள்ளனர். தாங்கள் படைத்த காவியங்களில் "இன்று போய் நாளைவா" காட்சி உய்கோவின் ரொலானின் திருமணம் (Mariage de Rolland) என்ற காவியத்தில் வருகின்றது. 9ஆம் நூற்றாண்டில், பிரான்சு நாட்டை ஷார்ல் மாஞ் (Charlemagne) என்ற சக்கரவர்த்தி ஆண்டுவந்தார். அவர் உறவினன் ரொலான் (Rolland) என்ற இளம் போர் வீரன். இவன் நண்பன், ஒலிவியே என்ற போர் வீரன். யாரின் வீரம் உயர்ந்தது என்பதை அறிய இருவரும் நேருக்கு நேர் நின்று போரிட்டனர். தனித் தீவு. பல பகல் பொழுதுகள், பல இரவுகள் வாள்பட்ட பாளைகள் சிதறின. வழி போக்கர்கள் வெகுண்டு ஓடினர்.

ஐரோப்பிய முறையில் இன்றுபோய் நாளை வா : போரின் ஒரு கட்டத்தில், ஒலிவியேவின் வாளும் கவசமும் கீழே விழுகின்றன. ஒரு பக்கம் வெறுங்கையுடன் ஒலிவியே; மறுபக்கம், வீரவாளுடன் கண்களில் கனல் தெறிக்கும் ரொலான். ஒலிவியேவிற்குத் தப்பிக்க வழியில்லை. தன் ஆயுள் முடிந்ததென அவன் நினைத்தான். ஆனால் நினைத்தது நடக்கவில்லை.

"நான் பிரான்சு நாட்டு மன்னரின் உறவினன், அவருக்கு ஏற்றமுறையில் நான் நடந்துகொள்ள வேண்டும்.

என் எதிரி ஆயுதமிழந்ததால், நான் போரிட மாட்டேன்.

வேறு ஒருவாள் தேடிவா, போ" என்றான் ரொலான்.

"இன்று போய் நாளைவா" என்பது கம்பர் நெறி. உய்கோ, உலக மாக் கவிகளில் ஒருவர். அதனைக் கையாண்டுள்ளார்.

**மற்றுமொரு சம்பவம்**

இராவணன் சோர்ந்ததுபோல், தான் சோர்ந்துபோய் விட்டதாக ரொலான் கூறுகிறான்!

“கடவுள் துணையுடன், வாள் வலிமையால் வெல்லவே நான் விரும்புகிறேன்; ஒரு நோயாளியை வெல்லமாட்டேன்; புல்லில் படுத்துறங்கு. நாளை போர் செய்வோம்” - இது ஒலிவியேவின் பதில். கம்பரும், உய்கோவும் எவ்வளவு நெருக்கமாய் இருக்கிறார்கள்.

**தத்துவம் - உலக நிலையாமை**

**கம்பனிடம் :** உலகெலாம் கலக்கி வென்ற இந்திரசித்தன் மாண்டுவிட்டான். தாய் மண்டோதரி புலம்புகிறாள். “நிலை இலா வாழ்வை இன்னும் நினைவேனோ” என்றழுகின்றான்.

இதற்குமுன், வாழ்வு நிலையானதென நம்பி இருந்தாள். இதைத் தன் கணவன் முறை துறந்து, உயிர் துறந்தபோது கூறுகின்றாள். தேவரையும், மூவரையும் பணியாத தன் கணவனுக்கு,

“என்றுண்டாம் இறுதி என ஏமாப்புற்றிருந்தாளாம்”. வாழ்வு என்றும் நிலையானது என்று எண்ணியிருந்தாள். நாளை, கும்பகருணன் மாளப்போகிறான்; நாளை, இந்திரசித்தன் இறக்கப் போகிறான்; ஏன், நாளை, இலங்கை வேந்தனே மாளப்போகிறான். இதையெல்லாம் அவள் எதிர்பாக்கவில்லை. கடைசியில் புரிந்து கொண்டாள். வாழ்வு நிலையிலாதது. நாளை என்பது நம் கையில் இல்லை. இதைத் தாமதித்துப் புரிந்துகொண்டாள்.

**உய்கோவிடம் :** கம்பர் கூறும் உண்மையை உய்கோவும் கூறியுள்ளார். புகழ்வாழ்வு இறுதியென மண்டோதரி நினைத்தது போல், உய்கோவின் பாத்திரம் ஒன்றும் நினைத்துள்ளது. அந்தப் பாத்திரம்தான் நெப்போலியன். இவன், ஐரோப்பிய நாடுகளைக் கலக்கி ஆண்டுவந்தான். (இங்கிலாந்தும், ரஷியாவும் விதி விலக்கு). பரந்த சாம்ராஜ்யத்திற்கு ஒரு வாரிசு வேண்டாமா? மகன் பிறந்தான். அவனுக்கு வான மேகங்கள் விலகி வழிவிட்டனவாம். ஐரோப்பிய அரசர்கள் குழந்தைக்குக் காணிக்கை செலுத்தினர். குழந்தையின் சிறுமுச்சில், அடிமை தேசக்கொடிகள் அசைந்தாடினவாம். மகிழ்ச்சியின் எல்லையில் புகழ்ச்சியின் எல்லையில் நின்று நெப்போலியன் உரத்தகுரலில் முழங்கினான்:

“வருங்காலமே! வருங்காலமே!

நீ எனக்கே சொந்தம்!”

நெப்போலியன் ஏமாந்து போனான். வருங்காலம் யாருக்கும் சொந்தம் இல்லை என்பதை அவன் தெரிந்துகொண்டிருக்க வில்லை.

வருங்காலம்! வருங்காலம் அவனுக்கு வைத்திருந்த பரிசுகள் யாவை?

நாளை, ரஷ்யப் படையெடுப்பில் தன் பெரும் சேனை, ஆட்டு மந்தையாகப் போவதை அவன் அறிந்திருந்தானா?

நாளை, வாட்டர்லோ போர்க்களத்தில், நிலமகளைத் தழுவப் போவதை அறிந்திருந்தானா? நாளை, செயின்ட் - ஹெலேனாத் தீவில் கைதியாக மாளப்போவதை அறிந்திருந்தானா?

உய்கோ எழுதுகிறார் :

“நெப்போலிய பிரபுவே! வருங்காலம் யாருக்கும் சொந்த மில்லை. உங்கள் புகழ் இறுதி என எண்ணாதீர்! இன்பம், புகழ், செல்வம் யாவும் கூரைமீது அமர்ந்துள்ள பறவைகள் போன்றவை! வாழ்வு நிலைஇல்லாதது!” என்று உய்கோ பலமுறை எழுதியுள்ளார்.

நாடுகள் வேறுபடலாம். மொழி, காலம் மாறுபடலாம். ஆனால் மனிதப் பண்புகள், பண்பாடு உலக மக்கள் யாவர்க்கும் பொது. கம்பரும், விக்தோர் உய்கோவும் இவ்வுண்மையை வெளிப்படுத்துகின்றனர்.

# குழந்தை

**கண. கண்ணப்பன், ஸ்பெயின்.**

புத்தம் புதிய பூமியைப் பார்த்திட
முத்த மழையினில் முகிழ்த்த முத்து!
கருவறை வாசலைக் கடந்து வந்து
திருமுகம் காட்டிச் சிரிக்கும் செல்வம்!

இல்லறம் என்னும் இனிய சோலையில்
மெல்லப் புகுந்த மழலைத் தென்றல்!

பெற்றோர் என்னும் பெரிய பதவியைப்
பற்றோ(டு) அளிக்கும் பண்புடை அதிகாரி!

தொட்டில் சுகத்தில் தன்னை மறந்து
எட்டாம் ராகம் இடைக்கும் வீணை!

கசந்த காலத்தைக் கடத்திச் செல்ல
வசந்தக் கப்பலில் வந்த மாலுமி!

இதயக் கோட்டையை எளிதாய்ப் பிடித்துப்
பதவியில் அமரும் புதிய தளபதி!

வாழ்க்கை என்னும் நாடக மேடையில்
நடிக்க வந்த முக்கிய பாத்திரம்!

அந்தரங்கமாய் அன்று நடந்த
பந்தயத்திலே பங்கு பெற்று
வெற்றியடைந்த தம்பதியர்க்குப்
பரிசாய்க் கிடைத்த பதக்கம்!

# மரமும் - மனிதனும்

**கவிஞர். பாரீசு பார்த்தசாரதி**

உன்னை - இப்பூவுலகுக்கு
அளித்திட்ட கட்டிலாய்,
நீ பிறந்த பின்புனைத்
தாலாட்டும் தொட்டிலாய்,
நீ - நடை பயின்ற போது
நடை வண்டியாய்,
மழை, காற்று, வெப்பத்திலிருந்து
உன்னைக் காத்திடும் வீடாய்ப்,
படிக்கப் போகையிலே
பாதுகாப்பு வண்டியாய்த்,
தேர்வு எழுதும் போதும் பணிபுரியும் போதும்
உன் எண்ணங்களைத் தாங்கிடும் இருக்கையாய்,
உன் மணவாழ்க்கையை மங்கலமாக்கும்
அரசமரக் காலாய்,
நீ ஓய்வெடுக்கும் வேலையிலே
சாய்ந்திடும் நாற்காலியாய்,
நீ சரிந்து வீழ்கையிலே
தாங்கிடும் ஊன்றுகோலாய்,
ஏன்.. நீ இறந்த பின்னும்
உன்னுடனே எரிகிறேனே!
என்னை வளரும் போதே
வெட்டலாமா மனிதனே?

# தாய்மொழியும் ஐரோப்பிய முதன்மொழிகளும்

பேராசிரியர் ச. சச்சிதானந்தம், பிரான்சு

மக்களுக்கு அவர்தம் உலகைப் பற்றிய கோட்பாடுகள் அவரவர் பேசுகின்ற மொழியால் கட்டுண்டு இருக்கின்றன - மொழியியல் சார்பியற் கொள்கை.

மொழி ஒரு கருவி. மனிதன் மொழி கொண்டுதான் வாழ்கிறான். மனித சமுதாயம் மொழியால் கருத்துப் பரிமாற்றம் செய்கிறது. இக்கருவி இல்லாமல், செய்தித் தொடர்பையும் பண்பாட்டு வெளிப்பாட்டையும் நினைத்துப்பார்க்க முடியுமா! உலகில் கிட்டத்தட்ட 4000 - 5000 மொழிகள் இருப்பதாக ஆய்வுநிலை மொழிநூல்கள் கூறுகின்றன. ஒவ்வொரு மொழியும் அந்தந்த இனத்தின் தேவைகளுக்குத் தக்கவாறு அமைந்துள்ளது. இதனால், மொழிகளிடையே உயர்வு - தாழ்வு பார்ப்பது பொருத்தம் அற்றது. இவ்வாறே அழகு - அழகின்மை காண்பதும் பொருள் அற்றது.

எமது தாய்மொழி தமிழ்! புலம்பெயர் வாழ்வில் பிறந்த எமது பிள்ளைச் செல்வங்களுக்கும் தமிழ்தான் தாய்மொழி என எம்மில் அநேகம் பேர் நம்புகிறோம். இது பிழையா? தாய்மொழி எனும்போது, அது ஒருவரின் தாயின் மொழி என்றே நாம் நினைத்து விடுகிறோம். இது சரியா?

ஒருவன் சிறுவயதில் கற்றுக்கொண்டதும், சிந்திக்கவும், கருத்துக்களைப் பரிமாறவும் இயல்பாக ஒருவனுக்கு உகந்ததும் தாய்மொழி. தன்னைப் பற்றியும், உலகைப் பற்றிய கருத்துக்களை முதன்முதல் உருவாக்கவும், வெளியிடவும் உதவுவது தாய்மொழி. ஒருவரின் தாய்மொழி என்பது அவரின் பெற்றோரின் தாய்மொழியாக எப்போது அமையுமெனில் அவரின் பெற்றோரின் தாய்நாட்டில் அவர் வாழும்போதும் அல்லது அவரின் தாய்நாட்டு மொழி மற்றுமொரு நாட்டுமொழியாக இருக்கும்போதுமேயாகும்.

கொழும்பில் ஒரு குடும்பம் : கணவன் சிங்களம், மனைவி தமிழ். இருவரும் தங்களிடையே ஆங்கிலத்திலேயே பேசுவார்கள். பிள்ளைகளிடம் ஆங்கிலத்திலும் சிங்களத்திலும் உரையாடுவார்கள். கணவன் மனைவியிடம் சிலவேளைகளில் சிங்களத்தமிழில் செல்லம் கொஞ்சுவார். வாழும் சூழல் மொழி சிங்களமாக உள்ளதால் பிள்ளைகளுக்கு அந்தப் பாஷை தாராளமாகச் சரளமாக வந்தது. ஆனால், இப்போது சுவீடனில் அக்குடும்பம் வாழுகிறது. இங்கு வந்த புதிதில் ஆங்கிலமும் சிங்களமும் பேசியவர்கள், இன்று ஆங்கிலத்திலும், கூடிய வீதம் சுவீடியத்திலும், குறைவாகச் சிங்களத்திலும் பேசுகிறார்கள். கொழும்பில் சிங்களம் வகித்த இடத்தை உப்சாலாவில் சுவீடியம் எடுத்துக்கொண்டது. பிள்ளைகளுக்குச் சிங்களம் பேசுவதற்கான சூழ்நிலை குறைந்துவிட்டது. அவர்களுக்குத் தாயின் மொழியான தமிழும் தெரியாது. ஆனால் வாழும் நாட்டு சூழல்மொழிதான் நன்றாக வருகிறது. அதுதான் அவர்களின் முதல்மொழியாக இருக்கிறது. நாப்பழக்கம் இருந்தால்தானே செந்தமிழும் வரும்.

தன் கருத்துக்களை முதன்முதல் வெளியிடப் பயன்படுத்தும் மொழி அவனின் தாய் தந்தையரின் மொழியாக இருக்கவேண்டும் என்பதில்லை; முதல்முதல் அவன் பேசக்கற்றுக்கொண்ட மொழியாகவும் இருக்கவேண்டும் என்பதில்லை. ஏனெனில், குறிப்பிட்ட காரணங்களினால் ஒரு மனிதன் முதல்முதல் பேசப்பழகிய மொழியை முற்றாக மறந்துவிடவும் கூடும். இதன் காரணமாக பெற்றோர்களின் தாய்மொழி பிள்ளைகளுக்கு வேற்றுமொழி ஆகலாம். இந்நடைமுறையைக் கருத்தில் கொண்டுதான் யுனெஸ்கோ தாய்மொழி (The Use of Vernacular Languages in Education, Report of the UNESCO, Paris 1953) என்றால் என்ன என்பதற்குப் பின்வருமாறு விளக்கம் கூறுகிறது.

1. பெற்றோர்களுடைய தாய்மொழியும், பிள்ளைகளின் தாய்மொழியும் ஒன்றாக இருக்க வேண்டும் என்ற நியதி இல்லை.

2. ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட மொழியும் ஒருவனுக்குத் தாய் மொழியாக அல்லது தாய்மொழிகளாக அமையும்.

3. ஒருவனின் வாழ்க்கையில் தாய்மொழி மாறிக்கொண்டே போகலாம்.

ஒருவன் தன் கருத்துக்களை உரையாடல் மூலம் வெளியிடவும், பிறர் கருத்துக்களை உரையாடல் மூலம் உள்வாங்கிக்கொள்ளவும் வாழ்நாளில் தொடர்ந்து உதவும் ஒன்றோ அல்லது பல மொழிகளோ ஒருவனுடைய தாய்மொழி / தாய்மொழிகள் என விளக்கம் கொடுக்கலாம். புலம்பெயர் வாழ்வில் தாய் மொழியை வரையறுப்பதில் இத்தகைய நடைமுறைச் சிக்கல்கள் இருப்பதால், இக்காலத்தில் முதல் மொழி, இரண்டாம் மொழி, மூன்றாம் மொழி எனும் கோட்பாடு தோன்றியது. இந்த எண்ணுமுறைப் பெயர் மொழிகள் ஒருவன் மொழியைப் பேசவோ அல்லது எழுதவோ அறிந்துகொண்ட முறையைக் குறிப்பிடுகிறது. பெரும்பாலான குழந்தைகள் 5-6 வயதுகளில் தமது மொழிகளின் ஒலி அமைப்புகளை நன்றாகக் கற்றுக்கொள்கிறார்கள். ஒரு மொழியை எந்த வயதில் கற்கிறோம் என்பதில்தான் அதன் இலகுவும், கடினமும் தங்கி இருக்கிறது.

பத்து வயது ஆகுமுன் எத்தனை மொழிகள் ஆனாலும் இயல்பாகப் பேசும் முறையில் படித்தால், அவற்றைச் சுலபமாகவும் ஒரே அளவிலான முயற்சியுடனும் கற்றுக் கொள்ளலாம்.

காதால் கேட்டு, திருப்பிச் சொல்லுகிற முறையே இயல்பாகப் பேசும் முறை. பத்து வயதுக்குப் பிறகு சொந்தமொழிக்கேற்பவே நாக்கு இசைவாக்கம் அடைந்து விடுகிறது. ஒரே இனமொழிகளைக் கற்பதில் கடினம் இருக்காது. ஆகவே நமது வழித்தோன்றல்களைக் குறைந்த வயதில் பிறமொழிகளைப் படிக்கவைப்பது கூடிய பலன் தரும்.

தமிழ் திராவிடமொழிக் குடும்பத்துக்கு உரியது. பழமைக்குப் பழமையாய்ப் புதுமைக்குப் புதுமையாய் விளங்கும் சில பழைய மொழிகளில் தமிழ்மொழியும் ஒன்று. உலகத்தில் தோன்றிய பல மொழிகள் இறந்து விட்டன, சில வழக்கிழந்து போய்விட்டன. ஆங்கிலம் பிறப்பதற்கு முன்னே, பிரெஞ்சு தோன்றுவதற்கு முன்னே தோன்றி, வளரும், வாழும் மொழிகளில் கிரேக்கம், ஹீப்று, சீனம், அரபு, பேர்சியம் முதலானவை உள்ளன. சுமேரியம், எகிப்தியம், ஹிற்றித் போன்றவை இறந்துபோன மொழிகள். இலத்தீன் ரோமன் கத்தோலிக்கத்திலும், சமஸ்கிருதம் வேதத்திலும் பயன்படுத்தப்பட்டாலும் வழக்கிழந்த மொழிகளாகக் கருதப்படுகின்றன. இருபத்தி மூன்று திராவிட மொழிகளில் தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம் ஆகிய நான்கும் பிரதானமானவை. இவற்றில் தமிழே உலகில் அதிகம் அறியப்பட்ட மொழியாகத் திகழ்கிறது.

திராவிடமொழிக் குடும்பம்
(திருந்திய மொழிகள்)

தமிழ் | மலையாளம் | தெலுங்கு | கன்னடம் | துளு

உலகின் எல்லாப் பாகங்களிலும் இந்தோ - ஐரோப்பிய மொழிகள் பரவி உள்ளன. ஐரோப்பாக் கண்டத்தில் ஏறத்தாழ அறுபது மொழிகள் வழங்கப்படுகின்றன. இவற்றில் முப்பது மொழிகள் மட்டுமே உத்தியோக பூர்வ/ தேசிய மொழிகளாக அங்கீகாரம் பெற்றவை. அல்பேனியம், ஆர்மீனியம், ஆங்கிலம்,

இத்தாலியம் ஸ்பானியம், கிரேக்கம், டச்சு, பிரெஞ்சு, போர்த்துக் கேயம், ஜெர்மன், சிலாவியம் முதலான மொழிகளுடன் ரஷ்யமொழியும் முக்கியமான ஐரோப்பிய மொழிகளாக உள்ளன. ஆயினும், இம்மொழிகளுள் ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன் ஆகிய மூன்றுமே ஐரோப்பாவில் முதன்மொழிகள் எனும் மேனிலை கொண்டு விளங்குகின்றன.

**இந்தோ - ஐரோப்பிய மொழிக் குடும்பம்**

அல்பேனிய இந்திய செல்திய ஈரானிய இலத்தீனிய கிரேக்க ஜெர்மனிய பால்திக்

இம்மூன்று மொழிகளும் இந்தோ - ஐரோப்பியமொழிக் குடும்பத்தைச் சேர்ந்தவை. மொழிக் குடும்பங்களில் இந்தோ - ஐரோப்பிய மொழிக்குடும்பமே பெரியது. இவற்றில் பிரெஞ்சு இலத்தீனிய (ரோமானிய) இனமொழிப் பிரிவைச் சேர்ந்தது. மற்றைய இருமொழிகளும் ஜெர்மனிய இன மொழிப்பிரிவில் அடங்கும். மேற்கூறப்பட்ட நான்கு திராவிட மொழிகளும் ஒரே இனமொழிகள். இவை திராவிடம் எனும் தொல்மொழியிலிருந்து பிறந்தவை. இவ்வாறே பிரெஞ்சு, இத்தாலியம், ஸ்பானியம், போர்த்துக்கேயம், புரொவன்ஸால் ஆகியன இலத்தீன் எனும் தொல்மொழியிலிருந்து வந்தவை.

**இலத்தீனியம்**

பிரெஞ்சு ஸ்பானியம் போர்த்துக்கேயம் இத்தாலியம் ருமேனியம் புரொவன்ஸால்

**ஜெர்மனியம்**

சுவீடியம் டேனிஷ் நோர்வேஜியன் ஐஸ்லான்டிக் ஜெர்மன் டச்சு ஆங்கிலம்

ஒரு மொழியின் முதன்மையும் பரம்பலும் அம்மொழி பேசும் மக்களின் வளர்ச்சியிலும் முன்னேற்றத்திலும் தங்கி உள்ளன என்பது வரலாறு காட்டும் உண்மை. இந்தியா, இலங்கை, சிங்கப்பூர், மலேசியா, இந்தோனேசியா, தென்னாப்பிரிக்கா, வியட்நாம், சுரிநாம், குவாதலுப், மார்த்தினிக், மடகஸ்கார், மொரிசியஸ், ரியூனியன், தன்சானியா, பிஜித்தீவு, பர்மா, ரிறினிடாட், மாலத்தீவு முதலான 18 நாடுகளில் தமிழ் பயன்படுத்தப்படுகிறது. தமிழரின் மொழி சுமார் 60 மில்லியன் பேரால் கருத்துப் பரிமாற்றத்தில் கையாளப்படுகிறது.

ஸ்பானிய மொழி 20 நாடுகளில் பேசப்பட்டு வந்தாலும் ஐரோப்பிய முதன் மொழி அந்தஸ்தைப் பெறவில்லை. போர்த்துக்கேய மொழியும் ஐரோப்பா, அமெரிக்கா, ஆபிரிக்கா, ஆசியக் கண்டங்களில் 7 நாடுகளுக்குரிய மொழியாக இருக்கிறது. ஆங்கிலம் 47 நாடுகளில் வழங்கப்பட்டுச் சர்வதேச மொழியாக மேன்மை பெற்று இலங்குகிறது. பிரெஞ்சு 30 நாடுகளின் மொழியாக உள்ளதால், உலகின் இரண்டாவது மொழியாகச் சிறப்புறுகிறது. இரண்டு உலகப் போர்களுக்கும் ஜெர்மனி முக்கிய கர்த்தாவாக இருந்ததினால், அந்நாட்டு மொழி உலகில் ஒரு நல்ல பெயரைப் பெறமுடியாது போய்விட்டது. ஆனால், ஜெர்மனியின் இன்றைய வளமும் பலமும், ஐரோப்பிய ஒன்றிய உருவாக்கத்திற்கு அதன் பங்களிப்பும் ஜெர்மனிக்கு ஐரோப்பாவில் ஒரு பெரும் இடத்தை அளிக்கக் காரணம் ஆகின்றன.

எஸ்பெறான்ரோ எனப்படும் செயற்கை மொழி ஐரோப்பிய அகில மொழியாக - சர்வதேச மொழியாக உருவாக்கப் பட்டிருந்தது. நாடுகளுக்குகிடையே புரிந்துணர்வையும் நல்லுறவையும் ஏற்படுத்தமுடியும் என்பதை நம்பி, அகிலம் பூராவும் ஒரேமொழி வழங்கப்படுவதை மக்கள் விரும்பினார்கள். ஒரு மொழி வேண்டும் என்ற இடத்துப் பல செயற்கை மொழிகள் இயற்றப்பட்டன. அவற்றில் வொலாபுய்க், எஸ்பெறான்ரோ, இன்ரா லிங்குவா என்பன பிரதானமானவை. இம்மூன்றினுள்ளும் இரண்டாவது மொழி ஏற்றுக் கொள்ளப்பட்டது, எஸ்பெறான்ரோ மொழியை 1887இல் Ludwig Lazarus Zamenhof என்ற போலந்துக்காரர் படைத்தார். இன்று, இம்மொழிதான் செயற்கை மொழியில் முதலிடம் வகிக்கிறது. ஆனால், இது சில மொழியியல் - அரசியல் காரணங்களுக்காக முதன்மொழியாகச் செல்வாக்குப் பெறமுடியாத நிலைக்குத் தள்ளப்பட்டுவிட்டது.

| English | Français | Deutsch | Esperanto | தமிழ் |
|---|---|---|---|---|
| Coffee | Le café | der Kaffee | kafo | (கே)காப்பி |
| Problem | Le probleme | das Problem | problemo | பிரச்சினை |
| Minute | La minute | die minute | minuto | நிமிடம் |
| Lamp | La lampe | die Lampe | lampo | விளக்கு |
| Modern | Moderne | Modern | Moderna | நவீன |

ஆங்கிலம் ஐரோப்பாவில் ஐக்கிய இராச்சியத்தில் வழங்கப் படுகிறது. பிரான்சு, அந்தோரா, மொனொக்கோ, பெல்ஜியம், லக்சம்பேர்க், சுவிற்சலாந்து ஆகிய நாடுகளிலும், ஜெர்மன் ஜெர்மனி, ஆஸ்திரியா, சுவிற்சலாந்து, லக்சம்பேர்க், லிஸ்ரென்ஸ்ரெயின் ஆகிய 5 நாடுகளிலும் பேசப்படுகிறது. ஆங்கிலம் உலகில் 600 மில்லியன் மக்களாலும், பிரெஞ்சு 130 மில்லியன் மக்களாலும், ஜெர்மன் 100 மில்லியன் மக்களாலும் பேசப்படுகின்றன.

ஆங்கிலம், ஆங்கில் (Angle) இனத்தவரின் மொழியாததால் ஆங்கிலம் எனப் பெயர் கொண்டது. இம்மொழி கடல்கடந்து வந்த ஜெர்மனிய இனத்தவரான ஆங்கில எனும் வந்தேறு குடியினரால் ஐந்தாம் நூற்றாண்டின் நடுப்பகுதி ஆரம்பத்தில் பிரித்தானியத் தீவுக்குக் கொண்டு வரப்பட்டது. ரோமானிய மொழியாகவும் இருக்கிறது. மிகச் சிறிய நாடொன்றின் மொழியாக இருந்தும், காலனித்துவ முறையினாலும் குடியேற்றப் பரம்பலினாலும் பிரித் தானியத் தீவுகள் தொட்டு வடஅமெரிக்கா, ஆஸ்திரேலியா, தென்னாப்பிரிக்கா முதலான நாடுகள் வரை ஆங்கிலம் பரவியது. இவ்வாறு பரவிய ஆங்கிலம் எல்லை விஞ்சிய ஆங்கிலம் (Extra Territorial Englishes) என அழைக்கப்படுகிறது. பிரித்தானி யாவின் ஆட்சிக்கு உட்பட்டிருந்து விடுபட்ட நாடுகளான இந்தியா, இலங்கை, சிங்கப்பூர், மலேசியா, ஆப்பிரிக்கா, கரீபியன் தீவு முதலான நாடுகள்வரை வழங்கப்படும் ஆங்கிலம் புதிய ஆங்கிலங்கள் (New Englishes) என்றழைக்கப்படுகின்றன.

பிரெஞ்சு இலத்தீன் மொழியிலிருந்து பிறந்ததாகக் கொள்ளப் பட்டாலும், வரலாற்றுரீதியாக ஆராயும்போது, அது ஒரு தனிமொழியிலிருந்து வளர்ந்தது அல்ல என்பது தெரியவரும், இலத்தீனுடன் கொலுவா, வ்றாங்க் மொழிகளும் கலந்து உருவானதே இம்மொழி. 5 - 12 நூற்றாண்டுக் காலப்பகுதியில் பிரான்சின் வடபகுதியில் லாங் தோய்ல், தென்பகுதியில் லாங் த்ஒக் எனும் பிராந்திய மொழிகள் இருந்தன, இவ்விரு பிராந்திய மொழிகளில் பல கிளைமொழிகள் பேசப்பட்டன : பாரிசிலும் அதன் சுற்றுப் பகுதிகளிலும் le francien கிளைமொழி வழங்கப்பட்டது. இது மன்னர்களின் மொழியாகி le français என ஆனது. பின்னர் le français ஆகப் பெயர்மாறி, மற்றைய கிளை மொழிகளை மேவி, ஆட்சிமொழியாகிப் பிரான்சின் மொழியாக உயர்ந்தது. உலகில் கற்றவர்கள் அறிந்த நாகரிக மொழியாகப் பெருமை கொள்கிறது. பிரெஞ்சு மொழி!

ஜெர்மன் மொழியும் பிறப்பியல் வழியில் ஜெர்மனிய மொழியாகவும், எழுத்தியல் வழியில் ரோமானிய மொழியாகவும் (1941) உலவுகிறது. முந்திய காலத் தொடக்கப் பகுதியில் தாழ் ஜெர்மனியம், உயர் ஜெர்மனியம் என இருவகையான பிரதேச மொழிகள் இருந்தன. தற்பொழுது, உயர் ஜெர்மனியமே ஆளுமையான மொழியாக ஆகியுள்ளது. வைதீக கிறிஸ்தவத்திற்கு எதிராகப் புரட்சி செய்த மார்டின் லூதர் உயர்ஜெர்மனிலேயே தமது கருத்துக்களை வெளியிட்டதால், இவ்வகை ஜெர்மனே உத்தியோக, தேசிய ஜேர்மனாக உயர்ந்துள்ளது.

இலக்கணம் அடிப்படையில் மொழிக் குடும்பக் கொள்கை (Family tree theory), August Schlegel (1767 - 1845) எனும் ஜெர்மனிய மொழியாய்வாளரால் அறிமுகப்படுத்தப்பட்டது. பொதுவில்

அனைத்து ஐரோப்பிய மொழிகளும் இலத்தீனில் இருந்தே எழுத்து வரி வடிவங்களை எடுத்தன. ஜெர்மன் ஆனா ஆவன்னாவில் கோதிக், இலத்தீன் என இருவகை எழுத்து வடிவங்கள் உண்டு. இம்மொழி 1941-லிருந்து இலத்தீன் எழுத்துக்களை இரவல் பெற்றது. இலத்தீன் கிரேக்கத்தில் இருந்தும், கிரேக்கம் போனிசிய நெடுங்கணக்கில் இருந்தும் எழுத்துக்களை இரவல் பெற்றது.

| தமிழ் | ஆங்கிலம் | பிரெஞ்சு | ஜெர்மன் |
|---|---|---|---|
| மாதா | Mother | Mère | Mutter |
| பிதா | Father | Père | Vater |
| நாமம் | Name | Nom | Name |
| திரி | Three | Trois | Drei |

மொழிகளுக்குள் ஒற்றுமை வேற்றுமைகளை விளக்க அம்மொழிகளின் இலக்கண அமைப்பே அடிப்படை ஆனது. பெயர்ச்சொல், வினைச்சொல் என்ற இலக்கணப் பாகுபாடு மிக இயற்கை ஆனது. உலக மொழிகளை எழுவாய் - பயனிலை - செயப்படுபொருள் (SVO) அமைந்த மொழிகள் என்றும், எழுவாய் - செயப்படுபொருள் - பயனிலை (SOV) அமைந்த மொழிகள் என்றும் பாகுபடுத்துகிற ஓர் ஒப்பீட்டு முறையும் உண்டு. இப்பாகுபாடு வாக்கிய அமைப்பை மையமாகக்கொண்டு உருவாக்கப்பட்டது. ஐரோப்பிய மொழிகள் முதற் பிரிவிலும், திராவிட மொழிகள் இரண்டாவது பிரிவிலும் அடங்கும்.

**வாக்கிய ஒழுங்கு - தொடரமைப்பு**

| தமிழ் | நான் தமிழ் பேசுகிறேன் | எழுவாய் + செயப்படுபொருள் + பயனிலை |
|---|---|---|
| ஆங்கிலம் | I speak English | எழுவாய் + பயனிலை + செயப்படுபொருள் |
| பிரெஞ்சு | Je parle français | எழுவாய் + பயனிலை + செயப்படுபொருள் |
| ஜெர்மன் | Ich spreche Deutsch | எழுவாய் + பயனிலை + செயப்படுபொருள் |
| எஸ்பெரான்ரோ | Mi parolas esperanto | எழுவாய் + பயனிலை + செயப்படுபொருள் |

ஐரோப்பாவில் கிரேக்க அறிஞர்களான Plato (கி.மு. 429-347), Aritsotle (கி.மு. 384-322) போன்றோர் கிரேக்க இலக்கணத்தைச் செய்திருந்தாலும், Dionysius Thrax (கி.பி. 2ஆம் நூற்றாண்டு) செய்த இலக்கணமே மேற்கு நாடுகளில் முறையான இலக்கணமாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. இலத்தீனில் Donatus (கி.பி. 400), Priscian (கி.பி. 500) ஆகிய அறிஞர்கள் இலக்கணஞ் செய்தனர். பிரெஞ்சு இலக்கணத்தை 1553-ல் Palsgrave John எனும் ஆங்கிலேயர் இங்கிலாந்தில் எழுதினார். (இக்கட்டுரையாளர் 1985-ல் பிரெஞ்சு இலக்கணத்தைப்பற்றித் தமிழில் முதல்நூலினை எழுதியுள்ளார்.)

ஒற்றுமைக்கூறுகள் :

இருவகை மொழிகளிலும் அண்மைச்சுட்டுக்கள் இகரமாகவும், சேய்மைச்சுட்டுக்கள் அகரமாகவும் உள்ளன.

| | தமிழ் | ஆங்கிலம் | பிரெஞ்சு | ஜெர்மன் |
|---|---|---|---|---|
| சேய்மைச்சுட்டு | அது | That | Cela (la) | Das |
| அண்மைச்சுட்டு | இது | This | Ceci (ici) | Dies(e) |

**வேற்றுமைக்கூறுகள் :**

தமிழ்மொழியில் பொருட்களின் இயற்கையான தன்மை கண்டே பால் பகுக்கப்படுகிறது. ஐரோப்பிய மொழிகளின் பாகுபாடு செயற்கை ஆனது. இம்மொழிகளில் - குறிப்பாக டொஜ்ஜிலும், பிரான்சேயிலும் பொருள்களின் தன்மைக்கும், அவற்றினை உணர்த்தும் சொற்களின் பாலுக்கும் தொடர்பு இல்லை.

தமிழறிஞர்கள் மட்டுமல்லாமல் வெளிநாட்டவர்கள், குறிப்பாக ஐரோப்பிய அறிஞர்கள் பலரும் தமிழ் இலக்கணம் எழுதி உள்ளனர். Baldaeus என்ற டச்சுக்காரர் கி.பி. 1672-ல் இந்தியா பற்றிய நூலில் தமிழின் உச்சரிப்புக்கள், வேற்றுமைப் பாகுபாடுகள், வினைச்சொல் திரிபு வாய்பாடு முதலியவற்றைக் குறிப்பிட்டுச் சென்றிருக்கிறார். கி.பி. 1680-ல் Costo Balthsara என்பவர் தமிழ் இலக்கணத்தை இலத்தீனில் எழுதினார். Grammatica Damulica நூலை ஜெர்மன் அறிஞரான Zieganbalg 1786-ல் ஆக்கினார் வீரமாமுனிவர் எனத் தமிழர்களால் தமிழ்ப்பெயர் சூட்டப்பட்ட, தைரியநாதர் எனத் தன் பெயரைத் தமிழ்ப்பெயராக்கிய இத்தாலியப் பாதிரியாரான Constantius Joseph Beschi பல அகராதிகளையும், இலக்கண நூல்களையும் இயற்றி அருளினார். 1889-ல் பிரெஞ்சியர் Martinet தமிழ் இழக்கணத்தைத் தமிழில் எழுதினார். இன்னொரு பிரெஞ்சுப் பாதிரியார் M.J. Baulez 1892-ல் தமிழ் - பிரெஞ்சு இலக்கண நூலை வெளியிட்டார். இதுபோல் ஆங்கிலேயர்களான G.U.Pope, Caldwell போன்றோர் எழுதிய இலக்கணங்கள் தமிழ்மொழி வரலாற்றில் குறிப்பிடப்பட வேண்டியவை. தேமதுர தமிழோசை உலமெல்லாம் பரவும் வகை செய்தல்வேண்டும் எனப் பாரதியார் 1889-1921) கவிதை புனையு முன்னரே, ஐரோப்பியர்கள் தமிழின் புகழை நன்கு பரப்பியுள்ளனர். இவர்கள் அனைவருக்கும் தமிழர்கள் நன்றிக்கடன் பட்டவர்கள் ஆவர்.

தமிழ்மொழி நீண்ட ஒரு வரலாற்றினையும் நெடிய ஓர் இலக்கண இலக்கியப் பாரம்பரியத்தையும் கொண்டது. தமிழ் படிக்க வேண்டும் என்று சொன்ன உடனேயே, “தமிழா? அதில் என்ன படிக்க இருக்கிறது! நாம் அனைவரும் தமிழில் கரைகண்டுவிட்டுத்தானே இருக்கிறோம்” என நினைக்கிற பழக்கம் ஒன்று நமக்கு இருக்கிறது. தமிழ் படித்தல் அல்லது மரபு இலக்கணங்களைப் பற்றி அறிதல்தான் தமிழ் என நாம் கிணற்றுத்தவளை நினைப்பு நினைத்துத் தமிழுக்கு வரம்பு, வரையறை எல்லாம் போட்டு விடுகிறோம். ஆனால், உண்மையில் தமிழில் நல்ல தேர்ச்சி பெற்றவர்கள்கூட அறிவதற்குத் தமிழில் கடலளவு உண்டு என்பதை நாம் நன்கு அறிதல் வேண்டும்.

நமது தலைமுறைகளுக்குத் தமிழ் கற்பிக்கிறோம் என்று பறையறிவித்து, ஈழத்து, இந்தியச் சிறுவர் நூல்களைப் பயன்படுத்துகிறோம். இது நடைமுறையில் எவ்வளவு தூரம் பலன் அளிக்கிறது! பிள்ளைகளைப் பெறும் கல்விமுறைக்கு ஒத்த ஒரு முறையில் போதித்தால், அவர்களைத் தமிழிலும் முதன்மைபெறச் செய்யமுடியும். தெரிந்ததைக் கொண்டு தெரியாததை தெரியச்செய்வது கூடிய விளக்கத்தைத் தரும். புலம்பெயர் நாட்டில், ஊனாவுக்கு உரிய சொல்லுக்கு உரலை உதாரணம் கூறுவது பாலைவனத்தில் தென்றலை எதிர்பார்ப்பதைப் போன்றது. வேண்டுமாயின், கீனாவுக்குக் கீரையைக் காட்டாலாம்; கிணற்றைக் காட்டலாமா? அந்தந்த நாட்டுக் கல்விமுறைக்குப் பழக்கப்பட்ட பிள்ளையை ஆசிரியர் தாய்நாட்டுக் கல்வி முறைக்கு மாற்றுவது எதிர்பார்த்த பலனைத் தராமல் விடுவதற்கு ஏதுவாகும்.

உலகத்தின் முன்னிலையில் உள்ள இருபது மொழிகளில் தமிழும் ஒன்று. மொழிகளில், ஐரோப்பிய மொழிகளே உலகில் அரைவாசிப் பகுதியினரால் பேசப்படுகின்றன. ஐரோப்பிய முதன் மொழிகளான ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன் ஆகிய மூன்றும் உலக மேலாதிக்க மொழிகளாகக் கொள்ளப்படுகின்றன. மக்களால் உண்டாக்கப்பட்டதும் மக்களால் வளர்க்கப்படுவதும் மொழி! இதற்கு நன்றி சொல்லும் விதத்தில்தானோ என்னவோ இந்த மொழி மக்கள் வாழ்வை வளப்படுத்துகிறது. தலைமுறை தலைமுறையாக மனித சமுதாயம் சம்பாதித்த அறிவெல்லாம் இந்த மொழியில்தானே இருக்கிறது. மொழியியல் அறிவு ஒரு மனிதன் தன்னைத் தானே உணரத் துணைசெய்கிறது. உலகத்தைப் புரிந்து கொள்ள வழிசெய்கிறது. மொத்தத்தில் அறியாமையை அகலச் செய்து அறிவின் அளவை அகலச்செய்கிறது மொழி!

# பரதநாட்டியம்

நாட்டிய கலைமணி – முருகையா அருண் மோகன், பிரான்சு

தமிழருக்குரிய செவ்வியற் கலையான பரதநாட்டியம் நீண்டகால வரலாறு கொண்டது. அதனுடைய வடிவமும் பெயர்களும் காலந்தோறும் மாற்றமடைந்து வந்துள்ளன. சங்ககாலத்திலே வள்ளிக்கூத்து, குரவைக்கூத்து, கயிற்று நடனம், வேலன் வெளியாட்டு பேயாடல் (துணங்கைக்கூத்து) என்ற பல வகைக்கூத்துக்கள் ஆடப்பட்டதாக அறியக்கிடக்கிறது. இக் காலத்தில் நடனம், ஆடல், கூத்து என்ற பெயர்களால் அழைக்கப் படுகிறது. ஆடுமிடம் ஆடுகளம் எனப்பட்டது. ஆடுவோர் கூத்தர், விறலியர், கோடியர், வயிரியர், கண்ணுாலர் எனப்பலவாறு அழைக் கப்பட்டனர். இவ்வாடல்கள் சமய, சமூக சார்புள்ளன வாயிருந்தன. சங்க நூல்கள் மலைபடுகடாமும், பொருணராற்றுப்படையும் ஆடலையும் பாடலையும் தொழிலாகக் கொண்டோரின் திறனை எடுத்துக் கூறுவன.

சிலப்பதிகாரக் காலத்திலே மாதவி எனும் ஆடல்மகள் வேத்தியல், பொதுவியல் ஆடல்களையும், பதினோர் ஆடல்களான அல்லியம், கொடுகட்டி, குடக்கூத்து, குடைக்கூத்து, மற்கூத்து, பாண்டுரங்கக்கூத்து, துடிக்கூத்து, பேடிக்கூத்து, மரக்கால் கூத்து, பாவைக்கூத்து, கடையக்கூத்து ஆகியவற்றை ஆடினாள். நாட்டிய நன்னூல் நன்கு கடைப்பிடித்துக் காட்டினாள் என்பதன் மூலம் நாட்டியத்திற்கான நூல்கள் அக்காலத்தி லிருந்ததை அறியலாம். "தலைக்கோலி" என மாதவி பெற்ற பட்டத்தையும் அறியலாம். அக்காலத்திலே அரசசபையிலும் வெளியரங்கிலும், கோயில்களிலும் ஆடல் இடம் பெற்றது.

அதன் பின் பல்லவர், பாண்டியர் காலங்களான கி.பி. 6-ஆம் நூ - 9-ஆம் நூற்றாண்டு வரை தமிழகத்திலே இசையும் நடனமும் இறைவனை வழிபட ஏற்றனவாகக் கருதப்பட்டன. கோயில்களிலே இசை நடனப் பணிகளுக்காகத் "தேவரடியார்" எனும் ஆடல் மகளிர்கள் நியமிக்கப்பட்டனர். அக்காலச் சைவ, வைணவத் திருப்பாடல்களிலே "வலம் வந்த மடவார்கள் நடமாட முழவதிர", "கலையினொலி மங்கையர் பாடலொலியாடல்" எனத் தேவரடியார்கள் போற்றப் படுகின்றனர். பல்லவர்காலச் சிற்பங்களிலே சிவபிரான் தண்டு முனிவருக்கு நடனத்திற்கான காலசைவுகளைப் புகட்டும் சிற்பமும் அவர் பரத முனிவருக்கு நாட்டியம் கற்பிக்கும் சிற்பமும் மாமல்லபுரத்திலுள்ளன.

சோழப்பெருமன்னர் காலமாகிய கிபி 9-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி 12-ஆம் நூற்றாண்டு வரை) தேவரடியார்களைக் கோயிலிலே அமர்த்தும் முறை பெரிய அளவில் கடைப்பிடிக்கப் பட்டது. முதலாம் இராசராசன் தலைநகர் தஞ்சையிலே அமைத்த பெருவுடையார் கோயிலிலே 400 தேவரடியார்களை அமர்த்தி அவர்களுக்கு நிவந்தங்கள் வழங்கினான். இங்கே ராசராசேசுவர நாடகம் நடிக்கப்பட்டது. கோயிலின் விமானத்தின் உட்புறத் தளத்திலே 108 கரணங்களிலே 81 கரணங்கள் சிற்பங்களாக வடிக்கப்பட்டுள்ளன. ஏனையவற்றிக்கு இடமொதுக்கப் பட்டுள்ளன. ஏனோ செதுக்கப்படவில்லை. இவனுக்குபின் ஒன்றரை நூற்றாண்டுகளுக்குப் பின் கும்பகோணம் சாரங்கபாணி கோயிலிலே 108 கரணங்களும் செதுக்கப்பட்டுள்ளன. தொடர்ந்து விருந்தாசலம் விருத்தகிரீசுவரர் ஆலயம், திரவண்ணாமலை அரணாசலேசுவரர் ஆலயம் ஆகியவற்றிலும் 108 கரணங்களும் செதுக்கப்பட்டுள்ளன. சோழர்கால ஓவியங்களிலே நடன ஓவியங்களும் குறிப்பிடற்பாலன.

சோழமன்னர்களுக்குப் பின் தமிழகத்திலே பிற்காலப் பாண்டிய மன்னர் (18, 19-ஆம் நூற் முற்பகுதி) சில இடங்களிலே சில காலமாக முசுலீம்களும் ஆட்சி செய்தனர். கி.பி. 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி தொடக்கம் பிரித்தானியர் ஆட்சியேற்பட்டு 1947-ல் முடிவுற்றது. இக்காலப் பகுதிகளிலே வடபுலத் தொடர்புகளாலே கீர்த்தனை, அஷ்டபதி, ஜாவளி, தில்லானா, முதலியன இசை, நடன வடிவங்கள் தமிழகத்திலே பரவின, தஞ்சை மராத்திய மன்னர் சகாஜியின் படைப்புக்களில் ஸ்வரஜதி, சொல்கட்டு ஜதிஸ்வரம் முதலியன உள்ளன. இக்காலத்திய நாட்டிய நாடகங்களில் தோடயமங்களம், மங்களதருசரணுதிரு, சல்லாம் தருக்கள், சம்வாததரு, ஏலதருக்கள் கீதப்பிரபந்தம், பதம், சூர்ணிகை, தண்பகம் முதலிய உறுப்புக்கள் உள்ளன. பஞ்சரத்தினப் பிரபந்தத்திலே சொற்கட்டு, விநாயகர் கவித்துவம், பதாபிநயம் முதலியவை உள்ளன. இவ்விரு பிரபந்தங்களையும் அக்காலப்பரத நாட்டிய வளர்ச்சிக்குச் சான்றாகக் கொள்ளலாம்.

விஜயராகவ நாயக்கர் (கி.பி 1633 - 1673) காலத்திய குநாதப்புதயமெனும் நூலில் இக்காலத்திய செங்கல் வகாளகவி எனும் புலவரின் கோபாலவிலாசம் எனும் நூலிலும் ஜக்கிணி தருக்கள் பற்றிய குறிப்புக்கள் உள்ளன. இவ்வரசருடைய அவையிலே ரேவதி, சண்பகவல்லி, மூர்த்தி, லோகநாயகி, சசிரேகா, ரத்னகிரி, பகீரதி போன்ற நாட்டியப் பெண்கள் முறையே சௌக்ககாலப்பதம், சப்த சூடாமணிப் பிரபந்தம், குறவஞ்சிப் பிரபந்தம், புதியபதங்கள், தேசிப்பதங்கள், துருபதங்கள், பேரணி நாட்டியம் போன்றவற்றிற்கு நாட்டியமாடினர்.

மேலும், வாள்வீச்சு நடனம், குஜ்ஜரி நடனம், குஜராத்தி நடனம், தண்டலாஸ்யநடனம், கந்து கிரீட எனும் பந்தாட்ட நடனம், விரகப்பதங்கள், சிந்துப் பதங்கள் போன்றவை கதம்ப நிகழ்ச்சிகளாக இடம் பெற்றுள்ளன. இக்காலகட்டங்களிலே மன்னர்களின் ஆதரவுடன் கலைகள் வளர்ந்தமையால் தலைநகரான தஞ்சாவூர் முக்கிய இசை, நடன கேந்திரமாக விளங்கிற்று. இங்கே ராசமன்னார்குடிக்கு அண்மையிலுள்ள செங்கணார் கோயிலில் கங்கைமுத்து, இராமலிங்கம் சகோதரர்களும் தகப்பனாரும் வாழ்ந்தனர் இம்மூவரும் அக்காலத்தில் ஆட்சி புரிந்த மராத்திய மன்னரின் ஆஸ்தான வித்துவானாயிருந்தனர். தஞ்சைப் பெருவுடையார் ஆலயத்திலே நடனம் ஆடி வந்தனர். கங்கை முத்து "நடனாதிவாத்திய ரஞ்சனம், சபாரசிதசிந்தாமணி" ஆகிய நடன நூல்களை எழுதினார். இராமலிங்கத்தின் மக்கள் சுப்புராயன், சிதம்பரம் ஆகியோர் மரபுவழி ஆடற்கலையினைப் பயின்று கச்சேரிகள் செய்தனர். அக்கால நடனங்களாகப் பிரபந்தம், சிம்மநந்தனம், குடக்கூத்து, நவசந்தி கவித்துவங்கள், பஞ்சமூர்த்தி கவித்துவங்கள் முதலியன இடம் பெற்றன. சுப்புராயனின் மக்களாகிய சின்னையா, பொன்னையா, சிவனந்தம், வடிவேலு ஆகிய நால்வரும் தஞ்சைப் பெரிய கோயிலிலே இசைநடனப் பணி செய்தனர். இவர்கள் கர்நாடக இசையை அரங்கேற்றம் செய்தனர். இந்நால்வரும் பரதநாட்டிய நிகழ்ச்சி நிரலை நன்கு கவர்ச்சிகரமான முறையில் ஒழுங்கு படுத்தினர். பொன்னையா இன்றைய பரத நாட்டிய அடவுகளை 120 ஆக வகுத்தாரென்று அறியப்படுகின்றது. இந்நால்வரும் தொடர்ந்து அலாரிப்பு, ஜதிஸ்வரம், சப்தம், பர்ணம், பதம், தில்லானா, சுலோகம் ஆகியவற்றை ஒழுங்கு செய்தனர். இவ்வாறு ஒழுங்குபடுத்தபட்ட நிகழ்ச்சி நிரலுக்குத் தமி ழிலும், தெலுங்கிலும் உருப்படிகளை இயற்றினார்கள். பல மாணவர்களுக்கு நாட்டியம் கற்பித்தனர். அவர்களுள் இருவரை அரச்சபையிலே குரு முத்துசுவாமி தீக்ஷிதரின் முன் அரங்கேற்றினர். தீக்ஷிதர் இவர்களுக்கு "சங்கீத சாகித்திய பரத சிரேஷ்டர்" எனும் பட்டத்தை சரபோஜி மன்னர் மூலம் வழங்குவித்த இக்கச்சேரி முறையே இன்று வரையும் சிற்சில மாற்றங்களுடன் கையாளப்பட்டு வருகின்றது.



# கம்பனின் கை வண்ணம்

திரு. கோவிந்தசாமி செயராமன்

கம்பனின் கவிநயத்தைக் காலம் உள்ளவரைப் போற்றி மகிழலாம். ஒப்பற்ற இராமனின் பெருமையைக் கம்பன் தன் கவியத்தில் அழகுறப் பாடியுள்ளான்.

"யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்
வள்ளுவர்போல் இளங்கோ வைப்போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததிலை"

என்று பாரதியார் கம்பனின் பெருமையைப் பாடுகின்றார்.

இராமனின் பெருமையை உலகுக்கு எடுத்துக்காட்ட விசுவா மித்திரர் தன் வேள்வியைக் காக்கும் பொருட்டுத் தசரதனை நாடி. இராமனை வேள்வியைக் காக்க அனுப்பக் கோருகிறார். முதலில் மறுத்த தசரதன் வசிட்டர் அறிவுரையின்படி இராமனை விசுவா மித்தரருடன் அனுப்புகிறார். தம்டைய தவவலிமையால் ஒரு புதுஉலகத்தையே படைக்கும் சக்திவாய்ந்த முனிவருடன் இராமனும் இலக்குவனும் காட்டுக்குச் செல்கின்றனர்.

ஆயிரம் யானையின் வலிமையைக் கொண்டவளான தாடகை என்ற அரக்கியைப் பெண் என்பதால் கொல்லத் தயங்கினான் இராமன். விசுவாமித்திரரின் சொற்படி தாடகையைத் தன் அம்பினால் கொல்கின்றான். இராமனின் வில் ஆற்றலையும் கை வலிமையையும் கம்பன் காட்டுகின்ற அழகே அழகு.

"சொல் ஒக்கும் கடிய வேகச்
சுடு சரம், கரிய செம்மல்,
அல் ஒக்கும் நிறத்தி னாள்மேல்
விடுதலும், வயிரக் குன்றக்
கல் ஒக்கும் நெஞ்சில் தங்கா(து)
அப்புறம் கழன்று, கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன
பொருள் எனப், போயிற்(று) அன்றே!"

நிறைமொழி மாந்தரின் சாபச் சொற்களை ஒத்த கூடிய வேகமுடைய ஒரு சுடுசரத்தைக் கரிய நிறமும் அழகும் உடைய இராமன், இருள் போன்ற நிறத்தை உடைய தாடகை மீது செலுத்திட, இராமனின் அம்பு, வைரம் பாய்ந்த கல்போன்ற அத் தாடகையின் நெஞ்சில் தங்கி இராமல் பின் முதுகின் புறமாகக் கழன்று சென்றது. கல்வி அறிவில்லாத புன்மையாளருக்கு நல்லவர்கள் சொன்ன நல்ல பொருளைப் போன்று ஓடிப் போய்விட்டது.

ஆதியில் எம்பெருமான் நாராயணன் தவம் செய்ததும், காசியப்பர் தவமிருந்ததும், தேவர்களைக் காப்பாற்ற வாமனனைப் பெற்றதுமான சித்தாசிமரத்திற்கு விசுவாமித்திர முனிவரும், இராமனும், இலக்குவனும் வந்த சேர்ந்தனர். மறுநாள் முனிவர் யாகத்தைத் தொடங்கினார். யாகத்தைத் கெடுக்க நின்றவர்களை இராமனும் இலக்குவனும் வென்றனர்.

யாகத்தை முடித்த முனிவருக்கு மிகுந்த மகிழ்ச்சி. இன்னும் இராமச்சந்திரனுக்குத் தாம் செய்ய வேண்டிய பணியைப் பற்றி நினைக்கலானார். அதுவே சீதா திருமணம்! ஆதலால் திருமணத்தை நடத்தும் பொருட்டு மிதிலையை நோக்கி முனிவரும், இராமனும், இலக்குவனும் செல்கிறார்கள். செல்லும் வழியில் விசுலநகரத்தில் தங்கினார்கள். அங்கு ஓர் அழகான ஆசிரமத்தைக் கண்டார்கள். அந்த ஆசிரமத்தைக் கடக்கும் போது சாபத்தால் கல்லான அகலிகை, இராமனின் கால்பட்டுச் சாபம் நீங்கி உரு பெற்றாள். இதைக் கண்ட முனிவர்.

"மை வண்ணத்து அரக்கி போரில்
மழை வண்ணத்து அண்ணலே! உன்
கை வண்ணம் அங்குக் கண்டேன்,
கால் வண்ணம் இங்குக் கண்டேன்"

மேகம் போன்ற திருமேனி உடைய இராமனே, அங்கு அஞ்சனம் போன்ற கரிய நிறத்துடைய தாடகை என்னும் அரக்கியோடு செய்த போரில் உன் கையின் திறத்தையும் (வில்லின் ஆற்றலையும்) பார்த்தேன். இங்கு உன் திருவடியின் திறத்தைப் பார்த்தேன் என் விசுவாமித்திரர் இராமனைப் புகழ்ந்து கூறுகிறார். இராமனின் கை வண்ணத்தையும் கால் வண்ணத் தையும் படித்து இன்புறலாமே!

## கம்பன் புகழ்

பாவலர்மணி சித்தன், புதுவை.

அமுதம் கம்பன் பாட்டே - ஆம்
அதற்கே தெடுத்துக் காட்டே;
தமிழென் றாலே அதுதான் - அது
தமிழில் விளைந்த மதுதான்!'

தமிழுக் கதுதான் உரமாம் - உயர்
தமிழுக் கதுவே சிரமாம்!

தமிழ்க்கு மேலாம் தரமாய்க் - கம்பன்
தமிழ்த்தாய் தந்த வரமாம்!

கம்பன் பாநம் முத்தம் - அதில்
கவிஅழ குளவே பத்தும்!
கம்பன் தமிழுக்(கு) அத்தன்! அவன்
கவிதை தமிழர் சொத்தாம்!

பாடல்கள் அழகின் வெள்ளம் - அதில்
படிந்தோர் நெஞ்சை அள்ளும்!
நாடகப் பாங்கில் உள்ளம் - மிக
நாடின் கொள்ளை கொள்ளும்!

கம்பன் கலையில் ஆழ்வோம் - அவன்
கன்னித் தமிழ்முன் தாழ்வோம்!
கம்பன் புகழைச் சூழ்வோம் - நற்
கவியமு துண்டே வாழ்வோம்!



# கவிஞர் பார்வையில் கம்பன்

திருமதி ராசி சிமோன்

மனிதனுக்குக் கிடைத்துள்ள பெரும் பேறுகளுள் ஒன்று இரசனை. விளக்கவொண்ணா உள்ளிடை இன்பமது. உள்ளமும், ஊனும் உருகி "எத்துணை அழகு" என்று கரைகிறோமே, அதற்கு ஈடுமில்லை! இணையுமில்லை! அன்றலர்ந்த மலரோ, பொங்கிப் பிரவகிக்கும் புனலோ, மழலையின் பொக்கை வாய்ச் சிரிப்போ ஏந்திழையாளின் ஊஞ்சலாடும் இளமையோ தரும் அதே கவர்ச்சியை ஒரு சிற்பமும், ஓவியமும், கவின்மிகு கவிதையும் அளித்து, மனதையள்ள முடியும். எங்கு திறமை ஒளி வீசுகிறதோ, அங்கு அந்த ஒளிக்குத் தூண்டுகோலாக இந்த ரசனையும் வாழும். படைத்தவனின் கற்பனையோடு ஒன்றி, சில வேளைகளில் அதனையும் விஞ்சி, அதில் இலயிக்கும் இரசிகர்கள் வாழும் வரை, ஒரு படைப்பு அதன் உன்னத பீடத்தில் கொலுவீற்றிருக்கும். இப்படிக் காலங்காலமாய், ஒன்பதாம் நூற்றாண்டு முதல் இன்று வரை, இனியும் தமிழனென்று ஒரு இனம் வாழும் காலம் வரை, கவிதை வானில் என்றும் ஒளி வீசும் விண்மீனின் மறுபெயர் **"கம்பன்"**.

கம்பராமாயணம் அரங்கேறிய அன்றே,

"கம்ப நாடுடைய வள்ளல் கவிச்சக்கரவர்த்தி பார் மேல்
நம்பு பாமாலையாலே நரருக்கின்றமுதம் ஈந்தான்"

என்று புகழப்பட்டவன். அன்றிலிருந்தே, பொதுபடக் **"கவிச்சக்கரவர்த்தி"** என்று சொன்னால் அது கம்பன் ஒரவனைத்தான் குறிக்கும். மரபுப் பாக்கள் கம்பனால் காக்கப்படுகின்றன. விருத்தப்பா இலக்கணத்திற்கு இலக்கியமாக கம்பன் காவியம் திகழ்கிறது. "விருத்தம் எனும் ஒண்பாவிற்கு உயர் கம்பன்" என்றும் "புகழ் கம்பன்" என்று அழைக்கப்பட்டவன் அவன். மும்மணிக் கோவை, சடகோபரந்தாதி, ஏரெழுபது, சிலை எழுபது, திருக்கை வழக்கம், சரசுவதியந்தாதி ஆகியவற்றின் ஆசிரியன் எனச் சொல்லப்பட்டாலும், கம்பராமாயணம் ஒன்று போதும் அவன் திறமை சொல்ல! அதனால் கம்பனைப் புலவர்கள் தமது ஆதர்ச கவிஞனாக வரித்துக் கொண்டதில் எந்த வியப்புமில்லை. பண்டைப் புலவர் ஒருவரோ.

"இம்பர் நாட்டிற் செல்வம் எல்லாம் எய்தி அரசாண்டிருந்தாலும்,
உம்பர் நாட்டின் பற்பகக் கா ஓங்கு நிழல் இருந்தாலும்,
செம்பொன் மேரு அனைய புயத்திறல் - சேர் இராமன் திருக்கதையில்
கம்பன்நாடன் கவிதையிற் போல் கற்றோர்க்கு இதயம் களியாதே"

என்று பாடுகிறார். கம்பன் கவிதையில் திளைக்கும் கற்றோருக்குத் திரண்ட செல்வமும், அரச பதவியும், நினைத்ததெல்லாம் வழங்கும் கற்பகத் தருவும், இன்பமளிக்குமா என்ன?

கம்பனை இரசிப்பதில் பாமரரும் விலக்கல்ல! கம்பராமாயணம் எந்த அளவு சாமான்யரை மயக்கியிருந்தால் **"கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவி பாடும்"** என்ற சொற்றொடர் பிறந்திருக்கும்? அவன் புலமை கண்டு **"கல்வியிற் பெரியவன் கம்பன்"** என்றே முத்திரை குத்திவிட்டார்கள்.

கவிஞர்களோ, எதுகையும் மோனையும் உறவாட, உதிர்ந்த சொல்லெல்லாம் கவிதையான கம்பனின் அடி பற்றி காவியம் படைக்கவும், கம்பனை அலசவும், அவனில் மெய்மறக்கவும், அவனை இரசிக்கவும், அவனைப் பற்றி விவாதிக்கவும், சொற்பொழிவாற்றவும், ஆக அவனைச் சுற்றியே அந்தக் காந்த சக்தியில் கட்டுண்டனர்.

நாமக்கல் கவிஞர் பெ. இராமலிங்கம் பிள்ளை தமிழ் இலக்கிய மரபுகளைப் போற்றியவர். தமிழக அரசின் "அரசவைக் கவிஞராக" இருந்தவர். விடுதலை உணர்ச்சியைத் தூண்டும் கவிதைகளைப் பாடியவர். விடுதலைப் போராட்டத்தில் சிறைவாசம் செய்தவர். "மலைக் கள்ளன்". "அவளும் அவனும்" போன்றவை இவரது படைப்புக்கள். "வான்மீகியும் - கம்பனும்" என்ற ஒப்பாய்வு நூலொன்றை எழுதியவர். "இலக்கிய இன்பம்" எனும் தலைப்பில் கம்பனின் காவிய நயங்களைச் சுவைத்தவர். அவர், கம்பனின் திறனை ஆராயப் புகுந்து, இறுதியில் வியந்து நிற்கிறார்.

"எண்ணி எண்ணித் திட்டம்போட் டெழுதி னானோ!
எண்ணாமல் எங்கிருந்தோ கொட்டி னானோ!
புண்ணியத்தால் உடன் பிறந்த புலமை தானோ!
போந்தபின்னர் ஆய்ந்தறிந்து புகன்ற தாமோ!
தயரதனும் சனகனுமே தரித்த நோன்போ!
விண்ணமுதின் சுவைகெடுத்த கம்பன் பாடல்
விரிந்தவிதம் என்றென்றும் வியப்பே ஆகும்!

கம்பனை விட்டால் தமிழுக்குப் புகலிடம் கிடையாது என்று அவருக்குத் தோன்றிவிட்டது போலும், எனவே.

கம்பனை மறந்தால் தமிழ் ஏது?
கவிதை என்பதும் கமழாது!
அம்புவிக் கவிஞருள் அரசாகும்
அவனே தமிழ்மொழிப் பரிசாகும்

என்று புளாங்கிதம் அடைகிறார். அது மட்டுமல்ல :

கன்னித் தமிழெனும் பெருமையெலாம்
கம்பன் கவிதையின் அருமையினால்
இன்னொரு கம்பனும் வருவானோ?
இப்படி யும்கவி தருவானோ?

என்று ஏங்குகிறார். பிறகு,

செம்பொருளும் சொற்பெருக்கும் தெளிந்த ஞானம்
தேடுகின்ற இலக்கியமும் செறிந்த தாகும்
நம்பெரிய தமிழ்மொழிக்கும் பெருமை காட்டி
நானிலத்தின் கவிஞருள் தலைவன்

என்றே போற்றுகிறார். அப்படியும் அவரது தாகம் தீரவில்லை. சிகரம் வைத்தது போல் வால்மீகியுடன் ஒப்பிட்டுக் கம்பனை அவர் சிறப்பிக்கும் விதம் இருக்கிறதோ, அது எண்ணுந்தோறும் இன்பம் நல்கக் கூடியது. வால்மீகியின் புரியாத செய்திகளை எளிமையாக்கி, அறிவுக்குப் பொருந்தும் வண்ணம் மாற்றம் செய்து, தமிழ்ப் பண்பாட்டில் புரட்டி இனிமை சேர்த்தான் என்பதைக் கடினமான முள் நிறைந்து, உள்ளே பிசின் ஒட்டும் பலாப்பழத்தை, அதன் சுளையை மட்டும் கீறி எடுத்துத் தேன் கலந்து சுவைபடத் தந்தான் என்று பரவசப்படுகிறார் :

"மால் கடிந்த தவமுனி வான்மீகி என்பான்
வனத்திடையே தான்கண்டு கொண்ட வந்த
பால்படிந்த, முள்ளடர்ந்து, பருத்து நீண்டு
பரிமளிக்கும் பலவின்கனி பாருக் கீந்தான்
மேல்படிந்த பிசினகற்றி, மெள்ளக் கீறி
மெதுவாகச் சுளையெடுத்துத் தேனும் வார்த்து
நூல்படிந்த மனத்தவர்க்கு விருந்து வைத்தான்
கம்பனென்ற தமிழ்த்தாயர் நோற்ற மைந்தன்"

இதனைப் படிக்கும் போதே நாமும் இனிய பலாவைத் தேன் கலந்துண்ட மகிழ்வினை அடைகிறோம்.

நம் பாரதி, தேசியக் கவி - அவரைப் பற்றி விளக்கம் தருவது தமிழருக்கேத் தலைக் குனிவைத் தரும். ஏனெனில், பாரதியைத் தெரியாதவன், தமிழனே அல்ல. சுப்பிரமணிய பாரதி, 20 ஆவது நூற்றாண்டின் இணையற்ற கவி. தன் இனிய, எளிய பாக்களால் தமிழ் வளர்ச்சிக்கு உரமும், புத்துணர்வும் ஊட்டியவர். மக்களிடையே சாதி ஒழிப்பு, விடுதலை வேட்கை, தமிழ் ஆர்வம் முதலியவற்றை வீறிட்டெழச் செய்தவர். விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டு இன்னல் பல அடைந்தவர். வீரமும், பரந்த எண்ணமும் கொண்ட அவர் "மகா கவி" எனவும் அழைக்கப்பட்டார். "பாப்பாப் பாட்டு, குயில் பாட்டு, கண்ணன் பாட்டு, விநாயகர் நான்மணி மாலை, வேதாந்தப் பாடல்கள், தேசிய கீதங்கள், சுதந்தரப் பள்ளு" முதலிய பாடல்களும், "ஞானரதம், சந்திரிகையின் கதை, தராசு" முதலிய உரை நடை நூல்களும் இயற்றியுள்ளார்.

நெஞ்சுரம் மிக்க இக்கவிஞர், தனக்கே உரிய இறுமாப்போடு,

"யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல், வள்ளுவர் போல், இளங்கோவைப் போல்

பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை" உண்மை வெறும் புகழ்ச்சியில்லை"

என்று ஆணித்தரமாகக் கூறுகிறார். தமிழ் பரப்ப அவர் உவமைக்காக உடுத்துக் கொண்டதே மூன்று கவிஞர்களைத் தான். அதிலும் முதலிடம் கம்பனுக்குத்தன். "செந்தமிழ் நடெனும் போதினிலே இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே" என்று சீர் மிகுந்த தாய் நாட்டைப் பாட வந்தவர், அங்கும் கம்பனை முன் வைத்து "கல்வி சிறந்த தமிழ் நாடு - புகழ்க் கம்பன் பிறந்த தமிழ் நாடு" என பூரிக்கிறார்.

கம்பனைச் சொன்னால், கலைக்களஞ்சியத்தைக் காட்டினாற் போல், எட்டயபுரம் சமஸ்தான பாகவதராகிய திரு சுப்பராம தீட்சதர் காலஞ்சென்ற போது, பாரதியார் சில இரங்கற் பாக்களைப் பாடினார். "கர்ணனொடு கொடை போயிற்று - உயர் கம்பநாடனுடன் கவிதை போயிற்று" என்று அதில் ஒரு பாடலில் கூறுகிறார். துயரச் சூழலிலும் கம்பனுக்குக் கவிதை என்ற முகவரி மாறவில்லை.

பாரதியை அறிந்தோர், அவரிடத்து விவேகத்தையும், வேதாந்த உணர்வையும், இயற்கையிலும், இறைவனிலும் கலந்து இலயிக்கும் தன்மையைம் காணாமல் இருக்க முடியாது. ஜீவாத்மா பரமாத்மாவோடு இணையுமளவு உயர்நிலை அடையும் போது, அங்கு துன்பமில்லை இன்பமுமில்லை. சுயமென்பதோ, பேதமென்பதோ இல்லை. அங்கு ஒன்றே எல்லாமாய்த் தோற்றமளிக்கும். அந்த அரநிலையைப் பாட வந்த அவர், "வானில் பறக்கின்ற புள்ளெலாம் நான்" என்று தொடங்கி, ஓரிடத்து "கம்பனிசைத்த கவியெலாம் நான்" என கூறுகிறார். உலகளாவிய பெருநோக்கில் பாடப்புகும்போதும், கவிதை என்றதுமே பாரதியின் நினைவுக்கு வருவது "கம்பன்" தான்!

கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, தலைசிறந்த கவிஞர்களுள் ஒருவர். "சுகிந்தை மாலை, அழகம்மை விருத்தம், மருமக்கள் வழி மான்மியம், ஆசியசோதி, அன்பின் வெற்றி, உமர்கய்யாம் பாடல்கள் போன்ற கவிதை நூல்களும், நாஞ்சில் நாட்டு மக்கள் வரலாறு, காந்தார்ச்சாலை" முதலிய கட்டுரை நுல்களும் இயற்றியவர். அவருக்கு ஒய்வென்பதே கையில் கம்பனோடுதான் போலிருக்கிறது. அதனால் தான் அமைதியான சூழ்நிலையில், நிம்மதியாக கம்பனை இரசித்த தன் அனுபவத்தை அருமையாக எழுதுகிறான் :

"வெயிற் கேற்ற நிழலுண்டு, வீசும் தென்றல் காற்றுண்டு
கையில் கம்பன் கவியுண்டு, கலசம் நிறை மதுவுண்டு
தெய்வ கீதம் பலவுண்டு, தெரிந்து பாட நீயுண்டு
வையம் தருமிவ் வளமின்றி, வாமும் சொர்க்கம் வேறுண்டோ?"

பிறிதோரிடத்தில், கம்பனுக்குக் கவியுலகில் ஓர் நிகரற்ற பீடத்தை "கம்பன் கவியின் கவியமுதம் உண்டிட - மால் - அம்புவியில் வந்திங்கு அவதாரம் செய்தானோ!" என்று கூறி அளிக்கிறார்.

உவமைக் கவிஞர் என்ற சிறப்பினைப் பெற்ற சுரதா, "தேன் மழை" கவிதைத் தொகுப்புக்குத் தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் பரிசினைப் பெற்றவர் தமிழ் நாடு அரசின் "பாவேந்தர் பாரதிதாசனார்" நினைவுப் பரிசையும், பதக்கத்தையும் முதலில் பெறும் வேறு பெற்றவர். அவர் ஒரு கவிதையில்,

"காதலைத் தேடுமுன் கலித்தொகை தேடு
கற்பனை வேண்டுமெனில் கம்பனை நாடு
சாதி நூல் அனைத்தையும் தணலில் நீ போடு
சமரச ஞானியின் அருட்பாவைப் பாடு" என்கிறார். கம்பனின் கருவூலத்திலிருந்த எவ்வளவு வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளலாம். அள்ள அள்ளக் குறையாத அமுத சுரபி அது.

கவிஞர் மு. மேத்தாவோ, "எந்தக் கொம்பனுக்கும் என் தலை பணிந்ததில்லை" கன்னித்தமிழ் வளர்த்ததால், கம்பனே உன்னை வணங்குகிறேன்" என்று சிரம் தாழ்த்துகிறார்.

கவிஞர் கண்ணதாசன் பற்றி விளக்கம் ஏதும் தேவையில்லை. திரைப்படப் பாடல்கள் கவிதைகளே அல்ல என்று ஒரு சாரார் கடுமையாக விமர்சிக்கும் போதே, தன் எளிய, இனிய பாடல்களால் தமிழ் நாட்டின் கவனத்தை அள்ளியவர். மக்களால் "கவியரசு" என்று பாராட்டப் பட்ட அவர், விரைந்து பாடும் ஆற்றல் கொண்டவர். தமிழ் நாட்டு அரசவைக் கவிஞராகவும் இருந்தவர். கம்பனின் தமிழினிமையைப் பற்றி அவர் கூறுகிறார் :

ஆயிரம் காலம் நின்றே அருந்தவம் புரிந்தபோதும்
தாயினும் மேலாம் கம்பன் தமிழ் போலப் பிறப்பதில்லை!
வாயினாற் சொல்லும் போதும், மனத்திடை நுகரும் போதும்
தூயதோர் இனிமை தோன்றும் சொல்லவன் சொல்லேயன்றே!"

தமிழ்நாடு இரண்டறக் கலந்தவன் கம்பன். அவனின்றி தமிழ் வாழ்வதெங்கே என்ற பொருள்பட

"கம்பனுக்கு மேலோர் கவிஞன் பிறப்பதில்லை
கம்பனது கவியின்றி கன்னித் தமிழ்தான் வாழ்வதில்லை"
என்று செப்புகிறார்.

"பன்னீராயிரம் பாட்டைப் பாடினான் கம்பவனவன்
சொன்னயமா, பொருள் நயமா, தொடரும் உவமைகளா என்று வியந்தவர், கம்பனைத் தழுவியே இங்கு கற்பனைகள் பிறக்கின்றன என்று துணிந்து கூறுகிறார் :

"செந்தமிழர் காட்டுந் திரைப்படங்கள், சிறு கதைகள்
காட்டுகின்ற பாத்திரங்கள், கணத்துக்கோர் தத்துவங்கள்
எல்லாம் இரவல் - எதிலும் முழுமையில்லை
குடிக்காமலே போதை குடியேறி நிற்பது போல்
படைக்கின்ற பாத்திரங்கள் படித்தவரைத் தொடுவதில்லை
கம்பனது பாத்திரங்கள் காலத்தின் சாத்திரங்கள்".

இதற்குக் காரணம் உண்டு. கம்பனின் அடிச்சுவட்டைப் பின்பற்றியே தான் எழுதுவதை அவரே பகிரங்கப் படுத்துகிறார்.

"எப்படியோ கம்பனுக்கும் எனக்கும் தொடர்புண்டு
செப்புவதெல்லாம் கம்பன் செந்தமிழாய் வருவதனால்
அக்காலம் அப்பிறப்பில் அழகு வெண்ணை நல்லூரில்
கம்பனது வீட்டில் கணக்கெழுதி வாழ்ந்தேனோ நம்புகிறேன்
அப்படித்தான்".

மேலும் அவரே தன் படைப்புகள் கம்பன் போட்ட பிச்சை என்று ஒப்புக் கொள்கிறார் :

“கம்பன் கொடுத்த கவிப்பிச்சை ஓரளவு
கண்ணன் கனிந்தளித்த கைமுதல்கள் ஓரளவு
கம்பனை நான் பாடிக்களிப்பதற்குக் காரணமே
தம்பிக்குக் கொஞ்சம் தந்து வைத்தான் என்பதனால்!”
கற்பனைக் கிளறும் கம்பனைச் சுவைக்கையிலே :
“இவ்வண்ணணம் நிகழ்ந்த வண்ணம்
இனி இந்த உலகுக்கெல்லாம்
உய்வண்ணம் அன்றி மற்றோர் துயர்
வண்ணம் உறுவதுண்டோ?
மைவண்ணத் தரக்கி போரில் மழை வண்ணத்து
அண்ணலே - உன்
கை வண்ணம் அங்குக் கண்டேன், கால் வண்ணம் இங்குக் கண்டேன்” என்று வரும் சொற்குவியல், கண்ணதாசனிடம்
“பால் வண்ணப் பருவம் கண்டு வேல் வண்ணம்
விழிகள் கண்டு
மால் வண்ணம் நான் கொண்டு வாடுகிறேன்”
எனத் தடம் மாறாது வருவதும்,
“தோள் கண்டார் தோளே கண்டார் தொடுகழல்
கமலமன்ன தாள் கண்டார் தாளே கண்டார்” என்னும் அமுத வரிகள்
“தோள் கண்டேன் தோளே கண்டேன்
தோளில் இரு கிளிகள் கண்டேன்” என அவ்விதமே கையாளப் படுவதும் இதை உறுதி செய்கின்றன.

“கம்ப சூத்திரம்” என்னும் பாடலில் கண்ணதாசன் தன்னையே எடை போட முனைகிறார் :

“பத்தாயிரம் கவிதை முத்தமாக அள்ளி வைத்த சத்தான கம்பனுக்கு ஈடு - இன்னும் வித்தாகவில்லை என்று பாடு!
காலமெனும் ஆழியிலும், காற்றுமழை ஊழியிலும்
சாகாது கம்பனவன் பாட்டு - அது
தலைமுறைக்கு எழுதி வைத்த சீட்டு!
கம்பனெனும் மாநதியில் கால் நதி போல் ஆவதென
நம்புகிறேன் பாட்டெழுதும் நா னே- அந்த
நாயகன் தான் என்ன நினைப்பானோ!”
கம்பனைப் போல் அவர் கவிதைகள் சாகா வரம் பெற்றவையா என்பதைக் காலம் தான் கணிக்கும்.

கவிஞர் வாலி, கண்ணதாசன் காலத்து கவிஞர். திரைப் பாடல்களில் சமுதாய, அரசியல், வேதாந்த மாற்றங்களுக்கான எழுச்சியைத் தருகிறவர். கம்பன் காவியச் சிறப்பில் மூழ்கி, அவன் கருத்துக்களை, பாடல்களில் பொருட்சுவையை எளிய தமிழில், புதுக்கவிதை வடிவில் “அவதார புருஷன்” என்று புதிய தலை முறைக்கு அறிமுகப்படுத்தியவர். கம்பனைப் போல் புலவன் இன்றுவரை இல்லை என்று கூறுகிறார் :

“நேர்த்தி மிக தமிழுக்கோர் நேத்திரமாய்த் தானிருந்து
சீர்த்தி மிக சிந்துகளால் செந்தமிழர் வாழ்வுக்கோர்
கீர்த்தி செயப் பிறந்தவனாம் கம்ப நாடன் அவனிடத்தைப்
பூர்த்தி செய இன்னும் ஓர் புலவன் பிறக்கவில்லை”

தன் “நெஞ்சமெலாம் வீற்றரசு புரிகின்ற வண்ண மொழி பண்ணரசு” னான கம்பனின் திறனை வரிசையாக அடுக்குகின்றார்.

“ கம்ப நாடன் தமிழ்த்தாய் ஈன்ற தலைச்சன் பிள்ளை - அவள்
சித்திரத் தோளில் தொத்திய கிள்ளை
விருத்தம் அவனது கருத்தில் நின்று நிருத்தம் பயின்றது
- புனையும்
செய்யுள் அவனது சேயினைப் போல கையுள் துயின்றது
- மொழியின்
லாவகம் அவனது நாவகம் தன்னில் சேவகம் செய்தது
- உவமை
ஆயிரம் அவனது பாயிரம் தனது தாயகம் என்றது”

இத்தனை திறன் படைத்த கம்பன், வால்மீகி எழுதிய கதையையே தானும் ஏன் எழுதினான் என்ற ஆதங்கம் அவருக்கு உண்டு போலும்! அவரே சமாதானமும் கூறிக்கொள்கிறார் :

“இப்புவி இசைக்கும் இராம காதையில்
எப்படி வான்மீகி எழுதி வைத்தானோ
அப்படியே அவன் காப்பியா அடித்தான்?
அல்ல அல்ல! அதில் காப்பியம் வடித்தான்
வடக்கே இருந்து வாங்கிக் கொண்டு
வந்தவன் தானே கம்பன் என்பார்.
முடக்கு வாதம் மூலையில் கொண்டு
முக்குவார் முனகல் முக்கியமில்லை!
தங்கம் எங்கே வாங்கினால் என்ன?
தட்டான் பெருமை தாலியில் தானே!”

அந்நிய நாட்டில், கம்பன் புகழை, அவன் கவிதைச் சிறப்பைப் பரப்பவென்றே அவதரித்தாரோ என வியக்கச் செய்யும் கவிஞர் கி. பாரதிதாசன் நாவன்மையும், தமிழ்ப் புலமையும், மாறாத மொழிப் பற்றும் கொண்டவர். தளராத உழைப்பும், அயராத சித்தமும் கொண்ட இவர்.

“கற்கண்டு பால்தேன்முக் கனியின் சாறு
கலந்திட்ட அமிழ்தமெனக் கழறு வேனோ!
விற்கொண்டு பகைமுடித்த இராமன் கதை
விருத்தமெனும் வியன்தமிழில் விளைந்த மேலாம்
சொற்கொண்டு நல்லறங்கள் அனைத்தும் சொன்னான்
தூயவனாம் பெரும்புலவன் கம்ப நாடன்!
நற்றொண்டு புரிந்திட்டான் தீந்த மிழ்க்கே
நாள்தோறும் அவன்புகழை நவிலு வோமே!
என்பதோடு,
“கம்பா காலம் வென்றொளிரும்
கவிகள் படைத்த தமிழன்பா!
அம்பாய் விரைந்து செல்கின்ற
ஆற்றல் உடைய என்பாக்கள்
தெம்பாய் என்னைத் தெளிவித்துத்
திகட்டாத் தேனாய் இனித்திடுமே!”
என்று கம்பனில் கரைகிறார்.

அயல்நாடில், இன்பத் தேனாய் தமிழ் வர்க்க இளமைக்கு இவரென்றால், அனுபவத்திற்கே உரிய ஆற்றலோடு கவிப் பொழிய இன்னொரு கவிஞர் கபிலனார். இவர் நின்றால் கவிதை அருவியாய்க் கொட்டும். அமர்ந்தால் நதியாய்ப் பாயும். அவர்

“வால்மீகி எனும் முனிவன் படைத்த காதை

மானுடத்தின் நிறைகுறையை வடிவம் செய்யும்
நுல்முழுதும் இராமபிரான் மனிதன் என்றே
நுட்பமாய்ச் சித்தரிக்கும் தெய்வம் ஆனான்
கோலெடுத்துக் கம்பன் விரல் கொள்ளும் போது குலராமன் தமிழ்ப்பண்பு தமிழர் மேன்மை
நால்வகையாய் உயிர்பெற்று நடனம் செய்ய
நம்முன்னே எழுந்ததய்யா கவிதைக் கோயில்!
என்று மலைக்கின்றார். மேலும்,
“தீமூட்டி அழித்துவிடச் சொன்னார் உண்டு
தீபத்தைத் தீவந்து அணைக்கக் கூடும்?
பூமாலை போல்கம்பன் பொய்யாச் சொற்கள்
புயல்கண்டும் கடல்கொண்டும் மலைபோல் நிற்கும்
பாமாலை யாய்த்தமிழர் நெஞ்சில் சூழும்
பழகுதமிழ்ச் சுவைமடுக்க மறுப்பார் யாரோ!
ஆமாமாம் தமிழ்கூறும் உலகும் அப்பால்
அவனியெல்லாம் கம்பனது குரலே கேட்கும்!”

இன்னும் எத்தனை புலவர்கள் கம்பன் கவிதையில் தேனுண்ட வண்டுகளாகக் கிறங்கி, அந்த மயக்கத்தை, அதன் சுகத்தை எப்படியெல்லாம் வெளிப்படுத்தினார்களோ! இன்னும் எவ்வாறெல்லாம் தமிழ்த் தாய்க்கும், கவிச்சக்கரவர்த்திக்கும் பாக்களால் மாலை தொடுத்து அணிவிக்கப் போகிறார்களோ! ஒன்று மட்டும் நிச்சயம், தமிழ் உள்ளவரை கம்பன் வாழ்வான்! அவன் புகழ் எங்கும் பரவும்!

“கம்பனென்ற ஆதவனால் பாக்கள்இங்கே பூக்களாகும்
கவிரென்ற வண்டுகளால் தேன்துளிகள் இடம்மாறும்
விண்ணிகர்த்த புகழ்பரப்ப தமிழ்தான் மிளிரும்
என்னையொத்த எளியோர்தம் உளந்தான் குளிரும்”



# சிறியன சிந்தியாதான்

கவிஞர் கண. கபிலனார், பிரான்சு.

இராம காவியம் இனிய காவியம்
இராவண காவியம் என்றும் சொல்வர்!
புராணம் பேசிப் போற்றிடான் கம்பன்
மனித மாட்சி மகிழ்ந்து பேசினான்
விலங்கின் பெருமை வியந்து பேசினான்
அரக்கனைக் கூட அழகுற வைத்தான்
தசரத ராமன் தந்தைசொல் வழுவான்
கோசல ராமன் தாய்ச்சொல் தொழுவான்
சீதா ராமன், சானகி ராமன்
காதலால் உருகிக் கண்ணீர் வடிப்பான்
இரக்கம், கருணை, ஈகை, அருள்வளம்
அறநெறி, சத்தியம், ஆட்சி செய்திடப்
பிறபெண் நோக்காய்ப் பெருமையும் பெற்றான்!
நனையுடன் உறவும் நட்பும் அணுகினான்!
பகைவருக் கருளினான்! பண்புக் கணிகலம்!
வாள்வலி சொல்லவா? வலிமை சொல்லவா?
தோள்வலி சொல்லவா? சொற்கள் இல்லையே!
பாதம் பட்டதும் சாபம் பட்டது!
மலையென வில்லும் முறிந்தது கையில்
சிலைகள் உயிர்த்தன சிந்தை அழகால்
தலைமகன், தரை, வான் தாங்குவான் இராமன்
சித்தம் அழகாம் செயலும் அழகுதான்
குணமும் மனமும் கொள்கையும் அழகுதான்
வனத்தின் வாசம் விரும்பி வந்தான்
தந்தையின் சொல்லாய் மற்றொரு தாயார்
சிந்திய சொல்லைச் சேவிக்க வந்தான்
பன்மணிக் கூடம் பர்ண சாலை
பொன்மணிப் பட்டு மரவுரிப் போர்வை
காய்கனி கிழங்கு கற்பகச் சோறு
பசுமரக் கிளைகள் பனிமலர் மஞ்சம்
நாட்டைப் போலவே காட்டை மதித்தான்
வீட்டைப் போலவே வேண்டி உலவினான்
சீதையின் சிரிப்பு, இலக்குவன் நடப்பு
போதுமே வாழ்வின் பொலிவைக் கொடுக்க!
தவத்தின் பயனாய்த் தரைக்கு வந்த
இவனோர் அற்புதம்! இலக்கிய மானுடன்
எல்லாம் சரிதான்! எல்லாம் மெய்தான்
பொல்லா மனிதப் பிறவி அல்லவா?
ஐயோ, மனித அழுக்கு வந்தது
நிலவின் களங்கம் நிற்கலாம். ஆனால்
சூரிய குலத்துச் சுடரில் குறையா?
வாலியின் மார்பில் பாய்ந்தது பாணம்!
வளைந்தது வில்லா? வளைந்தது சத்தியம்!
பின்னொரு நாளில் இன்னொரு வீரன்
பிழையிலா வீரம் பெய்த போதிலும்
பிசைந்த கையொடு குனிந்து நிற்கிறான்
அசையா வீரம் சத்தியம் கருணை
இசையாய் இராமன் எனும்எழில் பார்ப்போம்
இன்றவன் இல்லை! இராம பிரானாய்
நின்றவன் யாரென நிறுத்துவோம், காண்பீர்!

மார்பைத் துளைத்த வாலியைப் பற்றி
வாலி துடிக்கிறான்! வலியால் அல்ல!
இலக்கிய மனிதன் இராமனா? சத்திய
விளக்கா என்னை வீழ்த்தக் காண்கிறேன்!
ஏழு கடலைத் தாண்டிய போதும்
சூழும் திசையெலாம் சுற்றும் சத்தியம்
பாழும் விதியால் பக்குவம் அழிந்தே
ஏழு மரங்கள் பின்னே ஒளிந்ததே
ஏழு மரங்களும் என்னைப் போலவே
இழிவால் துடிக்கும், இரங்கிச் சிரிக்கும்!
இராம பாணம் இளைத்தது வேதனை
மார்பிலே அம்பு, மகிழ்ச்சி, பெருமை
மரத்தின் பின்னே ஒளிந்த அம்புக்கு
மார்பென முதுகெனப் பேதம் ஏது?
வேதப் புத்தகம் நஞ்சு விதைக்குமா?
நீதி யறங்கள் முட்கள் நிறுத்துமா?
சத்தியம் வகுத்த நாணும் தண்டும்
வைத்த கோதண்டம் வழங்கிய தென்ன?
வீரம் அல்லவே! விவேகம் அல்லவே!
வீரம் என்னிலோ விழிமுன் நிற்கும்
சோரம் போகாத் தோளதைத் தாங்கும்
தவத்தால் மிகுந்த தனிப்பெரும் பகையும்
எவையும் வெல்லும் இக்கோ தண்டம்!
விவேகம் ஆகிலோ வேங்கைப் புலியாய்ப்
புதர்புகுந் திருந்தும் பொங்கிப் பாயுமே!
கானகம் ஆளும் வானர மன்னன்
தான்நிகர் இல்லாத் தயரதன் தோழன்
தயரதன் மைந்தன் இராமன், அவன்துணை
வாலியே யென்று வைக்குமே உண்மை!
மரத்தின் பின்னே வீரம் மறைத்த
இராமா, குருதியால் எழுதினாய் நெஞ்சில்
வாலியின் மரணமா? வைகுந்தம் விட்டுத்
தெய்வ நிலையே தேவை இலையென
மாநிலம் போற்றும் மானுட னாகி
எடுத்துக் காட்டிய தோற்றமே மரணம்!
தூய தயரதன் தோன்றலே, நெஞ்சில்
நேயமாய்ப் புகுந்தது இராம மாணமா?
புற்று புகுந்த பொல்லா அரவும்
சற்றே தயங்கும் இச்செயல் செய்ய!
கற்புக் கரசி காதல் மனையினைப்
பொற்பும் புவியும் புகழும் காத்திடும்
இராமனின் பாணம் இருக்கும் இடம்எது?
வாலியின் மார்பா? இராவணன் நெஞ்சா?
அறத்தை மறந்த அரக்கனின் நெஞ்சுள்
சீதையைத் தேடித் திரிந்திடும் பாணம்,
வானம் அளாவிய ஆண்மையின் வடிவில்
வீரப் பொலிவில், தவத்தின் மேன்மையில்
சிறியன நினையாச் சிந்தையா தேடும்?
இராவணனை வென்றவன் கார்த்த வீரியன்
கார்த்தனைக் கொன்றவன் பரசு ராமன்.

ப்ரசு ராமன் கர்வம் பறித்தது
இராமன் காட்டிய இணையிலா வீரம்
இந்த இராமனுக்(கு) இணையா வாலி?
முந்தைத் தவத்தால் முடியா தென்றால்
தந்தையின் தோழனை அனுகிடத் தயக்கமேன்?
அந்த இராவணன் அங்கதன் மகிழப்
பத்துத் தலைகள் படர்ந்த பீச்சியாய்த்
தொட்டிலின் மேலே தொங்கிய துண்டோ!
எல்லை கடந்த இராம நாயகன்
கொல்லை வழியாய்க் குறுக்கே வந்ததேன்?
இத்தனை எண்ணினான் வாலியாம் இமயம்
உதிரப் பெருக்கால் உடம்பெலாம் குளித்தும்
இதமாய் இன்னுயிர் ஏகத் துடித்தும்
பெருமையாய் நினைத்தது பிழையிலா நெஞ்சம்
சிறுமையே காணாச் செம்மையில் செழிப்பில்
சிறுமை எப்படி சேர்ந்தது என்றே
சிரித்தன விழிகள், சிந்தின மொழிகள்
மாபெரும் நாயகன் மண்ணைப் பார்க்கிறான்
வாலியாம் வானரம் விண்ணென உயர்கிறான்
"ஈதென் கொடுஞ்செயல் இழைத்தாய் இராமா!
ஏது பாதகம் எண்ணினேன் உனக்காம்!
என்ன வாயினும் நாங்கள் விலங்கினம்
விலங்குக் கேது விதிகளும் நெறிகளும்!
நாடாளும் சட்டங்கள் காடாள முடியுமா?
தம்பியின் தாரத்தைக் கவர்ந்தது பிழையெனத்
தண்டனை செய்ய வந்தாய் என்னிலோ,
மனித தர்ம மாட்சி எதுசொல்?
முகம்முகம் எதிர்ப்பதா? முதுகில் அறைவதா?
புகழா மரத்தின் பின்னே புதைவது?
அன்றொரு நாளில் அயோத்தி மன்னன்
கன்று மகனைக் காணாமல் கொன்றான்
இன்றோ அவன்மகன் ஒளிந்து கொல்கிறான்
கொல்ல முனைந்தது கொலைக்கரம் அல்ல!
நல்லதே நினைத்து நீதியே நாட்டிச்
சொல்லால் சுவையும் செயலால் சுகமும்
அல்லதே கொள்ளாச் செங்கோல் அணைந்தது
செங்கோல் வளைந்ததே! சீலனே, இராமன்!
விதியின் பிழையால் காட்டுக்கு வந்தாய்!
இதற்கெது காரணம்? எடுத்துக் காட்டுக!
மானுட நேயம் மண்ணுயிர் நேயம்
ஆனெனும் மேன்மையின் அழகும் வடிவமும்
சிறியன செய்யாச் சிந்தையின் வனப்பும்
இராம சோதியில் எங்கே ஒளிந்தது?
தர்மத்தைச் சூது கவ்வலாம், ஆனால்
கர்ம வீரன் இராமனைக் கவ்வலாமா?
இப்பிழை எப்படி விளைந்தது, இராமா!
ஏன், ஏன்? எனக்கேட் காமல் கேட்டான்
வான்அறம் பிழைத்தும் பிழையாத வானரம்
இந்தக் கேள்விக்கு எவர்விடை தருவார்?
கேள்வியும் விடையும் ஆனவன் இராமன்
வாளா நிற்கிறான் வாய்ச்சொல் இழந்தே
இளைய பிரானோ இதமிலாத் தத்துவம்
ஏதோ சொல்கிறான், இழைத்த பிழையோ
குன்றென அங்கே கூவி நின்றிடும்
காற்றும் நின்று கலங்கிக் கேட்டும்
போற்றும் வானும் கதிரெனும் பொலியும்
வாரி வழங்கும் வள்ளலாம் முகிலும்
கோரிய கடமை கொடுக்க மறந்தன!
சத்திய சீலம் தர்மம் நீதியை
வித்தகம், வீரம், பிறப்பின் மேன்மையை
வாலியின் சொல்லே காக்கக் காண்கிறோம்
பொய்யிலா வேதப் புத்தகம் திறந்ததாய்
மெய்யே வடிவினன் நினைக்கிறான், சொல்கிறான்,
என்னுயிர்த் தோழன் தயரதன் மைந்தா!
பன்னலம் பழகும் பார்வை இழந்தனை
காக்கும் கரங்களில் தூக்கினாய் கள்ளம்
வாக்கும் மனமும் வளைந்து நிற்கிறாய்
எண்ணிப் பார்க்கிறேன் ஈதெலாம் நாடகம்!
மண்ணில் தெய்வ வடிவை மாற்றினாய்
மானிட னாகினாய் மா,பகை முடிக்கத்
தப்புத் தாளம் தரைவாழ் மனிதன்
குப்பை ஒதுங்கும் கோபுரம் ஆயினும்
மலையென மறிகடல் பெருக்கென உயர்ந்தும்
நிலையில் மனிதனாய் நிற்கப் பார்க்கிறாய்
காதல் துணையைக் கானகம் விழுங்கிட
வேதனைத் தீயில் வெந்தாய், நொந்தாய்
அரற்றினாய், புலம்பினாய் ஆறாத் துயரால்
தாரம் பிரிந்த தவிப்பில் துடித்து
வீரம் சோர விட்டனை, இராமா!
ஏழை மனிதன் என்னும் உண்மையைப்
புவி, வான் இன்று புரிந்து கொண்டது
இனித் தடையிலை இராவணன் மாள!
மறைந்து செய்த வாலியின் மரணம்
சிறந்த முடிவில் சேர்ந்திடும் என்றால்
அரக்கர் கொடுஞ்செயல் அகற்றிடும் என்றால்
வாலி ஏற்கிறான்! சமர்ப்பணம், இராமா!
இன்னொரு வரம்கொடும், இளையோன் சுக்ரீவன்
எளியன் ஒருநாள் இழைக்கலாம் ஓர்பிழை
என்ன செய்யினும் என்உடல் இரத்தம்
மூத்தோன் உதிரம் முயங்கிய அம்போ
இளையோன் இன்னுயிர் எடுக்க விடாதே!
மாதண்ட மாபிய கோதண்டம் என்றும்
பாதகர் பக்கமே வளையட்டும், பாலகா
நூலை ஆய்ந்தும் நுகர்ந்தும் மிகுந்தும்
பாலக னாயினாய்ப் பரம்பொருள் சோதியே!
குழந்தையின் மீது கோபம் கொள்வதா?
உதைத்த காலுக்கு முத்தம் இடுகிறேன்
என்றான் ஓங்குயர் குன்றெனும் வாலி!
சிறியன நினையாச் சிந்தையில் என்றும்
கரியன கொடியன காணா நெஞ்சினுள்
பொங்கிய குருதி பூரித் தெழுந்தது
குருதி குடித்த இராம பாணம்
பெருமகன் உயிரை இழந்தது மெள்ள
வாலியின் மொழியில், வழியில், முடிவில்
அண்டம் அளாவிய இராமனும் கண்டான்
ஓ..கம்பா! உன்னதப் படைப்பின் உச்சியாம்
காவிய நாயகன் ஓவியம் கலைய
சின்ன வானரம் வண்ணம் தீட்டினாய்
ஆமாம், அண்ணலே! அன்னவன், வாலி
சிறியனச் சிந்தியான் என்பது தானே!

# ஆசிரியப்பா

கவிஞர் தே. சனார்த்தனன், புதுவை.

பா வகைகள் நான்கு வகைப்படும். வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா அவையாகும். தொல்காப்பியர், ஆசிரியம், வெண்பா, கலி, வஞ்சி என முறைப்படுத்திக் கூறியுள்ளார்.

- தொல். செய். 199

ஆசிரியப்பா, அகவல் என்றும் ஆசிரியம் என்றும் அழைக்கப் படும். 'யாப்பருங்கலம்' அகவல் எனவும், 'யாப்பருங்கலக் காரிகை' ஆசிரியப்பா எனவும் கூறுகின்றன. இவ்விரு நூற்களையும் 'அமிர்தசாகரர்' எனும் புலவர் ஒருவரே இயற்றியுள்ளார்.

பா வகைகள் நான்கு என்ற போதிலும், ஒருசாரர் மருட்பா என்ற பாவமைப்பைச் சேர்த்துப் பாக்கள் ஐந்து வகைப்படும் என்பர்.

ஆசிரியப்பா பாடுதற்கு எதுகை, மோனை, இயற்சீர், அளவடி, ஏகாம் முதலானவற்றைத் தெரிந்திருந்தாலே போதும். மிக எளிதாகப் பாடி விடலாம்.

**1. எதுகை மோனை :** எதுகையும் மோனையும் கவிதைக்கு இரு கண்கள் போன்றவை. முதல் சீரின் முதல் எழுத்து மற்ற சீர்களுக்கு ஒத்துவருமாயின், அது மோனை! முதல் சீரின் இரண்டாம் எழுத்து, அடுத்துவரும் சீர்களிலோ அல்லது அடிகளிலோ ஒத்து இருக்குமாயின், அது எதுகை!

**2. இயற்சீர் :** நேர் நேர் - தேமா; நிரை நேர் - புளிமா; நேர்நிரை - கூவிளம்; நிரைநிரை - கருவிளம் என்பன ஈரசைச் சீர்களின் வாய்பாடுகளாகும். ஈரசைக்சீர் இயற்சிர் எனப்படும். அதுவே, ஆசிரிய உரிச்சீராகும்.

**3. அளவடி :** இருசீர் கொண்டது குறளடி. முச்சீர் கொண்டது சிந்தடி. நாற்சீர் கொண்டது அளவடி. ஐஞ்சீர் கொண்டது நெடிலடி. ஆறுசீரும் அதற்கு மேற்பட்ட சீரும் உடைய அடி கழிநெடிலடி. ஆசிரியப்பாவுக்கு உரிய அடி அளவடியாகும். அளவடி, நேரடி எனவும் பெயர் பெறும்.

**4. ஏகாரம் :** ஒரு பாடலின் இறுதிச்சீர் 'வாழ்க' என்பதற்குப் பதிலாக 'வாழ்கவே' என்று முடிந்திருக்குமாயின், அந்தப் பாடல் ஏகாரத்தால் முடிந்துள்ளதை அறியலாம்.

கருத்துக்களைத் தெளிவாகக் கூறுதற்கும் எளிமையாகப் பாடுதற்கும் ஏற்றது ஆசியப்பாவே! இதை, ஆசிரியப்பா என அழைப்பதைவிட அவசரப்பா என்றே அழைக்கலாம். ஏனெனில் அவ்வளவு விரைவாகப் பாடக் கூடியது.

இனி, ஆசிரியப்பா வகைகளையும் இனங்களையும் பார்ப்போம்!

**ஆசிரியப்பாவின் வகை!**

நிலைமண்டிலவாசிரியப்பா, நேரிசையாசிரியப்பா, இணைக்குறளாசிரியப்பா, அடிமறி மண்டிலவாசிரியப்பா ஆகிய நான்கும் ஆசிரியப்பாவின் வகைகளாகும்.

**நிலைமண்டிலவாசிரியப்பா!**

எல்லா அடியும் அளவடியாக வருவது நிலைமண்டில ஆசிரியப்பா. அது, 'என்' என்று முடிந்தால் சிறப்பு. ம், ன் எனவும் சிறுபான்மை முடியும்.

**நேரிசையாசிரியப்பா!**

எல்லா அடியும் அளவடியாக வந்து, ஈற்றயலடி மட்டும் சிந்தடியாக வருவது நேரிசை ஆசிரியப்பா. அது, ஏகாரத்தால் முடிந்தால் சிறப்பு.

**இணைக் குறளாசிரியப்பா!**

முதலடியும் ஈற்றடியும் அளவடியாக வந்தும், ஈற்றயலடி சிந்தடியாக நின்றும், இடையிடையே குறளடிகள் கலந்தும், ஏகாரத்தால் முடிந்தும் வருவதே இணைக்குறள் ஆசிரியப்பா.

**அடிமறிமண்டிலவாசிரியப்பா!**

எல்லா அடியும் அளவடியாக வருவதும், ஒவ்வொரடியிலும் பொருள் முற்றுப் பெறுவதும், எந்த அடியை எங்கு (முதல், இடை, கடை) வைத்துப் பார்த்தாலும் பொருள் மாறுபடாமல் இருப்பதும் அடிமறி மண்டில ஆசிரியப்பா.

இரண்டடிதோறும் எதுகை அமையும் ஆசிரியப்பாக்களில் அடிதோறும் முதல் சீரிலும் மூன்றாம் சீரிலும் மோனை அமைய வேண்டும். அவ்வாறு அமையும் மோனை, பொழிப்பு மோனை எனப் பெயர் பெறும்.

அடிதோறும் முதல் சீரிலும் மூன்றாம் சீரிலும் எதுகை அமையும் ஆசிரியப்பாக்களில் இரண்டடிதோறும் எதுகையோ அடிதோறும் மேனையோ அமைய வேண்டுவதில்லை. அப்படி 1, 3 ஆம் சீர்களில் அமையும் எதுகை, பொழிப்பெதுகை எனப் பெயர் பெறும்.

அடியெதுகையும் அடிதோறும் மூன்றாஞ்சீர்களில் மோனையும் ஆசிரியப்பாவின் தொடை அழகுகளாகும்.

ஆசிரியப்பாவின் சிறுமை மூன்றடி; பெருமை அளவில்லை எத்தனை அடிகளேனும் எழுதலாம். ஆனால், தொல்காப்பியம் மூன்றடிச் சிறுமையும் ஆயிரமடிப் பெருமையும் உடையது ஆசிரியம் என அறுதியிட்டுக் கூறுகிறது. தொல். செய். 203

ஆசிரியப்பாவில் ஈரசைச்சீர் வரும் என்பதை முன்னரே பார்த்தோம். அரிதாய் வெண்பா உரிச்சீராகிய காய்ச்சிர் வரலாம். நிரைநடுவாகிய வஞ்சியுரிச்சீர் (கூவிளங்கனி, கருவிளங்கனி) மட்டும் ஆசிரிப்பாவில் வரவே கூடாது.

பெரும்பாலும், நேரொன்றாசிரியத் தளையும் நிரையொன்றா சிரியத் தளையும் பெற்று வரும் சிறுபான்மை பிற தளைகளும் கலந்து வரலாம்.

**அகவலோசை!**

ஒவ்வொரு பா வகைக்கும் ஒவ்வொர் ஓசை உண்டு. வெண்பா செப்பலோசையும், ஆசிரியப்பா அகவலோசையும், கலிப்பா துள்ளலோசையும், வஞ்சிப்பா தூங்கலோசையும் கொண்டவை.

ஏந்திசை அகவல், தூங்கிசை அகவல், ஒழுகிசை அகவல் என அகவலோசை மூன்று வகைப்படும்.

**1. ஏந்திசை அகவல்.**

"எல்லை தன்னை என்றுங் காப்போர்
தொல்லை கண்டும் தூங்கு வாரோ?"

நேர் நேராக வருதல் (தேமா)
நேர் ஒன்றாசிரியத் தளையால் வருவது.

**2. தூங்கிசை அகவல்**

" ஒழுக்கமும் அடக்கமும் உயிரென நினைப்பவர்
இழுக்குகள் மறைந்திட இனிமைகள் பெறுவரே!"

நிரை நிரை நிரை நிரை என்றே வருவது (கருவிளம்)
நிரை ஒன்றாசிரியத் தளையால் வருவது.

**3. ஒழுகிசை அகவல்**

"அன்புடன் அருளும் ஆட்சிகொண் டாலே
இன்பமே மலரும் இன்னலோ மறையும்!"

நேர் நிரையும் நிரைநேரும் கலந்து வருவது.
ஒழுகிசை அகவலே உயர்வானது!

1. அகநானூறு
2. புறநானூறு
3. நற்றிணை
4. குறுந்தொகை
5. ஐங்குறுநூறு
6. பதிற்றுப்பத்து
7. திருமுருகாற்றுப்படை
8. பொருநராற்றுப்படை
9. பெரும்பாணாற்றுப்படை
10. சிறுபாணாற்றுப்படை
11. முல்லைப் பாட்டு
12. மதுரைக் காஞ்சி
13. நெடுநல் வாடை
14. குறிஞ்சிப் பாட்டு
15. பட்டினப்பாலை
16. மலைபடுகடாம்
17 சிலப்பதிகாரம்
18. மணிமேகலை
19. பெருங்கதை
20. தகடூர் யாத்திரை
21. திருவாசகக் கீர்த்தித் திரு அகவல்
22. திருவண்டப் பகுதி
23. போற்றித்திருவகவல்
24. பட்டினத்தார் கோயிற்றிருவகல்
25. விநாயகரகவல்
26. கபிலரகவல்

முதலின பிற்கால ஆசிரியப்பாக்கள். பழந்தமிழ் நூல்களின் பாடல்கள் ஆசிரியப்பாவால் ஆனவை.

புறநானூறு, அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பத்துப்பாட்டு முதலிய நூல்களின் ஆசிரியப்பாக்கள் ஏகாரத்தால் முடிந்த நேரிசையாசிரியப்பாக்களாகும். புற நானூற்றில் பல இணைக்குறள் ஆசிரியப்பாக்களும் உள்ளன.

சிலப்பதிகரம், மணிமேகலை, உதயணன் கதை இவற்றின் ஆசிரியப்பாக்கள் 'என்' என்று முடிந்த நிலைமண்டிலவாசிரியப் பாக்களாகும்.

'என்' என்னும் அசையால் முடிதல் பழைய மரவு! ஏகாரத்தால் முடிவதே பெருவழக்கு! இன்றைய வழக்குமாகும்.

**ஆசிரியப்பாவின் இனம்!**

ஆசிரியத் தாழிசை, ஆசிரியத்துறை, ஆசிரிய விருத்தம் ஆகிய மூன்றும் ஆசிரியப்பாவின் இனங்களாகும்.

**ஆசிரியத் தாழிசை!**

அளவொத்த மூன்றடிகளால் வருவதும், மூன்றடிகளும் ஒரேதுகை பெற்றுவருவதும் ஆசிரியத் தாழிசையின் சிறப்பு! ஓரடியில் எத்தனை சீரும் எவ்வகைத் தளையும் வரலாம் என்பது விதிவிளக்கு! ஒரு பொருள் மேல் மூன்றடுக்கிவந்த தாழிசைகள் சிறப்புடைத்து.

**ஆசிரியத்துறை!**

நான்கு அடி கொண்டதும், நான்கு அடிகளுக்கும் ஒரே எதுகை உள்ளதும், ஏகாரத்தால் முடிவதும் ஆசிரியத்துறை இது, நான்கடியாய் - ஈற்றயலடி குறைந்து வருவனவும், நான்கடியாய் - ஈற்றயலடி குறைந்து இடைமடக்காய் வருவனவும், நான்கடியாய் - இடையிடை குறைந்து வருவனவும், நான்கடியாய் - இடையிடை குறைந்து இடைமடக்காய் வருவனவும் ஆசியத்துறை எனப்படும்.

**ஆசிரிய விருத்தம்!**

ஐந்து சீர்களுக்கு மேற்பட்ட கழிநெடிலடி நான்கு, தம்முள் அளவொத்து வருவன ஆசிரிய விருத்தமாகும்.

முற்காலத்தில் பலவகை விருத்தங்கள் இருந்தன. அவற்றில் பல வழக்கொழிந்தன. தற்போது சில விருத்தங்களே பாவலர்களுக்குத் துணை புரிகின்றன.

அவை, அறுசீர் விருத்தம், எழுசீர்விருத்தம், எண்சீர் விருத்தம் பண்ணிரு சீர் விருத்தம், பதினான்குசீர் விருத்தம் முதலியனவாகும்.

## வியன்தமிழ் பெருமை காண்போம்!

கவிஞர் துரை. மாலிறையன், புதுச்சேரி.

கார்பூத்த விண்ணில் செய்ய
கதிர்பூத்து விளங்கு தல்போல்
போர்பூத்த புதுவை மண்ணில்
பெரும்புகழ் பூத்து நிற்கும்
சீர்பூத்த பாவேந் தற்கும்
செந்தமிழ் உளத்தில் பூக்கப்
பார்பூத்த கம்பன் தன்னைப்
பயன்பூக்கக் கருத்துள் வைப்போம்!

என்றுமே நிலைக்கும் எங்கள்
இசைகொண்ட தமிழ்த்தாய் வாழ்த்திச்
சென்றுமேல் ஏறி நிற்பான்
செழுங்கம்பன்; அவனைப் பாடி
வென்றுமே தினியில் நாமும்
வியன்தமிழ்ப் பெருமை காண்போம்
குன்றுமேல் ஒளிரு வோனைக்
கொண்டுளத்(து) திருத்த லாலே!

காவிரி பெருமை பாடும்
கவின்தமிழ் மறவன்; இன்பப்
பாவிரி கின்ற நாடில்
பயன்விரித் திடவே வந்தோன்;
பூவிரி மணம்கொள் கின்ற
புகழ்விரி விருத்தப் பாவல்
நாவிரித் தேத மிழ்க்கு
நலம்விரித் தோனைப் பூண்போம்!

கம்பனால் இராமன் கொண்டான்
கலைப்புகழ்; செந்த மிழ்த்தாய்
செம்பொனால் மணிப தித்தச்
சீர்மிகும் அணிகள் பெற்றாள்;
நம்பி(ன்)னால் வருவோர் எல்லாம்
நலத்தமிழ் பெறுவார்; அந்தத்
தெம்பினால் அவனை நந்தம்
திகழ்கரும்(து) திருத்து வோமே!

திராவிடப் பெருமை வீசும்
திரைகடல்; தமிழர் என்றும்
பராவிடப் பசுமை கூட்டிப்
பைந்தமிழ் கொடுத்தான்; கம்பன்
இராவிடம் தமிழே இல்லை.
இதயத்தில் இலங்கை அன்னோன்
விராவிடில் கவிதை ஏது?
வாழ்த்துவாம் கருத்துள் வைத்தே!

கவிஞர் கி.பாரதிதாசன், பிரான்சு.

முன்னைத் தமிழின் புகழ்கூறி
முப்ப(து) ஆண்டாய்த் தொண்டாற்றும்
சென்னைக் கம்பன் கழகத்தார்
சீரார் செயலைப் போற்றுகின்றேன்!
என்னை மறந்தே வியக்கின்றேன்
எல்லாம் கம்பன் திருவருளே!
மன்னும் உலகில் கம்பன்சீர்
வளர்ந்து செழிக்க வேண்டுகின்றேன்!

புதுவைப் புலவோர் புலமைக்குப்
புவியில் இணையாய் ஒன்றுண்டோ?
மதுவைப் போன்று மயக்கும்அவர்
வடிக்கும் தமிழோ கற்கண்டாம்!
எதுகை, மோனை, இயைபுகளும்
இருக்கும் பாட்டைச் சுவைத்திங்கே
இதமாய்க் கம்பன் விழாவெடுத்த
இனியோர் தமக்கே என்வணக்கம்!

அம்மா அப்பா அருமைகளை
அண்ணன் தம்பி பெருமைகளை
இம்மா நிலத்தின் மாந்தரெலாம்
இனிதே அறியச் செய்திட்ட
பெம்மா னாகி, ஈடில்லாப்
பிறவிக் கவிஞன் எனத்திகழும்
கம்பன் அடியைத் தலைமேலே
காத லாலே சுமக்கின்றேன்!

இடரைப் போக்கும் வழிகளையும்
இனிதாம் வாழ்வின் நெறிகளையும்
தொடரும் வண்ணம் கம்பனவன்
துணையாய் நின்றே அளிக்கின்றான்!
கடலைக் கடந்து நம்கம்பன்
காலம் அறிந்தே வந்ததனால்
உடலும் உயிரும் கம்பனென்றே
உவந்து நின்றார் உயர்ந்தாரே!

நஞ்சாம் போதைப் பொருட்களையே
நாளும் கடத்தி வாழ்பவரும்
நெஞ்சைக் கவரும் மணிவகையை
நிறைய கடத்தி உயர்பவரும்
பஞ்சாய்ப் பறந்து பலப்பலவும்
பாரில் கடத்தி மகிழ்பவரும்
கொஞ்சு தமிழைக் கடல்கடந்து
கொண்டு செல்ல வருவாரோ?

கதையும் நல்ல கற்பனையும்
காதல் சிறப்பும் கவிநயமும்
நதியாய் ஓடும் சொல்லழகும்
நலஞ்சேர் தமிழின் அணியென்றே
மதியை வளர்த்து மானுடரின்
மாண்பை விளக்கிக் காட்டுகின்ற
புதுமை நிறைந்த காவியத்தைப்
புகன்றே கம்பன் பொலிகின்றான்!

கவிதை யாவும் தித்திக்கக்
கம்பன் படைத்தான் காவியமே!
புவியோ ரெல்லாம் விருப்பமுடன்
போற்றிப் போற்றிப் படித்திடுவார்!
சுவைஞர் தம்மை ஆட்கொண்ட
தூய நூல் ராமாயணமே!
அவையில் உண்மை உரைக்கின்றேன்
அடியேன் தொழுதல் கம்பனையே!

அயலார் நாட்டில் வாழ்தமிழர்
அரிதாம் அமிழ்தை அருந்திடவும்
புயலாய்க் கிளம்பித் தாக்குகின்ற
புல்லர் நெஞ்சம் திருந்திடவும்
இயலாய் - இசையாய் - எழிற்கூத்தாய்
இனிக்கும் தமிழைப் பரப்பிடவும்
உயர்வாய்க் கம்பன் காவியமே
ஒளிரும் அய்யா கடல்கடந்தே!

எங்கும் போரின் முழக்கங்கள்
எல்லாத் திசையும் வன்முறைகள்
தங்கும் பொல்லா மதவெறியால்
தவிக்கும் உலகைக் காண்கின்றோம்!
பொங்குந் தமிழில் கம்பனவன்
புனைந்த கவிகள் யாவிலுமே
மங்கா மனித நேயந்தான்
மாண்பார் தமிழர் மூச்சாகும்!

அன்பின் ஆழம், அரும்நட்பின்
ஆற்றல், சூழும் உயர்மாண்பு,
பண்பின் மேன்மை, நற்பணிவால்
படரும் இனிமை இவையாவும்
இன்பம் கொடுக்கும்! தூயவுளம்
இடரைத் துடைக்கும்! எனஓதிப்
பொன்னார் கம்ப நாடனவன்
புகழைச் சேர்த்தான் கடல்கடந்தே!